ரீ வெளியீடு : 6 பதிப்பாசிரியர் : பி. ஸ்ரீ.

# ஹாஸ்ய நாடகங்களும் கட்டுரைகளும்

V. C. கோபாலரத்தினம், பி. ஏ., பி. எல்.,

கிருஷ்ணஸ்வாமி, ஐ. ஸி. எஸ்., எழுதிய முன்னுரையுடன்

436



"இருள் அகற்றும்
கைவிளக்கே கற்ற அறிவுடைமை"

தினமணி காரியாலயம்
100, மவுண்டு ரோடு
சென்னை
1944

 [விலை ரூ. 2

# பொருள் அடக்கம்

ஸ்ரீ எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி, ஐ. ஸி. எஸ்.
எழுதிய



# முன்னுரை

சில நாட்களுக்கு முன் ஸ்ரீமான் கோபாலரத்தினம் எழுதிய 'ஸங்கீதப்ரியன்' என்ற ஹாஸ்ய நாடகத்தை நான் ரேடியோவில் கேட்டேன். கேட்டதும் கேட்காததுமாய் இவரிடம் ஓடிச்சென்று 'உங்கள் நாடகங்களையும் கட்டுரைகளையும் புஸ்தகமாக வெளியிட வேண்டும்' என்று கூறினேன். அதற்குத் தாம் ஏற்கெனவே ஒரு புஸ்தகத்தில் அடங்கும் வண்ணம் சில நாடகங்களையும் கட்டுரைகளையும் தயார் செய்து வைத்திருப்பதாயும், அதற்கு நான்தான் முகவுரை எழுத வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். இதுதான் இந்த முகவுரையின் வரலாறு! ஸமீபத்தில் இந்தப் புஸ்தகத்தைப் படித்துப் பார்த்ததும், பல நாள்-நண்பரான கோபாலரத்தினம் பிரபல வக்கீல், கம்பீரமான குரலில் பாடுவார், ருசி அறிந்து உண்பார், நாடக மேடையில் நேர்த்தியாக நடிப்பார், எப்பொழுதும் வேடிக்கையாகப் பேசுவார் என்றெல்லாம் அறிந்திருந்தோமே அன்றி, இவர் அழகாகத் தமிழ் எழுதுவார், உலகில் நடக்கும் விந்தைகளைக் கண்ணாடியில் எடுத்துக் காண்பிப்பார், என்று தெரிந்து கொள்ளவில்லையென்பது விளங்கிற்று. சிறிது ஆலோசித்துப் பார்க்கும்பொழுது இவருடைய ஹாஸ்யத்தைப் பற்றியும், நகைச் சுவையின் தன்மையைப் பற்றியும் சிற்சில அபிப்பிராயங்கள் தோன்றின.

கடவுள் மனிதருக்கும் மிருகங்களுக்கும் இடையே பலவிதமான வேற்றுமைகளையும் சில ஒற்றுமைகளையும் படைத்திருக்கிறார். மிருகங்களுக்கு அபாரமான நன்றியுண்டு. அவை அன்பிற்கும் ஆசைக்கும் ஈடுபட்டவை. காரணமின்றிக் கலகம் செய்யும் இயல்பு அவைகளுக்குக் கிடையாது. பசியினால் வருந்தினாலொழிய வேறு

மிருகங்களை வேட்டையாடுவது வழக்கமில்லை. இவ்வளவு நற்குணங்களைக் கடவுள் மிருகங்களுக்குக் கொடுத்து விட்டு, சில மனிதருக்கு மிருகங்களின் அழகையும் குரலையும் மாத்திரம் கொடுத் திருப்பதொரு விந்தை! ஆனால் ஒரு திறமை மட்டும் மனிதரிடையே தான் இருக் கிறது. மிருகங்களுக்கு நகைக்கும் திறமை கிடையாது. ஏளனத்திற்கும் நகைப்பிற்கும் இடமான பல காரியங்களை மனிதரே செய்வதால் மிருகங்களுக்கு நகைப்புத் தேவை யில்லை யென்று கடவுள் எண்ணி யிருக்கக்கூடும்! இதர ஜங்கமங்களிலிருந்து வேற்றுமைப் படுத்திக் கவனித் தால், மனிதரை 'நகைக்கும் ஜந்து' வென்று கருதுவது பொருத்தமாக இருக்கிறது!

நகைப்புப் பலவிதம். உள்ளிருந்து ஊறும் ஸந்தோ ஷத்தில் கண் இமைமட்டும் அசையக் கன்னமும் சிறிது குழியச் செய்யும் புன்னகை ஒரு எல்லை. அடித் தொண்டையிலிருந்து அருவிபோல் அலறுவது மற் றொரு எல்லை. இவை எல்லாவற்றிற்கும் காரணம் மாத்திரம் ஒன்றே. 'நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைப்பது' தான் ஹாஸ்யத்திற்கே காரணம். எதிர் பாராமல் ஒன்று நிகழ்வதும், மறதியில் ஒன்றுக் கொன்றைச் செய்வதும், அர்த்தமில்லாமல் பேசுவதும் நகைப்பைத் தரும். அழகிய பெண் வருவாளென்று கதவைக் கவனித்துக் கொண்டிருக்கும் பொழுது உள் ளிருந்து ஒரு நாய் ஓடி வரும். எதையோ சிந்தித்துக் கொண்டு ஒருவர் குடையைத் தபால் பெட்டியில் போட்டு விட்டுக் காகிதத்தைத் தலைமேல் பிடித்துக் கொள்வார். இவை ஒரு விதம். சிலர் தம்மை யறியாமல் பிதற்று வார்கள். புதிய மனிதர்: "அப்பா, இது நாட்டுப்புற மனிதன் எந்த ஊர்?" "அதென்ன, அப்படிக் கேக்குறீங்க, சாமீ, இது இந்த ஊருதானுங்கோ." காபி ஹோட்டலில் பெரிய மனிதர்: "தம்பீ, நெய் போடாமல் ஒரு தோசை கொண்டுவா." பையன் உள்ளே போய் வெளியே வந்து, "ஐயா, நெய் இல்லையாம்; எண்ணெய் போடாமல் ஒரு தோசை கொண்டு வரட்டுமா!"

வீண் வேடிக்கைக்கும் 'வாக் சாதுரியத்தி'ற்கும் வித்தியாசம் உண்டு. வேடிக்கை சிரிப்பை மூட்டும். கூர்மையான பேச்சு வேடிக்கையுடன் கலந்தால், கேட்கும் பொழுதும் நினைக்கும் பொழுதும் புன்சிரிப்பைத் தரும். இந்த மாதிரிப் பேசுவதில் மலையாளத்தில் *நம்பூத்ரிகளும் தமிழ் நாட்டில் சோழமண்டல வாசிகளும் கைதேர்ந்தவர்கள்.

முதல் குடிகாரன்: "இது சந்திரன்."

இரண்டாவது குடிகாரன்: "இல்லை, இது சூரியன்."

இருவரும், "சரி, இதோ வரும் நம்பூத்ரியைக் கேட்போம்."

நம்பூத்ரி பார்த்தார். சூரியனென்றால் ஒருவனிடம் சண்டை. சந்திரனென்றால் மற்றொருவனிடம் சண்டை. சிறிது யோசித்து, "நான் இந்த ஊர் அல்ல. வெளியூர்" என்று விட்டுப் போனார்!

ரஸிகர்: "பாகவதரவாள், என்ன போன வருஷத்துக்கு இந்த வருஷம் உங்கள் வாசிப்பு அபாரமாக இருக்கே."

வித்வான்: "அப்படிச் சொல்லப்படாது. நான் எப்பொழுதும் இப்படித்தான் இழுத்துக் கொண்டிருக்கேன். அவ்விடத்திலெ ஞானம் ஜாஸ்தியாய் வருகிறது."

வேடிக்கையும், கூர்மை வார்த்தையும் மட்டு மின்றி, உயர்தர ஹாஸ்யம் எப்பொழுதும் ஒரு சிறிது சோகத்துடன் கலந்திருக்கும். சோகரஸம் ஹாஸ்யத்திற்கு இன்றியமையாதது. ஸால்தான்பேட் மாஜிஸ்ட்ரேட் செய்யும் அட்டகாஸத்திலிருக்கும் வேடிக்கையும், இவர் கடைசியில் அகப்பட்டுக் கொள்ளும் தறுவாயிலிருக்கும் சோகமும், "பதவி வந்தவுடன் குதிக்கிறான், பைத்தியக்காரன்' என்று நாம் அறிந்து கொள்ளும் தாத்பரியமும், ஒன்றோடொன்று தழுவியே யிருக்கின்றன. அது போலவே ஜமீந்தார் சாவாரா என்று கழுகு போல் காத்

திருக்கும் சுற்றத்தாரை நினைக்கும் பொழுது வருத்தமும் சிரிப்பும் கலந்துதானிருக்கிறது.

**ஸ்ரீமான் கோபாலரத்தினம்** எழுதிய நாடகங்களில் ஹாஸ்யத்திற்கு வேண்டிய மேலே சொன்ன மூன்று அம்சங்களும் பொருந்தி யிருக்கின்றன. வேடிக்கையான எதிர்பாராத நிகழ்ச்சிகளும், புத்திக் கூர்மையான பேச்சுகளும், ஹாஸ்யத்துடன் சோகமும் கலந்து, படிக்கும் பொழுது நகைப்பையும், ஆலோசனை செய்யும் பொழுது மனிதரின் பேதைமையைக் குறித்துச் சிறிது வருத்தமும், கொடுக்கின்றன.

“ஐயோ, கடவுளே” என்ற கட்டுரை நன்ருக்க் கவனிக்கத் தக்கது. “கடவுளுக்கு ஓய்வு கிடையாது. பக்தருடைய விருப்பங்களை நிறைவேற்றக் கடமைப் பட்டவர். இது சுலபமல்ல, மிகவும் சிக்கலான வேலை!” என்னும் அபிப்பிராயத்தை மிகவும் வேடிக்கையாக **ஸ்ரீமான் கோபாலரத்தினம்** விவரித்திருக்கிருர். அனைவருக்கும் சட்டம் கற்றுக் கொடுத்தால் வரும் அநர்த்தங்களிலிருந்து அரை குறை அறிவினுல் வரும் அஸம்பாவிதங்களை அறிகிருேம்.

தமிழ் நாட்டில் சிறு நாடகங்கள் அதிகமாக இல்லை. ஒரு சிறிய விஷயத்தைச் சுற்றிச் சுற்றி ஆலாபனை செய்வது வேடிக்கை-வியாஸத்திற்கு அழகு. இத்தகைய வியாஸங்களை நமது தமிழ் நாட்டு வார சஞ்சிகைகளிலும் மாதாந்தர சஞ்சிகைகளிலும் வேண்டும். கன்றுக் குட்டிக் காதலும், பூஞ்சோலையும், உலகில் எங்கும் கேட்காத அசட்டு ஸம்பாஷணையும், இல்லாவிட்டால் வரட்டு வேதாந்தம், இவைகளை வைத்துக் கொண்டு நாம் மனதை வளர விடாமல் அரைச் சாப்பாடு போடுகிருேம். இந்தப் பாலைவனத்திற்கு நடுவில் பசும் புல் திட்டுப் போல் **ஸ்ரீமான் கோபாலரத்தினத்தின்** புஸ்தகம் மனதிற்குக் குளிர்ச்சியைத் தருகிறது.

மயிலாப்பூர்,<br>சென்னை,<br>21—1—'44.

**எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி**

# முகவுரை

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பே சட்டத் தொழிலில் முதன்மையான ஸ்தானத்தை யடைந்த ஸ்ரீ. வி. வி. ஸ்ரீனிவாஸையங்கார் (என் மாமனார்) அத்தொழிலுக்கே தம் மனோ வாக்குக் காயத்தை அர்ப்பணம் செய்துவிடாமல், தம் புத்தியையும் அனுபவத்தையும் பல ரஸமான வழிகளில் செலுத்தினார். தமது நிகரற்ற லௌகிக ஞானத்தை உபயோகித்து, உயர்தர நகைச்சுவை நிறைந்த சிறிய நாடகங்கள் பலவற்றை ஆங்கிலேய பாஷையில் அவர் எழுதியிருப்பதையும், பொது ஜனங்களுடைய மதிப்பை அவை அடைந்து பல இடங்களில் நடிக்கப்பட்டு வருவதையும் குறித்து நான் இங்கே குறிக்கவேண்டியது அநாவசியம். இந்த வெளியீட்டில் அடங்கிய முதல் மூன்று நாடகங்கள்—(1) சுல்தான் பேட்டை ஸப் அஸிஸ்டெண்டு மாஜிஸ்ட்ரேட்டு, (2) வர்ணக் கண்ணாடிகள், 3) ஒன்றை நினைக்கின்—அவர் எழுதிய சிறு நாடகங்களில் மூன்றைத் தழுவியே எழுதப்பட்டவை. அங்குமிங்கும் சில புதிய விஷயங்களைத் தொகுத்தும், தற்காலத்தின் போக்கை அனுஸரித்துச் சில மாறுதல்களை ஏற்படுத்தியும், நான் என் குருநாதன் ஆங்கிலேயத்தில் எழுதிய மேற்சொன்ன நாடகங்களைத் தமிழில் எழுதியிருக்கிறேன். நான் இழைத்த வேறுபாடுகளினால் அவருடைய மூல கிரந்தங்களுக்கு அதிகப் பழுது ஏற்படவில்லை யென்று நான் எண்ணுவதல்லாமல், அவரே நேராகத் தெரிவிக்கக் கேட்டுத் திருப்தியடைந்துள்ளேன். இந்த மூன்று நாடகங்களில் விளங்கும் அனேக சிலாகிக்கத் தக்க அம்சங்களுக்காக ஏற்படும் மதிப்பும் பாராட்டும் அந்தப் பெரியாருக்கே உரியன — குற்றங்கள், குறைகள், ரஸாபாஸங்கள் எவையேனும் காணப்படில் அவைகளுக்குப் பூர்ணமாய் நானே உத்தரவாதம்.

"பழமொழிகள்" என்னும் நாடகம் நான் சொந்தமாய்ச் சில வருஷங்களுக்கு முன் ரேடியோவில் பேசின விஷயத்தைத் தழுவியது. மற்றக் கட்டுரைகளும், கோர்ட்டு விநோதங்களும் முன்பே என் அருமை நண்பர் ஸ்ரீ **S. S.** வாஸன் நடத்திவரும் **"ஆனந்த விகட"**னென்னும் சிறந்த சஞ்சிகையில் அப்போதைக்கப்போது வெளிவந்தவை.

இந்தப் புஸ்தகத்தில் இவையனைத்தையும் ஒருங்கு சேர்த்து, ஒரு நகைச்சுவைத் திரட்டாக வெளியிட முன் வந்த பதிப்பாசிரியர் ஸ்ரீ. பி. ஸ்ரீ: ஆசார்யாவுக்கு நான் என்றும் கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்த வெளியீட்டுக்கு ஸ்ரீ. S. Y. கிருஷ்ணஸ்வாமி I. C. S. முன்னுரை எழுத உத்ஸாகத்துடன் உடன்பட்டார். ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி நல்ல ரஸிகர், நகைச்சுவை ததும்பப் பேசவும் எழுதவும் பெரும் சக்தி வாய்ந்தவர். மேல் நாட்டிலும் நம் நாட்டிலும் உயர்தரக் கலைகளின் உத்கிருஷ்டமான அம்சங்களை உண்மையாய் அனுபவித்து அறிந்தவர்—அவர் இந்தப் புஸ்தகத்துக்கு முன்னுரை எழுத உடன்பட்டதல்லாமல், அதில் என்னைச் சிலாகித்தும் பெருமைப்படுத்தியும் வரைந்திருப்பது நான் செய்த பெரும் பாக்யமென்றே கருதுகிறேன். இந்தப் புஸ்தகத்தைப் படிப்பவர் எந்த ஸந்தர்ப்பத்திலாவது ஒரு முறையேனும் வாயார நகைப்பார்களாயின், அதையே என் சிரமத்துக்கெல்லாம் ஏற்ற கைம்மாருகக் கருதுவேன்.

கடைசியாக ஒரு வணக்கமான அறிவிப்பு. இந்தப் புஸ்தகத்தில் எந்தப் பெயராவது, பாத்திரமாவது, உண்மையில் ஒருவரையும் குறிப்பிடுபவையல்ல. முழுதும் கற்பனைகளே. இதிலடங்கிய என் நாடகங்களை நடிக்க விரும்புவோர், முன்னதாகவே என் அனுமதியைப் பெற்ற பின்பே நடிக்கக் கூடுமென்றும், அவ்வாறு அனுமதி பெருமல் நடிப்பவர் நஷ்ட தாவாவிற்கும், தண்டனைக்கும் ஆளாவார்களென்றும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

லீலா நயனம்.
மயிலாப்பூர்,
19—9—44

வி. ஸி. கோபாலரத்தினம்.

# நாடக பாத்திரங்கள்

சேத்துப்பட்டுக் கிருஷ்ண சர்மா: சுல்தான் பேட்டையில் புதிதாக ஸப்-அஸிஸ்டெண்ட் மாஜிஸ்ட்ரேட் பதவி ஏற்றவர் (சர்மா)

கனகவல்லி: கிருஷ்ண சர்மாவின் மனைவி (கன)

ருக்மிணி: கிருஷ்ண சர்மாவின் தாயார் (ருக்)

சுல்தான்கான்: ஸப்-அஸிஸ்டெண்ட் மாஜிஸ்ட்ரேட் பியூன் (சுல்)

வீராசாமி: கிருஷ்ண சர்மாவின் வீட்டு வேலைக்காரன் (வீரா)

ராமா சாஸ்திரி: } இரண்டு வைதிகப் பிராமணர்கள் { (ராமா)
காமா சாஸ்திரி: } { (காமா)

முனியம்மாள்: கச்சேரி பெருக்கும் வேலைக்காரி (முனி)

முத்து: கச்சேரியில் வேலைசெய்யும் குட்டிப் பையன் (முத்து)

கோபாலையங்கார்: ஹெட் கிளார்க்கு (கோபா)

வேங்கடரமண ராவ்: } குமாஸ்தாக்கள் { (வேங்)
ஸ்ரீநிவாஸையர்: } { (ஸ்ரீநி)

ரகுபதி நாயுடு: பெஞ்சு கிளார்க்கு (ரகு)

டபேதார்: (டபே)

சுந்தரராஜையங்கார்: } வக்கீல்கள் { (சு. ரா. ஐ.)
நாராயண ராவ்: } { (நா. ராவ்)

கிருஷ்ண ராவ்: ஹோட்டல்காரர் (கி. ராவ்)

சுப்பையர்: பிராஸிகூஷன் இன்ஸ்பெக்டர் (சுப்)

642-ஆம் நெம்பர் கான்ஸ்டேபிள்: (642)

முத்துசாமிப் பண்டாரம்: பழ வியாபாரி (முத்)

மிஸ்டர் ராஜ்: ஜில்லா கலெக்டர் (ராஜ்)

மிஸஸ் சுந்தரி: கலெக்டர் மனைவி (சுந்)

போலீஸ் சேவகன் (சேவ)

## காட்சி 1

[சேத்துப்பட்டுக் கிருஷ்ண சர்மா சாப்பிட்டு விட்டுச் சமையலறையிலிருந்து வெளியே வருகிறார்.]

*சர்மா:—பயப்படுகிறவருக்கு ஜயம் கிடையாது என்பது வாஸ்தவமே.........யாரேனும் கனவிலும் நினைத்திருப்பார்களா?*

[கனகவல்லி பிரவேசிக்கிறள்.]

*கன :—நான்...நான் ராத்திரி ஒரு கனுக் கண்டேன்.*

*சர்மா :—உன் கனவைக் கொண்டு ஓடைப்புலே போடு... போ......என்னைத் தொந்தரவு பண்ண வராதே.*

*கன :—உங்களுக்கு என்ன? உடம்பு சரியா கிரியா இல்லையா என்ன? காச்சல் ஏதேனும் கண்டிருக்கா?*

*சர்மா:—ஆமாம், ஒரு மாதிரிக் காச்சல்தான். போ... போயேன்.*

*கன :—நான் மாத்தரம் நெனச்சேன்...உங்க அம்மா கிட்டே ... அப்டித்தான் இருக்கும்னு சொன்னேன். ஆனு உங்க அம்மா என்னை நம்புவளா?...இல்லாப் போனு பிராமணரா யிருக்கிறவர் பிளானல் சொக்காய் போட்டுண்டே சாப்பட ஒக்காருவரா— ஜொரமில்லாப்போனு?*

*சர்மா :—அடாடடா! ரொம்ப ஸரிதான். ஷெர்லக் ஹோம்ஸ் தான்...! போ தொலைஞ்சு. உள்ளே வேலையைப் பாரேன். நேத்துக்கூட அந்தப் பாத்தரங்களை நன்னுச் சுத்தி செய்யலே.*

*கன :—ஏனிப்படி வள்ளு வள்ளுன்னு விழுந்து துரத்தியடிக்கப் பாக்கறேள்? ஸரி, இதோ போரேன். சாயங்காலம் கேள்விப்பட்ட சேதியை யார் சொல்ருளோ பார்க்கலாம்.*

[போக முயலுகிறள்.]

*சர்மா :—சீ சீ அசடு! கோபத்தைப் பாரு! வா இப்படி... வரமாட்டே?*

கன :—(வந்துகொண்டு) உதச்சுத் தள்ளிஞ பந்தா யிருந்தாக்கூடப் பறந்தோடிப் போறது.

சர்மா :—பின்னேயும் உதச்சாத் திரும்பி வந்துடறது. இது தெரியாது ?

கன :—போதும்! போதும்! ஓங்க சட்டக் கல்லி. கட்டினவளா யிருந்தால்தானென்ன ? கழுதையா என்ன ?

சர்மா :—சீ! யார் சொன்னது ? நீ எவ்வளவு நல்லவள்! அதிருக்கட்டும். இங்கே வா ; என்ன சேதி கேட்டே ?

கன :—இன்னிக்கிச் சாயங்காலம் குளத்துக்குப் போகச்சே, அங்கே அவா எல்லாம் சொல்லிண்டிருந்தா. ஏதோ உங்களுக்குப் பெரிய உத்யோக மாச்சாம். எல்லாரையுங்கூட நீங்க ஜெயில்லே போட்டுடுவிங்களாம் இன்னமே!

சர்மா :—அப்படியா சொன்ஞ ? எவ்வளவு புத்திசாலிகள்!

கன் :—நீங்க ரொம்ப கெட்டிக்காரராம். நான் ரொம்ப... கள்ளம் கவடு தெரியாத அப்பாவிப் பொண்ணும்... சொன்ஞ.

சர்மா :—அப்படியா! ஊம்......இன்னும் என்ன என்ன சொன்ஞ ?

கன :—ஒத்தருக்கும் தெரியாதெ எப்படி இந்த உத்யோகத்தை ஸம்பாதிச்சகளென்னு ரொம்ப ரொம்ப ஆச்சரியப்பட்டுண்டிருந்தா.

சர்மா :—என்ன தெரியலே. நீ சொல்றத்தைப் பார்த்தால், சுல்தான் பேட்டையிலே இது தெரியாதவாளே இல்லே போலிருக்கே ?

கன :—என்னேத் தவிர! கடசிலே தெரிஞ்சுண்டவ நான் தான். என்னெப் பாத்து என்ன பரிகாசம் பண்ணிச் சிரிச்சா தெரியுமா உங்களுக்கு ?...உ-ஊம்.

சர்மா :—அப்படியா சேஞ்சா ? அவ்வளவு கொழுப்பா ?... இருக்கட்டும். சீக்கரத்திலே காண்பிக்கறேன்,

சுல்தான்பேட்டை ஸப் அஸிஸ்டண்ட் மாஜிஸ்ட்ரேட ஸம்ஸாரத்தைப் பார்த்துச் சிரிக்கறத்தின் பலனே!...

கன :—எவ்வளவு பெரிய பேரு! அப்டீன்னு என்ன?

சர்மா :—அப்டீன்னு...சுல்தான்பேட்டை...அது சொன்னு உனக்குப் புரியாதே......அதாவது......அட வச்சுக் கோயேன். இன்னிலேருந்து நான்தான் சுல்தான் பேட்டை மகாராஜா!

கன :—ஏ அப்பாடா! எதுவரைக்கும்?

சர்மா :—எதுவரைக்கும்னு? அதான்...இன்னும் பெரிய உத்தியோகமாகிற வரைக்கும். அது ஸரிதான். உன்னைப் பார்த்துச் சிரிச்சது யாரு?

கன :—நான் சொன்னு அவாளை நாளைக்கே ஜெயில்லே போடறைகளா?

சர்மா :—நாளைக்கே முடியுமா?......இதோ பாரு! நீ இன்னமே ஜலங்கொண்டு வரக் குளத்துக்குப் போகப் படாது.

கன :—நான் போகாதபோனு யார் போறது? குடிக்கற தண்ணிக்குக் குட்டிக்கரணம் போடறதோ......? ஒங்கம்மா போவாளோ? கண் தான் ரொம்ப சுப்ரதிகமா யிருக்கே—முழுப்பொட்டையா!

[கிருஷ்ண சர்மாவின் தாயார்
ருக்மிணி அம்மாள் வருகிறள்.]

ருக் :—நன்னருக்குடீ! கண் தெரியாப்போனு, காது கூடவா அடைச்சுப் போச்சு......வெகு லக்ஷணமா யிருக்கு வீடு வரவர! இரண்டு மொளெ வெடிக் கலே...ஆமிண்டியாளெ வச்சுண்டு அஞ்சு நாழியாக் கொஞ்சறதும், கொக்கரிக்கிறதும்! ஏண்டா, என்னடா ஓதரு அவ? என்னை வீட்டெ விட்டு ஓட்டி டுன்னு சொல்லிக் கொடுக்கருளோ? வேறென்ன இருக்கமுடியும்? நன்னி கெட்டது...பன்னடை!

சர்மா :—இல்லேயம்மா! நீ ஏன் கோவிச்சுக்கறே? என் உடம்புக் காச்சலைப் பத்திச் சொல்லிண்டிருந்தேன்.

ருக் :—ரொம்ப அழகுதான்! ஏண்டாப்பா, அவதான் உன்னெப் பத்து மாசம் சுமந்து பெத்தெடுத்துத் தாலாட்டி வளத்தாளோ? வாஸ்தவந் தாம்பா! காலங் கலியோ அன்னோ...ஒண்ட வந்த பிடாரி, ஊர்ப் பிடாரியே ஓட்டித்தாம். பாலெக் கொட்டி மருந்தெக் கொட்டி ஒன்னெ ஆளாக்கி வளத்துட்டு, நேத்து வந்த பொண்ணுக்கு ஒன்னெ ஒப்பிச்சுட்டேண்டா!

கன :—ஏனிவ்வளவு பொல்லாப்பு? ஒங்க பிள்ளையை நீங்களே கல்யாணம் பண்ணிண்டுடறது தானே?

ருக் :—பார்த்தையாடா அவ வாயை...

சர்மா :—போதும். வாயை மூடுங்கோ ரெண்டு பேரும்... நான் இன்னிலேருந்து சுல்தான் பேட்டைக்கு ஸப் அஸிஸ்டண்ட் மாஜிஸ்ட்ரேட்டுன்னு தெரிஞ்சுக்கிங்க. இன்னமே இந்த ஊர்லே ஒரு கலகமாவது கலாட்டாவாவது இருக்கக்கூடாது. தெரியுமா? நான் உத்தியோகத்தை ஏத்துண்ட முதல் நாளே என் வீட்டிலேயே, கலகம், அடிதடி, குழப்பம்—உம்! இந்த மாதிரிக் குத்தமெல்லாம் நடக்கவிடமாட்டேன். ஜாக்கிரதை!...

ருக் :—என்ன? என்னெ வீட்டிலே வச்சுண்டிருக்க மாட்டையா? அப்படித் தானிருக்கும்னு நெனச்சேன். காதைக் கடிச்ச தெல்லாம் இதுக்குத் தானா? நானேண்டா இன்னமே உசிரெ வச்சுண்டிருக்கணும்? இதோ போய்க் கிணத்துலே விழுந்து சாகறேன். இந்தக் கட்டை ஒண்ணு தானே ஒங்க-ஆம்படையான் பொண்டாட்டி-ரெண்டு பேர் கண்ணுலேயும் குத்தறது? நான் தொலைஞ்சுபோனா, நீங்க சுகமா இருப்பிங்கோ.

சர்மா :—(தனக்குள்) பொட்டைக் கிழம் என்னமாக் கத்தறது? காதுகூட மந்தமாய் விடும் போலிருக்கே. (வெளிப்படையாய்) அம்மா! அவசரப்பட்டு ஒன்னும் செய்யாதே.

கன :—(தனக்குள்) விழற மூஞ்சியைப் பாரு. (வெளிப் படையாய்) கிணத்துலே ஜலம் கணுக்கால்கூட இல்லையே!

ருக் :—பாத்தையாடா அவ வாயை? நானென்னும் அவசரப்படலே—பொறுத்தவா பூமி யாள்வான்னு சொல்லியிருக்கு.

சர்மா :—வாஸ்தவம் தானம்மா! நீ பொறுமையாயிரு; நான் பூமியை ஆளுவேன்!

கன :—ரெண்டு பேரும் சேந்து ஆளறதுதானே?

ருக் :—எப்படியிருந்தாலும் நீ எங்கொழந்தை தானேடா, அப்பா.

கன :—அது ரொம்ப வாஸ்தவமான வார்த்தை.

சர்மா :—உள்ளே போகமாட்டிங்க?...அதான்...ரெண்டு பேரும்!

கன :—அட அதிகாரமே! இதோ போறோம். இங் கென்ன வேலை எங்களுக்கு...வாங்கோம்மா—நாம்ப போகலாம் சமையலறைக்கு. அது நம்ப சொந்த ராஜ்யம்தானே? இந்தப் புருஷா உருட்டுப் பிரட் டெல்லாம் அங்கே வர முடியாதே; அவாளே எப்பவும் இப்படித்தான்......வாருங்கம்மா.

[ருக்மிணியைக் கையைப் பிடித்து அழைத்துப் போகிறாள்.]

சர்மா :—பேஷ்! இது என் முதல் கேஸ்...சீ சீ! ஜட்ஜ் மெண்ட் சொல்றத்துக்குள்ளேயே ராஜி ஆய்ப் போச்சே! அபசகுனந்தான்! இருக்கட்டும். இந்த எழவெடுத்த வீட்டிலே ஒரு நாற்காலிகூடக் கிடையாது......என்ன செய்யறது? நல்ல பதவி வரச்சே நோட்டீஸ் கொடுத்துட்டா வரது?...... டே பியூன்!

[சுல்தான்கான் வருகிறான்.]

சுல் :—ஸார்?

**சர்மா** :—ஏய்! நாராயணராவ் வீட்டுக்குப்போய், பெரிய ஈஸிச்சேர் ஒன்னு வாங்கிவா! நான் அனுப்பிச் சேன்னு சொல்லு! ரெண்டு, மூணு சின்ன நாற்காலி...இல்லாப்போனு வாணும்......கூட ஒரு நீளமான பெஞ்சு வாங்கிண்டுவா.

**சுல்** :—சர் தாங்கோ! [போகிறன்.]

**சர்மா** :—இப்போ கோபாலையங்கார் எப்படி யிருக் காரோ...யாரடா அங்கே?

[வீராசாமி வருகிறன்.]

**வீரா** :—யசமான்! கூப்பிட்டிங்களா?

**சர்மா** :—ஆமாண்டா: உனக்குக் கோபாலையங்கார் வீடு தெரியாது? தெரியுமா?. உடனே போய் நான் அவரைப் பார்க்கணம்னு சொல்லி வா, போ.

**வீரா** :—யாருங்க யசமான்? புரோகித கோபா லெய்யங்காரா?

**சர்மா** :—இடியட்! புரோஹிதன் ஏதுக்குடா? எனக்குத் தெவசம் செய்யவா? ஹெட் கிளர்க் கோபா லையங்கார். தெரியுமா? ஓடு! ஜல்தியாப் போய் வா......

**வீரா** :—யசமா! [வேகமாய்ப் போகிறன்.]

**சர்மா** :—எத்தனை காரியம் செய்யவேண்டியிருக்கு; பொழுதே இல்லையே.

[கனகவல்லி வருகிறள்.]

என்ன மறுபடியும்? இப்போ என்ன சண்டை?

**கன** :—இதோ இந்தப் பத்தை அரைச்சுண்டு வந் திருக்கேன். நெத்திமேலே போட்டுக்குங்க. ரொம்ப நல்லது எல்லா ஜொரத்துக்கும்.

**சர்மா** :—போ கழுதை! என் ஜொரத்தைப்பத்தி உனக் கென்ன தெரியும்?

**கன** :—வெள்ளக்காரப் பொங்களே அவ ஆம்படையாங்கள் இப்படித்தான் கூப்படறுங்களோ?

**சர்மா** :—எதிர எதிர வாயாடாதே!

*கன* :—ஏதாவது கேட்டா, வாயாட்டமா ?

**சர்மா** :—ஷட்டப் ! மூடறையா, இல்லையா ?

**கன** :—வாசக் கதவையா ? இதோ மூடறேன். ஷட்டப்பாம் ! ஷட்டப் !

[போக முயல்கிறள்.]

**சர்மா** :—போகாதே, இரு ! கதவையில்லே ; உன் ஓட்டை வாயை.

**கன** :—ஏன் ? ஒரு ஊமைப் பெண்டாட்டியைக் கட்டிண்டிருந்தா ?

**சர்மா** :—கிருஷ்ணன்னு இருப்பேன்.

**கன** :—பாவம் ! இப்போ முடியாதே. என்ன பண்றது ?

**சர்மா** :—கழுதை ! உள்ளே போறையா, இல்லையா ?

**கன** :—கழுதைக்குத் தாலி கட்டினவர் எப்படி ?

**சர்மா** :—போ ! போ ! ! வில் யூ ?

**கன** :—ஆஹா ! இந்தப் புருஷாதான் என்னடி அம்மா ! தொட்டதுக்கெல்லாம் "ஆட்டு பூட்டு" இன்னுண்டு. அதுவும் ரெண்டு எழுத்து இங்கிலீஷ் வந்துட்டா ரகளை தான் !

[போகிறள்.]

**சர்மா** :—சே ! சே ! மனுஷனுக்கு ஸரியான ஸம்ஸாரம் இருக்கணும். ஒரே பெண்டாட்டியைக் கட்டிக் கொண்டு...

[கையில்லாத ஈஸிச்சேர் ஒன்றை எடுத்துக் கொண்டு சுல்தான் கான் வந்து, அதை நடுவில் வைத்துத் தூசி தட்டுகிறன்.]

எங்கேடா இதன் கை ? இதை யேண்டா கொண்டு வந்தே ?

**சுல்** :—நம்பள்கிட்ட எதி கொடுக்கருன் அதி கொண்டு வந்தான், ஸார் !

**சர்மா** :—நீ வக்கீல் நாராயண ராவ் வீட்டுக்குத்தானே போனே ?

சுல் :—ஆமாங்கோ !

சர்மா :—அந்தத் தோல் தச்சிருக்கிற ரோஸ்வுட் நாற்காலீ எங்கே ?

சுல் :—வக்கீல் ஸாப் அதிக்கி மேலே படுத்துக்குனுயிருந்தான். இதுக்கி அனுப்பிச்சான்.

சர்மா :—எழுந்திருக்கக்கூடவா யில்லே ?... இருக்கட்டும்... பெஞ்சு எங்கடா ? பா்த்துக்கிறே னவனே !

சுல் :—நம்பிள் கேட்டானுங்கோ. பெஞ்சுமில்லே கிஞ்சுமில்லேண்ணுங்கோ.

சர்மா :—அப்படியா ? இருக்கட்டும் !

[அந்த நாற்காலியில் படுத்துக் கோள்ளுகிறர்.]

## காட்சி 2

[ராமா சாஸ்திரியும் காமா சாஸ்திரியும் ஒவ்வோருவரும் இரண்டு எலுமிச்சம் பழங்களுடன் வருகிறர்கள்.]

சர்மா :—யாரது ?

ராமா :—நாங்க, பக்கத்து ஊர்.

சர்மா :—பியூன் ! இவாளெல்லாம் இந்த மாதிரி உள்ளே வரக்கூடாது ; தெரியுமா ? சுத்த நியூஸன்ஸ் !

சுல் :—இல்லிங்கோ ஸார் ! இண்ணிக்கி முதல் நாளு ; நாள்கிபுட்சுப் பாருங்க ; ஓர்த்தன்கிக் கூட உட்ரான் இல்லே.

[இரண்டு சாஸ்திரிகளும் ஒருவரையோருவர் பார்த்து விழித்துவிட்டு, சுற்றிச் சுற்றிப்பார்த்து உட்கார ஒன்றையும் காணுமல் நிற்கிறர்கள்.]

சர்மா :—என்னய்யா வேணும் ? எதுக்காக வந்தேங்க ?

காமா :—நாங்க அடுத்தாப்பலே இருக்கிற ஆத்தூர் கிராமம்.

ராம :—ஆமா ......ஆத்தூர் கிராமம். ஹி...ஹி...ஹி...

சர்மா :—ரொம்ப ஸரி......வந்த வேலே என்ன ?

ராமா :—ஒண்ணுமில்லே......காலங்காத்தாலே எழுந்து ஸ்நானம் சேஞ்சுட்டு வரச்சே...

காமா :—பறையன் பக்கத்திலே இடிச்சுண்டு போனன்.

சர்மா :—ஷ்...ஷ் ! குறுக்கே பேசாதேயும்.

ராமா :—சாஸ்திரிகளே !...பெரிய இடம்...ஜாக்கிரதையா யிருக்கணும். பாருங்கோ...இங்கே ஐயரவாளுக்குத் தானே...காலம்பர காதுலே விழுந்தது. ரொம்ப நல்ல சமாசாரம்......எங்களுக்கெல்லாம் ரொம்ப ஸந்தோஷம்...

காமா :—கேட்டதே பிடிச்சு என்ன ஆனந்தம் ! என்ன அமோகமான கௌரவம்...

ராமா :—இந்த ஊருக்கே ஒரு தேஜஸ் வந்துட்டுது...

காமா :—இத்தனே நாளா...

ராமா :—மிலேச்சாள் நிறஞ்சிருக்கப்பட்ட இந்த ஊர்லே...

காமா :—ஒரு பிராம்மணனுக்கு...

ராமா :—இந்தப் பதவி கிடச்சது உண்டே...

காமா :—அதுவும் உங்களெப்போல ஞாதாவுக்கு...

ராமா :—ஸத் புருஷருக்கு...

காமா :—மஹா பொறுமைசாலிக்கு...

ராமா :—தர்மிஷ்டருக்கு......

காமா :—ஸ்வஜாதி அபிமானமுள்ள பிரபுவுக்கு...

ராமா :—ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி குமாரனுக்கு...

காமா :—இந்தப் பதவி கிடச்சது உண்டே...

ராமா :—நாங்கள் எல்லாம் ரொம்ப நாளா பகவானெப் பிரார்த்திச்சுண்ட பலன்...

காமா :—இன்னிக்குக் கிட்டித்து !

ராமா, காமா :—( இருவரும் ஒன்ருக ) :—ஹி...ஹி...ஹி... ஹி...ஹி...ஹி...

சர்மா :—இதெல்லா மிருக்கட்டுங் காணும். சும்மா, வந்த வேலையெச் சொல்லாமல் என்னமோ கொட்டி அளக்கிறிங்களே !......எங்கே வந்தெங்க, சொல்லுங்க... உம் !

காமா :— நாங்க சதுர் வேதமும் பாராயணம் பண்ணினவா...

ராமா :—காஞ்சியிலே கணபதி கனபாடிகளண்டே....

காமா :—சீயாழி ஸ்ரீநிவாச தீக்ஷதரண்டே...

ராமா :—ஜம்புகேச்வரத்திலே...

சர்மா :—டாம் யு ! ஷட் அப் !!

ராமா, காமா :—(ஏக காலத்தில்) ஓம் ராஜாதி ராஜாய ப்ரஸஹ்ய ஸாஹிநே நமோ வயம் வைச்ரவணாய குர்மஹே......

சர்மா :—போதும், நிறுத்துங்க ! ...... நான்ஸென்ஸ் ! எங்கேய்யா வந்தெக...யாசகம் தானே ?

காமா :—ஆமா !

ராமா :—இல்லெ !

காமா :—இல்லெ !

ராமா :—ஆமா !

சர்மா :—என்னங்காணு...ம் ? புத்தி கித்தி மாருட்டமா ?

ராமா :—நாங்க காசுக்கு யாசகம் பண்ண வரலே...

சர்மா :—பின்னே ?

காமா :—நீர் தா...ன் சொல்லுமே, சாஸ்த்ரளே !

ராமா :—ஏழைப் பையன், நல்ல பிராம்மண வித்து, நீங்க தான் காப்பாத்தணம்.

சர்மா :—என்னய்யா உளறிண்டு ?

ராமா :—நீர் தான் சொல்லுமே, சாஸ்த்ரளே !

காமா (ராமா சாஸ்திரியைக் காட்டி) :—இவா பாருங்கோ நமக்கு ரொம்ப அந்யோந்யம்...பந்துன்னே வச்சுக்கலாம், ஏன் ?

ராமா :—பந்துதான் ! எங்க சுப்பணியெ...

சர்மா :—ஸரி, ஸரி. பந்துதான்...மேலே சொல்லய்யா !

காமா :—இவாளுக்கு ஒரு ஸகோதரி உண்டு. அவளுக்கு ஒரு சிறு பயல்...ஒரே புத்ரன்...பாருங்கோ ஊர்லே ஒரு பண்ணையாள்...தீண்டாதவன்...வேலே வேண் டாம், மோரிசுக்குப் போறேன்னு மெரட்டினன். பய...அதான் இவா மருமான்...ஏதோ விளையாட்டுப் போல ஒரு சின்னக் கைக் கழியாலெ சும்மா தொட்டான்......அந்த பறப் பிள்ளே நின்ன இடத்திலேயே பொசுக்குனு விழுந்து செத்து வச்சுது...அது போன பிறப்புலே என்ன கர்ம விசேஷமோ? தொட்டவாமேலே பழியா வந்து பொறந்து வச்சுது...எல்லாம் கிரஹசாரம்தானே... ஒரு பறையனைக் கழியாலே தொட்ட தோஷத்துக்குப் பிராமணப் பையனைத் தூக்குலே போடணுமாம்... மனுதர்ம சாஸ்த்ரத்துலே...

சர்மா :—சாஸ்திரத்தைக் குப்பேலே போடு; கேஸ் என்ன ஆச்சு?

காமா :—கேஸ் இன்னம் தொவக்கல்லே, பையன் பாருங்கோ ஜெயில்லே இருக்கான்...

ராமா :—போலீஸார் ரொம்ப முஸ்தீப்புகள் செய்யரு. பொய்ச் சாட்சிகளை எல்லாம் ஜோடிச்சாறது; பிந்தி கோர்ட் விசாரணைக்கு வருமாம்.

சர்மா :—ஏனய்யா, உங்களுக்கு மூளை யிருக்குதா? நாளைக்கு என்னண்டே வரப்போற கேஸைப் பத்திப் பேசலாமா? இந்த ஒரு விஷயத்துக்கே இப்பவே உங்களை ஜெயில்லே போடலாமே......

ராமா :—அப்புறம்—பிராமணப் பையனுச்சே? அவன் கதி?

சர்மா :—மறுபடியும் பார்! என்னய்யா? பிரிட்டிஷ் ஜஸ்டிஸ்னு தெரியுமா? நெருப்பு! கிட்டப்போனு தஹிச்சுப்புடும்—பிராம்மணனுக்கும் ஒண்ணுதான், பறையனுக்கும் ஒண்ணுதான். அதுக்கு ஜாதி, மதம் ஒண்ணும் கிடையாது, தெரியுமா?

காமா :—ஜாதியில்லாதது பஞ்சமம்.

ராமா :—மதமில்லாதது மிலேச்சம்.

காமா, ராமா :—தயவு வைக்கணும்.

சர்மா :—தயவு! நல்ல தயவு! ஒரு மனுஷனைக் கொன்னுட்டு தயவா? சுக் சுக் சுக் சுக்! இது ரொம்பப் பிரமாதமாச்சே!

ராமா :—வாஸ்தவந்தான்.

காமா :—ஆகையாலே தான்—

சர்மா :—அந்தப் பையனுக்கு ஏதாவது ஸ்திதி உண்டா?

ராமா :—ஒரு தம்பிடி?

காமா :—ஸர்வ பாப்பர்!

சர்மா :—அயோக்யத்தனம்! பாப்பரா யிருக்கிறவன் பறையனை ஏன்ய்யா கொல்லணும்? சுத்தப் போக்கிரித்தனம்! உங்களுக்கு ஏதாவது ஐவேஜ் உண்டா?

காமா :—நாங்களா?

ராமா :—எங்களிடமா?

காமா :—ஐவேஜா?

ராமா :—அட ராமா! நாங்க கேவலம் வைதீகாள்.

காமா :—மனு மாந்தாதா நாள்ளெருந்து எங்க பெரியவா செஞ்சுண்டு வந்தாப்லே.

ராமா :—பிச்சை யெடுத்து வயத்தை வளக்கிறவா...

சர்மா :—போங்காணும் வெளியே, கெட் அவுட். பியூன்!

[சுல்தான்கான் வருகிறன்.]

இதோ! இவங்களை வெளியே போகச் சொல்லு.

ராமா:—அப்பா! நீ சும்மா போடா சாயபு...அடே... தீண்டாதேடா எங்களெ. எங்களுக்குப் போக வழி தெரியும். சீ, சீ! என்ன கலிகாலமோ? பிராம்மண விச்வாஸ மென்பது போயேபோச்சே. படிச்சவன், படிக்காதவன் எல்லாம் ஒண்ணுப் போச்சே.

[வீராசாமி வருகிறன்.]

சர்மா :—என்னடாது? கோபாலையங்கார் எங்கெடா?

வீரா :—அவருக்கு ஜொரம்னு சொல்லச் சொன்னரு. இப்போ வர முடியாதாம்.

சர்மா :—என்ன ஜொரம்டா அது? என்ன செய்துண்டிருந்தார்?

வீரா :—நான் பாக்கலிங்கோ—நான் போவக்கொள்ள யாரோ ஒரு பொம்பளெ "ஐயாவுக்கு மாம்பளம் வேணும்னு" சொல்லிக்கிட்டிருந்தா. அவதான் வந்து பின்னே "ஐயாவுக்கு ஜொரம்னு சொல்லு" இண்ணு.

சர்மா :—(எழுந்து) அப்படியா? என்னமோ நிஜமாயிருந்தாலும் இருக்கலாம். யார் கண்டா?...நானே போய் ஏன் பார்க்கக் கூடாது? இரண்டு விதத்துக்கும் நன்னயிருக்கும்...அடே சாயப்! என் ஜோடு எங்கெடா? போய்க் கொண்டு வா.

சுல் :—என்னங்கோ! நம்பள்கி, சொன்னீங்களா? நாம்போ ஜோட் தொட்றனில்லே. நம்போ என்ன ஜட்கா ஓட்ற சாயபூண்ணு பாத்திங்கோ? நம்பள்கி கலெக்டர் தொரெகூட சொல்றன் யில்லே.

சர்மா :—என்ன? சுத்த இம்பர்டினெண்ட் பெலோ! உடனே போய்க் கொண்டு வரயா இல்லெயா? ஏக் தம்!

சுல்:—சும்மா கலாட்டா பண்ணதிங்கோ சாமி! முடியாத்.

சர்மா :—ஹ! ஹா!!

சுல் :—நம்போ உங்கள்கி ஸர்வண்ட் இல்லிங்கோ, ஸர்க்கார் கி ஸர்வண்ட்.

சர்மா :—அப்படியா? உன்னே டிஸ்மிஸ் பண்றேனு, இல்லையா பாரு!

சுல் :—நீங்கோ செய்யர்து என்னங்கோ?...இதோ (டவாலி, இடுப்புக் கச்சை இரண்டையும் கழற்றி அவர் முன் கீழே போட்டு) இந்த வேலெ நம்பள்கி வாண. நம்ப்ளெ என்ன நெனச்சிங்கோ? தமிள் மன்ஷன்னு பாத்திங்கோ? நம்போ பேரு ஸுல்தான், தெரியுமா? இந்த ஸுல்தான் பேட்டைலே நம்பள்

தர்த்தா நவாப்கி இருந்தா...அரே நீ குமாஷ்தாக்கி இருந்தான் பொம்மன். உன்கி ஜாதி நம்பள் எடுக்ருன்...? ஹா! ஹா!

[மீசையை முறுக்கி முறைத்துப் பார்க்கிறன்.]

சர்மா :—(பயந்து சுற்றிலும் பார்த்து, இரண்டு சாஸ்திரிகளும் இருப்பதைக் கண்டு) சோம்பேறிகளா! ஏன் இன்னும் இங்கே நிற்கிறீர்கள்?

ராமா :—சாஸ்த்ரளே! நமக்கென்ன காரிய மிங்கே?

காமா :—நமக்கென்ன?

ராமா :—அதுவும் இப்போ!

காமா, ராமா :—பகவான் இருக்கான் மேலே......

[போகிறர்கள்.]

சர்மா :—அடே வீராசாமி! இங்கே என்னடா செய்யரே? ஆந்தையாட்டமா முழிச்சுண்டு...போடா வெளிலே!

[வீராசாமி போய்க் கதவுக்குப் பின் நின்று கொண்டு, எல்லாவற்றையும் கவனிக்கிறன்.]

சர்மா :—ஏ ஸாயப்! என்ன பைத்தியக்காரன்! ஏன் அப்படிக் கோவம் பண்ணிண்டே?

சுல் :—கோவம்! நம்பள்கி வாணு சாமி.

சர்மா :—நான் வீராசாமியைச் சொல்றத்துக்கு பதில்—நீ எதிர இருந்தயா...உன்னே சொல்லிட்டேன். தப்பா எடுத்துக்காதே.

[வீராசாமி கதவின் பின்னிருந்து "ஓஹோ!"]

சுல் :—நம்பள் கிட்டத்தானே சொன்னு, ஜோட்கி கொண்டுவா!

சர்மா :—சே! சே! கோவிச்சுக்காதே. (அவன் பட்டையையும் கச்சையையும் எடுத்து அவனிடம் கொடுத்து) இந்தா! போட்டுக்கோ, பைத்தியக்காரன்!........ மடையன்...

சுல் :—(ஒரு கையால் மனமில்லாமல் வாங்கிக்கொண்டு) நிம்பள் தில்கி குஷி செய்ருன்...

சர்மா :—குஷி இல்லாதெ என்ன? எல்லாம் ஸரிதான். எப்படி யிருந்தாலும் மூக்குமேலே கோவம் கூடாது. அந்த ரெண்டு பாப்பான் இருந்தாங்க; வீராசாமித் தடியன் இருக்கான். இவா எதிரெல்லாம் வாயிலே வந்தபடி உளர்ரியே...சுத்த மடையன், போ!

சுல் :—நம்ப என்ன செய்ருன்? நம்பள் உங்க பேச்சி கேட்டு கொதிச்சுப்பூட்டான்...

சர்மா :—அசடே! போ. இன்னமே கொஞ்சம் பொறுமை யாயிரு...இது யாருக்கும் தெரிய வேண்டாம்.

சுல் :—ஸர் தானுங்கோ.

சர்மா :—டபேதார் லீவ் வாங்கப் போருனும்...தெரியுமா?

சுல் :—தெரியாத் ஸார்!

சர்மா :—நானின்னமெ வெளியே போகப் போகிறதில்லே. நீங்கள்ளாம் வீட்டுக்குப் போங்கோ.

சுல் :—ஸலாம் எஜ்மான்!

சர்மா :—ஸலாம், இந்தா!

[கால் ரூபாய் கொடுக்கிறர். வாங்கிக்கொண்டு சுல்தான்கான் போகிறன். சர்மா யோசனையில் ஆழ்ந்து அறைக்குள்ளே அங்கு மிங்கும் உலாவுகிறர். வெளியில் சிலர் சிரிக்கும் சத்தம் கேட்கிறது.]

சர்மா :—என்ன இது? என்னைப் பார்த்து ஊர் நகைக்க ஆரம்பித்து விட்டதா?

## காட்சி 3

[சுல்தான்பேட்டை ஸப்-அஸிஸ்டேண்டு-மாஜிஸ்ட்ரேட் கச்சேரி. பத்து வயதுள்ள முத்து என்னும் சிறுவன் மேஜை, நாற்காலி முதலியவைகளைத் துடைத்துக் கொண்டும், மற்றப்படி சிறிய வேலைகளைச் செய்து கொண்டுமிருக்கிறன்.]

*முத்து* :—(தனக்குள்ளே) மணி ஒன்பதரை ஆச்சு. இன்னும் என்ன, அந்தப் பாழாப்போன பொம்பளே வந்து கூட்டியாவலே? இல்லெ, இல்லெ. வரவர அவுளுக்கு உடம்பிலே ஏறியிருக்கிற அதப்பு அவ்வளவு இவ்வளவு இல்லெ......ஆ! அதோ வர்ரா ...வரட்டும்.

[முனியம்மாளென்னும் வேலைக்காரி வந்து விளக்கு மாற்றல் தரையைக் கூட்ட ஆரம்பிக்கிறள்.]

*முத்து* :—இந்தா! ஐயோ, உன்னெத்தான்.

*முனி* :—என்னடாது? ரொம்ப அதட்ரயே.

*முத்து* :—போவுட்டும்! மணி என்னுச்சு, பாத்தியா?

*முனி* :—அதெப்பத்தி உனக்கென்னடா?

*முத்து* :—எனக்கென்னுவா? ஓ, அப்படியா? இரு, இரு... மாமன் வரட்டும், அப்போ தெரியுது.

*முனி* :—அது யார்ரா அது, மாமென்?

*முத்து* :—உன்னெயும் என்னெயும் மேக்கறவன்...அதுவும் இன்னிக்கி நல்ல கோவத்துலே இருக்கருன்.

*முனி* :—அடெ! அவன் கோவம் என்னெ என்ன செய்யும்?

*முத்து* :—பாத்துக்கினே யிரேன், தெரியுது.

[சேவகன் வீராசாமி வருகிறன்.]

*வீரா* :—டே, கொரங்கு! இன்னுமாடா தும்பு தட்டிக்கிணு யிருக்கே?

*முத்து* :—இல்லெப்பா. நானு எப்பவோ வந்துட்டேன். கீளே நல்லா பெருக்கியானுத்தானே அப்றம் தும்பு

தட்ணும்பா. முன்னேயே தட்டினு, திரும்பியும் பெருக்கற தும்பெல்லாம் படிஞ்சுபூடாதாப்பா? என்னுப்பா இது கூடத் தெரிலியே?

வீரா :—டே! அந்த மேஜை மேலேந்து இறங்கி வா!

முத்து :—ஏம்பா?

வீரா :—சொல்றேன், இறங்கி வாடா!

முத்து :—அப்பிடியே தாஞ் சொல்லேம்பா? ஏதானு கேக்கணுமா? வூட்லே அல்லாரும் சவுக்யமாயிருக் காங்க?

வீரா :—இப்ப வரயா என்ன?

[முணுமுணுத்துக்கொண்டே இறங்கி வருகிறன்.]

வீரா :—(முனியம்மாளைக்காட்டி) என்னுப்பா? அது யாரு தெரியுமா?

முத்து :—யாருப்பா?

வீரா :—சொந்தம். அவமேலே கிம்பளேண்ட் பண்ணினியோ, தெரியுமா?

முத்து :—தெரியாது...தெரியும்பா.

வீரா :—இன்னிக்கு யாராலே லேட்—அவளாலேயா, உன்னுலேயா?

முத்து :—அவ—என்னுலெ—ப்பா!

வீரா :—(முத்துவைக் கன்னத்தில் அறைந்து) ஓடிப் போ!

முத்து :—(முணுமுணுத்துக்கொண்டே போகிறுன்) வா, வா! உன் சாப்பாட்டுப் பொட்லத்திலே என்ன இருக்குது பாரு!

வீரா :—இந்தா, முனி!

முனி :—ஊ—ம்!

வீரா :—நீ என்னு இப்படி லேட்டா வரியே? அந்தப் பையன் கொரங்காச்சே!

முனி :—ஆனு?

வீரா :—சீ, சீ! நான் எம்மாத்தம் கஷ்டப்பட்டு உன்னே இங்கே வேலேலே அமுத்தினே. அந்த ஐயருக்கு

ஒரு மாசத்துச் சம்பளத்தை அளுது இந்த வேலெ வாங்கித் தந்தா, நீ பண்ற அக்ரும்புலே வேலெயே பூடும்போல இக்கிதே !

முனி :—சர் தான் ! உன் வேலேயெ நீ சரியாப் பாத்துகோ. அந்த ஐயனே நான் கவனிச்சுக்றேன்.

[குமாஸ்தா வேங்கடரமண ராவ் வருகிறர்.]

வேங் :—(தலைப்பாகையைக் கழற்றி ஓர் ஆணியில் மாட்டி)—ஸ்—ஸ்—ஸ்—ஸ்—ஸ்—ஸ. கோபால கிருஷ்ணு! என்ன வெய்யில் தகிக்கிறதே! ஆ—(கொட்டாவி விடுகிருர்.) யாரடா அது? எப்பொ வந்தெ ?

வீரா :—எப்பொ வந்தெனு ? அப்பவே வந்தனுங்க.

வேங் :—இதோ இந்த மேஜையெல்லாம் ஒரே தூசு. வர வர உனக்கு ரொம்பச் சோம்பல் ஜாஸ்தியாப் போச்சு!

வீரா :—இல்லிங்கோ. அது—அது—

வேங் :—என்ன அது—அது—இருக்கட்டும், ஹெட் கிளார்க் வரட்டும். அவரண்டே சொல்லி அபராதம் போட்டு வைக்கிறேன்.

வீரா :—என்னுங்க ! இதிலேதானு ஒங்களுக்குப் பேரு வந்துடப் போவுது ?

வேங் :—அதிருக்கட்டும் ; இதோ இந்த இங்கிப் புட்டிலெ இங்கியே இல்லே. இது கூடப் பார்க்க முடியாதெ என்னடா வெட்டிப் பிரட்டறே ?

வீரா :—நீங்க என்ன ஸார் ! ஆபீஸெ வுட்டுப் போனு, ஐயரு ஊட்லே அந்த அம்மா பண்ற தடபுடலு ஆளெயே தூக்கிக்கினு போவுது. ஒரு நிமிசம் சும்மா குந்த வுடமாட்டேன்றுங்க. 'கத்தரிக்கா வாங்கியா ! துணி தோச்சிப் போடு ! இந்த நாக்காலியே அங்கே போடு ! அந்த எயவே இங்கெ போடு ! குந்தினு நில்லு, நின்னு ஓடு, இண்ணு என் தாலியெ கொத் தோடெ அறத்து என் வவுத்தெரிச்சலெக் கொட்டிக்

கிருங்க. அந்த ஐயரோ....அடெ போயா! இந்த வேலெயும் வாணும்...வெட்டியும் வாணும்...முழுச் சம்பளத்தெயும் அபராதம் போட்டு நீயே எடுத்துக் கோய்யா.

வேங் :—உனக்கு ரொம்பக் கர்வம் ஜாஸ்தியாப் போச்சு. போ...வெளியே, கழுதே!

வீரா :—ஆமா; கிஞ்சு போச்சு! கழுதையா யில்லாப் போனு உங் கிளே வேலே செய்வேனு?

[முனு முனுத்துக்கொண்டே போகிறன்.]

வேங் :—மணி பத்தரை தானே ஆகிறது. சீக்கிரமே வந்து விட்டேன். நாளைப் பந்தயத்தில் என்னென்ன குதிரை ஓடுகிறது, பார்க்கலாம்.

[சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து, வெகு அக்கறையுடன் ஏதோ கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறன். குமாஸ்தாக்கள் ஸ்ரீநிவாஸையரும் ரகுபதியும் வருகிறர்கள்.]

ஸ்ரீநி :—ஒரே சான்ஸ். ‘பே ரோனல்டு’ மேலே ஆடப் போறேன். வந்தா, மார்வாடிக் கடைலேருந்து நகையெல்லாம் கைக்கு வரும். போனு......போனது தான்.

ரகு :—சீ, சீ! நான் சொல்றேன் கேளு. ஜயிக்காது! போன தபாவே பாத்தேன். அது பாதி தூரம் வரச்சேயே, தம் வாங்கிப் போச்சு. ரொம்பக் கிழம்.

ஸ்ரீநி :—நீர் சொல்றது என்னுய்யா? அபசகுனக் குடுக்கை யாட்டமா! உம்மைப் பக்கத்லே வெச்சுண்டு யோசனெ பண்ருனே மனுஷன்!

ரகு :—‘சாண்டிக்ளீர்’ மேலே கட்டு. டில்லான் ஏறறன். அல்லாத்தையும் அதுமேலே கட்டு.

ஸ்ரீநி :—தலே மேலே துணியெப் போட்டுக்கினு வீட்டுக்கு வா! இல்லே?

[ஹெட் கிளார்க் கோபாலையங்கார் வருகிறர்.]

ஸ்! ஸ்! மேஸ்திரி வரார்.

கோபா :—என்ன ஸார் இது? ராயரே! இந்தக் கடியாரம் ரொம்ப ஸ்லோபோல இருக்கே!

வேங் :—ஏன் ஸார்?

கோபா :—இதோ பாருங்கோ! என் கடியாரத்திலே பதினெண்ணு அடிக்க அஞ்சு நிமிஷம் காட்டறது; இந்த எழவிலே பத்தே முக்கால் ஆயிருக்கு.

வேங் :—உங்க கடியாரம்தான் பாஸ்டோ என்னமோ?

கோபா :—அதென்ன கர்மமோ? இந்த வேலையும் போதும், நான் சாகறதும் போதும். யார் ஸார் அங்கே லொட லொடன்னு கத்தறது? ஓஹோ! ஐயர்வாளும் நாயுடுவுமோ? எப்பவும் ஊர் வம்புதான்.

ஸ்ரீநி :—அண்ணு! போன சனிக்கிழமை ஒரே ஆஸாமி 'டபிள் ஈவென்டி'லே டிக்கெட் வாங்கினுன். எட்டாயிரம் ரூபாய் வந்தது பத்து ரூபாய்க்கு!

கோபா :—அட எழவே! எனக் கெதுக்கு இந்த எழவெல்லாம்? இந்த ஜன்மத்திலே உங்களுக்கு வரப் போறதில்லே. ஏனய்யா சம்பாதிக்கற ரூபாயெக் கொண்டு தொலேக்கிறீங்க?......எங்கே, பாக்கிப் பேரெல்லாம் வந்தாச்சா?

ரகு :—வந்துட்டாங்க. ஏன் ஸார்? நேற்று என்னமோ போலீஸ் இன்ஸ்பெக்டரோடெ ரொம்ப நாழி பேசிண்டிருந்தீரே? என்ன விசேஷம்?

கோபா :—அட நாசமாப் போன நாயுடு! சத்தம் போடாதே. அவர் தம் மச்சுனனுக்கு ஏதாவது குமாஸ்தா வேலே போட்டுக் கொடுக்கணும்னு கேட்டார், அதைப் பத்தித்தான்.

ரகு :—ஏன் ஸார்? போன 'வேகன்ஸி'யில்தான் பிராமணன் வைச்சாச்சே. இது 'நான்பிராமினு'க்குப் போகவேண்டாமா?

கோபா :—அட, என்ன சனியன்! யாரய்யா இப்பொ அப்பாயிண்ட் பண்ணிவிட்டா? அதுக்குள்ளே கத்தறீரே கெடந்து?

ரகு :—அதப்படி யில்லெ ஸார்! ஞாயப்படி போகணும் ஸார். இல்லாப்போனு பாருங்கோ. எங்களவங்க யாராவது கௌன்ஸிலிலே கேள்வி கேட்டு ரொம்ப ரொம்பத் தகராருகும் ஸார்!

கோபா :—ஸரிதான் போங்க ஸார்! உங்க வேலையைப் பாருங்க ; மாஜிஸ்ட்ரேட் வர சமயமாச்சு.

[ரகுபதி நாயுடு போகிறர்.]

(தனக்குள்) இவ்வளவு கொழுப்பா உனக்கு? வா, வா! பாத்துக்கிறேன். வெளிப்படையாக என்ன ஸார், ராயரே! என்ன விசேஷம்? பேந்தப் பேந்த முழிக்கிறீரே?

வேங் :—ஒண்ணுமில்லே. அந்தப் பயல் வீராசாமி ரொம்பத் துடுக்காப் பேசருன். வேலே ஸரியாச் செய்யறதில்லே. கேக்கப்போனு எதித்து எதித்து வாயாடருன்.

கோபா :—அட க்ரஹசாரமே! எங்கேடா அவன்?

[வீராசாமி வருகிறன்.]

கோபா :—என்னடா இது? உனக்குக் கொழுப்பேறிப் போச்சோ! உன்மேலே ரொம்ப கம்ப்ளெயிண்ட் இருக்கு, தெரியுமா?

வீரா :—அப்படி ஒண்ணுமில்லிங்களே, யசமா! யார் சொன்னுங்க?

கோபா :—வெங்கடரமண ராவ்.

வீரா :—அதுவா? அப்படிக் கேளுங்க, சாமீ! இந்த ராயரு எம்மேலே ரொம்ப நாளா நிகா வெச்சுக்கினுரு ......சும்மாங்காட்டியும் எம்மேலே தப்புப் போட்டு என்னெத் துரத்திப்பிட்டு, அவுரு ஸகலபாடி மவனெக் கொணுந்து மொள்ள சர்க்கார் வேலெலே நொயச் சுடப் பாக்கருருங்க.

கோபா :—சீ! தடிப்பயலே! என்ன போக்கிரித்தனம் வாயிலெ வந்ததெல்லாத்தையும் உளறிண்டு. போ. ஒனக்கு ஒரு ரூபாய் அபராதம் போட்டிருக்கு.

**வீரா** :—யசமா ! உத்தரவு. (முணுமுணுத்துக்கொண்டே போகிருன்.) என்னதானிருந்தாலும் பாப்பாருங் கல்லாம் ஒண்ணுதான். இருக்கட்டும், பாத்துக் கறேன்.

**கோபா** :—என்ன ஸார்? ராயர்வாள்! அந்தப் பயல் சொன்னதைக் கேட்டீரா?

**வேங்** :—சுத்தப்பொய், ஸார்! இந்தப் பியூன்-வேலேக்கா என் பந்துக்களேச் சிபார்சு செய்வேன்?

[முன்னே வெள்ளிப் பூண் போட்ட தடி ஒன்றைக் கம்பீரமாய்ப் பிடித்து டபேதார் நடந்து வர, பின்னல் ஒரு சேவகன் குடை பிடிக்க, கிருஷ்ண சர்மா மெல்ல நடந்து வருகிறர். எல்லோரும் எழுந்து நிற்கிறர்கள். சர்மா தமது மேஜைக்குச் சென்று ஆசனத்தின் மேல் அமருகிறர். ஒரு பியூன் விசிறுகிறன்.]

**சர்மா** :—ஹெட் கிளார்க்! தபால் வந்ததா?

**டபே** :—ஸைலென்ஸ்!

**கோபா** :—எஸ் யுவர் ஹானர்! (ஒரு கத்தைக் கடிதங் களைக் கொண்டு வந்து வைக்கிருர்.)

**சர்மா** :—(அவைகளே ஒவ்வொன்ருய்ப் பிரித்துப் பார்த்துக் கொண்டே) என்ன ஸார்? ஒங்க ஒடம்பு தேவலேயா?

**கோபா** :—கொஞ்சம் தேவலே. சேத்து லங்கணம் போட்டேன். அதில் ரொம்ப குணம். அதோ அந்த லெட்டர்தான் நேத்து லீவுக்காக நான் போட்ட அப்ளிகேஷன்.

**சர்மா** :—(அதைத் தனியாய் அப்புறம் வைத்துவிட்டு) பாவம், ஒண்ணுமேயா சாப்பிடவில்லே?

**கோபா** :—அதனுலென்ன? கொஞ்சம் பலஹீனமாக இருந்தது...வந்து கூப்பிட்ட போது வர முடியலே. எக்ஸ்க்யூஸ் பண்ணணும்.

**சர்மா** :—(ஒரு கடிதத்தைப் பார்த்துவிட்டு) ஆல்ரைட். அடடே! இதென்ன இது? டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் இங்கே அடுத்த வாரம் காம்ப் பண்ணப் போருராமே!

**கோபா :**—போன மாஸம்தானே ஜமாபந்தி ஆச்சு? ஏதாவது விசேஷம் இருக்கணும்.

**சர்மா :**—என்ன, ஸார் இது? அவரை எங்கே இறக்கறது?

**கோபா :**—போன தடவை பங்களாவில் இறங்கினர்.

**சர்மா :**—அது கூடவே கூடாது. ஜல சௌக்கியமே கிடையாதே அங்கே. அந்தப் பெரிய தோப்பிலே கூடாரங்கள் அடிச்சுண்டு இருந்தால் ரொம்ப ஜில்லுனு இருக்கும். மிஸ்ஸஸ் ராஜுவும் வராப்பலே இருக்கு.

**கோபா :**—அது ரொம்பக் கஷ்டமாச்சே! அந்தத் தோப்பு, பொன்னியம்மன் கோவிலைச் சேர்ந்தது. அதில் எப்பவும் காம்ப் பண்ண, தர்மகர்த்தா விடறதில்லையே.

**சர்மா :**—நான்ஸென்ஸ்! அந்தச் சுடலைமுத்துக் கவுண்டன் தான் செத்தானே. அவன் பெண்டாட்டியும், மைனர்ப் பிள்ளையுமா நம்மைத் தடுக்க முடியும்? நாளைக்கு நீங்க ஒரு கான்ஸ்டேபிளை அழைச்சுண்டு போய் மிரட்டிவிட்டு வாங்க! ஒண்ணுமிராது.

**கோபா :**—ஸரி! மற்ற விஷயங்கள் எப்படி ஏற்பாடு?

**சர்மா :**—என்னய்யா இது? உமக்குத் தெரியாதோ? அந்த ராமையக் கவுண்டனிடம் சொல்லி நல்ல காப்பிக்கொட்டை, சர்க்கரை, பழ டின்கள், பீர் ஒரு கேஸ், இன்னும் ஏதாவது ஸ்வீட், போக்குவரத்து எல்லாம் கொண்டுவைக்கச் சொல்லும்.

**கோபா :**—சமையல் சாமான்?

**சர்மா :**—அவர் தம் பட்லரை அழைச்சுண்டு வருகிறாராம்: ஹரிஜன் போல இருக்கு. காலங்காத்தாலே நல்ல இட்லி, வெள்ளைச் சாளிக்ராமம், புது மீன் இதெல்லாம் வேணுமாம். அந்தத் தடியன் சிங்காரச் செட்டி வரான் பாருங்கோ நம்மிடம், அவன்கிட்டச் சொல்லி எல்லாம் ஏற்பாடு பண்ணிவிடுங்கோ.

**கோபா :**—பால் தயிர் வகைரா, யுவர் ஹானர்!

சர்மா :—என்ன ஸார் இது? ஒண்ணும் முன்னே பின்னே தெரியாதவர் போலக் கேக்கறீரே? அந்தத் தடியன் வடிவேலு நாய்க்கனிடம் சொன்னீரானா அவனுக்கு அநேக இடப்பசங்களைத் தெரியும். ஏற்பாடு பண்ணிடுவான்—மளிகைச் சாமான்கள் மொத்தமும் அந்தக் கேசவ முதலியை ஏற்பாடு பண்ணச் சொல்லி டுங்கோ. அவன் கையை மாத்திரம் கொஞ்சம் இழுத்துப் பிடிக்கச் சொல்லுங்கோ. ஒண்ணும் புகார் இல்லாமல் பார்த்துக்கும்படியா நம்ப நம்மாள்வார் நாயுடுவை அங்கேயே நேட்டி போட்டுவிடும்.

கோபா :—எஸ், யுவர் ஹானர்!

சர்மா :—அவா எல்லாரையும் பில் தயார் செய்து எனக்கு அனுப்பச் சொல்லும். பாவம், சாமான் ஸப்ளை செய்ததற்குப் பணம் கொடுத்துவிட வேண்டாமா?

கோபா :—(ரொம்ப சந்தோஷத்துடன்) அப்படியே, யுவர் ஹானர்! ஸாதாரணமா அவா பில் பண்ணிக் கேழ்க்கப் பயப்பட்டுண்டு சும்மா இருந்து விடுவா. பணம் கொடுத்துட்டேளோ சந்தோஷம் சொல்லி முடியாது.

சர்மா :—ஏதாவது ஸில்லியாப் பேசாதேயும். என்னை யார் என்று நினைத்துக் கொண்டீர்? பிரிட்டிஷ் ஜஸ்டிஸை இந்தத் தேசத்தில் நிலை நிறுத்தும் கல் தூணுக்கும்! யாராயிருந்தாலும் அவனவனுக்குச் சேர வேண்டியதைக் கொடுத்து விட வேணும், தெரியுமா?

கோபா :—யுவர் ஹா......

சர்மா :—ஆல்ரைட்! நான் இன்று சீக்கிரம் போக வேணும். சின்னக் கேஸா ரெண்டு, மூன்று முடிச்சுவிட்டுப் போகிறேன்...........கட்சிக்காரன், வக்கீல் எல்லாரையும் வரச் சொல்லும்.

[வக்கீல்கள், குமாஸ்தாக்கள் முதலியவர்கள் வருகிறார்கள்.]

## காட்சி 4

டபே :—ஸைலென்ஸ், ஸைலென்ஸ்......

ரகு :—மாணிக்கம் !

டபே :—மாணிக்கம் ! மாணிக்கம் !! மாணிக்கம் !!!

சர்மா :—வாரண்ட் அனுப்பு. ஆசாமி யாரு ?

ரகு :—விஜயராகவ பிள்ளை, மோட்டார் ட்ரைவர். லைஸென்ஸ் ஆஜர் பண்ணலேன்னு போலீஸ் சார்ஜ்.

சர்மா :—உடனே வாரண்டு அனுப்பு. இந்தப் பசங்க எப்பவும் இப்படித்தான். போலீஸ் உத்தியோகஸ்தர்களைப் பார்த்துச் சரிப்படுத்தி விடலாமென்று தைரியம். கம் ஆன், நெக்ஸ்ட் கேஸ் !

ரகு :—தங்கவேலு கிராமணி !

டபே :—தங்கவேலு கிராமணீ ! தங்கவேலு கிராமணீ !! தங்கவேலு கிராமணீ !!!

[தங்கவேலு கிராமணி வந்து கூட்டில் நிற்கிறன். வக்கீல் சுந்தரராஜையங்கார் எழுந்து நின்று]

சு. ரா. ஐ :—யுவர் ஹானர் ! நான் எதிரிக்காக ஆஜராகிறேன்.

[பிரசிக்யூஷன் இன்ஸ்பெக்டர் சுப்பையர் எழுந்து]

சுப் :—அப்காரி சட்டப்படி சார்ஜ்.

சர்மா :—கேஸ் நடத்தலாமா ?

சுப் :—சாக்ஷிகள் வரவில்லை ; வாய்தா வேணும்.

சர்மா :—ஆல்ரைட், ஏப்ரில் முதல் தேதி. நெக்ஸ்ட் கேஸ் !

ரகு :—கிருஷ்ணராவ் !

டபே :—குஷ்டராவ் ! குஷ்டராவ் !! குஷ்டராவ் !!!

[கிருஷ்ண ராவ் வந்து கூட்டில் நிற்கிறன்.]

நா. ராவ் :—எதிரிக்காக நான் ஆஜராகிறேன் ; வக்காலத்துப் போட்டிருக்கேன்.

சர்மா :—எதிரிக்கு என்ன தொழில் ?

சுப் :—காப்பிக் கிளப்.

சர்மா :—ஓஹோ ! சார்ஜ் என்ன ?

நா. ராவ் :—அவர் ஒண்ணும் நெய்யில் கலக்கவே இல்லே. இது பொய்க் கேஸ்.

சர்மா :—குறுக்கே பேசாதேயும் ! என்ன வக்கிலய்யா நீர்? உம்மைக் கேக்காத போது குறுக்கே விழுந்து பேசிண்டு ? என்னய்யா கிருஷ்ணராவ் ! உம்ம ஹோட்டல்லே டிபன் எல்லாம் எதுலே செய்யறீர் ? கெரஸின் ஆயிலா ? மோபில் ஆயிலா ?

கி. ராவ் :—நல்ல பசும் நெய்யிலே செய்யறேனே, ஸ்வாமி ! தயவு செய்து பத்து நாள் வாய்தாக் கொடுத்தால், நான் செய்யற பக்ஷணங்களெல்லாம் கோர்ட்டாருக்கு ஸாம்பிள் அனுப்பறேன். கோர்ட்டாருக்கே தெரியும்.

நா. ராவ் :— இந்தப் பிராஸிக்யூஷன் ...

சர்மா :—குறுக்கே பேசாதிங்கோ, ஸார்.

ரகு :—என்ன ஸார் ! ஒருதரம் தான் சொன்னூரே, சும்மா யிருங்கோளேன்...அப்புறம் அவாளுக்குக் கோபம் வந்துடும், ஸார்.

நா. ராவ் :—கோர்ட்டார் மன்னிக்கணும் !

சர்மா :—என்னய்யா ராயரே ! ரொம்ப யுக்தியாப் பேசறீரே. பசும் நெய் எங்கே வாங்கறீர் ?

கி. ராவ் :—மாயவரத்திலேந்து ரயில்லே வர்ரதுங்க ! ஒரு டின் கோர்ட்டாருக்கு ஸாம்பிள் அனுப்பறேன், வர வாய்தாக்குள்ளே. துரைவாளே ! நான் ஒரு தப்பும் செய்யலே ! போலீஸார் வீணு என்னைத் தொந்தரவு பண்ருா !

நா. ராவ் :—யுவர் ஹானர் ! சாட்சிகளுக்குப் படி கட்டிக் கூட ஒருவரும் வரவில்லே. பத்து நாள் வாய்தா கொடுத்தா......

சர்மா :— உட்காரையா நீர் ! உமக்கு எத்தனை தரம் சொல்றதய்யா ? நெலத்திலே விழுந்த நெல்லிக் காயாட்டமா குதிச்சுண்டு. அட ராயா ! உனக்குப்

புத்தியில்லே? வேறே வக்கீல் ஆப்படலே உனக்கு? ஜட்ஜ்மெண்டுக்குப் பத்துநாள் தள்ளிப் போட்டிருக்கேன்.

நா. ராவ் :—ஜட்ஜ்மெண்டா?

சர்மா :—பின்னே என்ன? எல்லாம்தான் விசாரிச்சு ஆச்சே; இன்னும் என்ன? உங்க பீஸ் வந்துடுத்தோ, இல்லையோ! ரொம்ப ஸரி, ராயா! நீ கேட்டுக் கொண்டபடி பத்துநாள் வாய்தா கொடுத்திருக்கேன். அடுத்த வாய்தா அன்னிக்கித் தீர்ப்புச் சொல்போ.

நா. ராவ் :— (பக்கத்தில் இருக்கும் மற்றொரு வக்கீலிடம்) ரொம்ப ஸரி! நேற்று பெஞ்சு அனுப்பாததுக்கு எனக்கு மரியாதை! கோர்ட்டாருக்குப் பத்து நாளைக்கு டிபன், ஒரு டின் மாயவரம் பசும் நெய் வரவு.

* * * *

ரகு :—நியூஸென்ஸ் கேஸ். முத்துஸாமிப் பண்டாரம்.

டபே :—முத்துஸாமிப் பண்டாரம்! முத்துஸாமிப் பண்டாரம்!! முத்துஸாமிப் பண்டாரம்!!!

சர்மா :—அடெடே! இந்தக் கேஸெல்லாம் இன்னிக்கி வேண்டாமென்று பார்த்தேன். ஸரி, பார்ட்டீஸ் வந்துட்டார்களா? இது ஒண்ணை மாத்திரம் டிஸ்போஸ் பண்ணிப்பிட்டு நான் சீக்கிரமா வீட்டுக்குப் போகணம்—மற்றக் கேஸெல்லாம் அட்ஜர்ன்.

[முத்துஸாமிப் பண்டாரம் வந்து பெட்டியில் நிற்கிறன்.]

சுப் :—யுவர் ஹானர்!

ரகு :—அடே! முத்துஸாமிப் பண்டாரம்! நீ நேற்று சாயந்திரம் பப்ளிக் ரோட்லே ஒழுங்கு தவறி நடந்து நியூஸென்ஸ் பண்ணினையாம். செய்ததாக ஒப்புக் கொள்கிறாயா?

முத் :—தர்ம தொரயே! நானு நடந்தத்தை நடந்தபடி சொல்றேனுங்க, அவ்வளவும் அக்ரம்பு.

*ரகு :—குற்றஞ் செய்யவில்லையாம்.*

*சுப் :—கான்ஸ்டேபிள் 642 !*

*டபே :—642 ! 642 !! 642 !!!*

[642-ம் நெம்பர் கான்ஸ்டேபிள் சாக்ஷிக் கூண்டில் ஏறுகிறன்.]

*சுப் :—642 ! நேற்று என்ன நடந்தது ?*

*642 :—நேற்று சாயந்தரம் எனக்கு மேல் வீதி பீட்லே பகல் டூட்டி. சுமார் 5-30 மணிக்கு சம்பந்த முதலியார் வீட்டுக்கு எதிரே, எதிரி தலைமேலே பழக் கூடையும், கையிலே பழத் தட்டும் வச்சுக்கினு போகயிலெ......*

*ரகு :—என்ன பழம் ?*

*642 :—மாம்பழம். எதிரி போயிக்கினு இருக்கக்கொள்ள இரண்டு ஐயமாருங்க வந்து எதிரிகிட்ட பேரம் பேசினுங்க.*

*சுப் :—பியூன் ! ராமா சாஸ்த்ரி, காமா சாஸ்திரி என்று கூப்பிடு.*

*டபே :—ராமா சாஸ்திரீ ! காமா சாஸ்திரீ !*

[ராமா சாஸ்திரியும் காமா சாஸ்திரியும் உடம்பெல்லாம் நடுங்கிக்கொண்டு, தாண்டுகால் போட்டு வைதிக நடையாய் மெள்ள வருகிறர்கள்.]

*642 :—ஆமா ! இவங்கதான் வந்து பேரம் பேசினுங்கோ.*

[சாஸ்திரிகள் ஒருவரையொருவர் பார்த்துப் பேந்தப் பேந்த விழிக்கிறர்கள்.]

*டபே :—நீங்க போங்க திரும்பி !*

*ராமா :*
*காமா :* } *நல்ல வேளை !*

[சிரித்துக்கொண்டு கோர்ட்டாருக்கு நமஸ்காரம் செய்து விட்டு அவசரமாகப் போகப் பார்க்கிறர்கள்.]

சுப் :—போய்விடாதீங்க! வெளியிலே காத்திருங்க.

[சாஸ்திரிகள் இருவரும் விசனத்துடன் மெள்ளப் போகிறார்கள்.]

642 :—அந்த ஐயமாரு கேட்டதுக்கு எதிரி மரியாதெ இல்லாத பேச்சுங்க சொல்லி, அவங்களே வம்புக்கு வலிச்சானுங்க. அதுக்குமேல் அவங்க கோவம் பண்ணிக்கினு இவனெத் திட்டினுங்க! எதிரி ரொம்ப உரத்த குரல்லே அவுங்களெக் கன்னு பின்னுன்னு திட்டினுன். நானு எவ்வளவு அடக்கினுலும், கேக்கலிங்க. அதுக்கு மேலேதான் நானு கேஸ் நோட் பண்ணிட்டேன். நானு ஸ்டேஷனுக்கு இட்டுக்கினு வர வழியெல்லாம் வாயிலே வந்தபடி சொல்லக் கூடாத வார்த்தெயெல்லாம் கத்திக்கினு வந்தானுங்க. அவ்வளவு தான்.

ரகு :—பண்டாரம்! நீ இந்தச் சாக்ஷியெ ஏதானும் கேக்கணுமா?

முத் :—ஏம்பா! அந்த ஐயமாரு என்னெ அடிக்கவல்லே?

642 :—இல்லெ.

முத் :—அவுங்க என்னெச் சும்மாப் பழம் கேக்கலே?

642 :—எனக்குத் தெரியாது.

முத் :—அட பாவி! ஒன்னே வாரி வெய்யல்லே போட!

டபே :—ஸைலென்ஸ்!

ரகு :—ராமா சாஸ்திரி!

டபே :—ராமா சாஸ்திரீ! ராமா சாஸ்திரீ!

[ராமா சாஸ்திரி முன்போல வந்து பெட்டியில் ஏறுகிறார்.]

சுப் :—என்னய்யா சாஸ்திரிகளே! நேற்று ஸாயங்காலம் இந்த எதிரியை நீங்க பார்த்ததுண்டா?

ராமா :—நேத்துக் காலம்பர கரகரனு போது விடியச்சே...

சுப் :—ஓய்! கதையெல்லாம் நிறுத்தும்! கேட்டதுக்குப் பதில் சொல்லும்.

ராமா :—ஆமாம், உண்டு.

சுப் :—உம்மோடே யாரிருந்தது ?

ராமா :—காமா சாஸ்திரிகள்.

சுப் :—என்ன நடந்தது ?

ராமா :—நாங்க இந்தப் பயலண்டெ காலம்பற மாம்பழம் வாங்கினோம். அது தித்திப்புன்னு சொல்லி வித்தான் —நறுக்கி ஒரு துண்டத்தை வாயிலே போட்டா, பல்லுப் பூடவே பூடுத்து. ராக்ஷஸப் புளிப்பு.

சர்மா :—ஓய்! போன பல்லுகளே இப்படி யிருந்தா, அதுக்கு முன்னே எப்படித்தா னிருந்திருக்குமோ ?

ராமா :—கோர்ட்டார்வாள் தயவு! ஸாயந்தரம் சம்பந்த முதலியார் வீட்டுலெருந்து கீழே இறங்கினோமோ இல்லையோ, பயல் எதிரே வந்து அகப்பட்டுண்டான்.

சர்மா :—அவர் வீட்டுக்கு ஏனய்யா போனீர் ?

ராமா :—அவா நமக்கு ரொம்ப வேண்டியவா. ஸம்ஸ்க்ருதம் படிக்கிறா என்னோடே.

சர்மா :—சரி, சரி; கதையை முடியும்,

ராமா :—இங்கே கோர்ட்டாருக்குக்கூட அவா ரொம்ப வேண்டியவான்னு கேள்வி. பயலைப் பிடிச்சுண்டு கேட்டா, ஒரே கஜப் புளுகாப் புளுகறான். நீங்க எங்கே என்னண்டே பழம் வாங்கினிங்கோ இங்கறான் !

முத் :—பழம் வாங்கற மூஞ்சியைப் பாருங்க!

ரகு :—ஸ்...ஸைலென்...ஸ்

ராமா :—அப்புறம் மிரட்டிக் கேட்டா...அதான் காமா சாஸ்திரிகள் மிரட்டிக் கேட்டார். பயல் வாய்க்கு வந்தபடி ஏகத்தாரு வர்ணாச்ரமம் இல்லாதே தூஷிக்க ஆரம்பிச்சான். அந்த மட்டும் அப்பொ இந்த உத்யோகஸ்தர்...(642-ஐக் காட்டி) வந்து...

சர்மா :—போதும்! எதிரி கேள்வி கேட்கட்டும்.

முத் :—ஏன் சாமி! நீயும் இன்னொரு ஐயரும் வந்து என்னண்டே பழம் சும்மா கொடுக்கச் சொல்லிக் கேக்கலே ?

ராமா :—அட ராமா! நாங்களா ?

முத் :—ராவைக்கு ஐயாவெ (சர்மாவைக் காட்டி)ப் பாக்கப் போறதாயும், வெறுங் கையோட போவக் கூடாது, அரை டஜன் பழம்—கொஞ்சம் அழுகி, அதுங்கி யிருந்தாக் கூடப் பரவாயில்லே, தண்டத்துக்குக் கொண்டு தொலேக்க அது போதாதா என்னும் என்னே நீங்க கேக்கலே ?

ராமா :—(உடல் நடுங்க) அட சண்டாளப் பாவி! ஐயோ! நாங்களா அப்படிச் சொன்னேம்? ஒன் தலேலே இடி விழுந்துடும்டா!

சர்மா :—அப்புறம், இன்னும் என்ன சொன்னுங்க, கேளு?

ராமா :—ஸ்வாமி! இந்தத் துஷ்டன்......

சர்மா :—குறுக்கே பேசாதீர்!

முத் :—ஏன் சாமி? நானு ஏழைன்னு சொன்னத்துக்கு உங்கூட வந்த ஐயரும் நீயும் ரெண்டு பழமாவது கேட்டிங்களா, இல்லெயா?

ராமா :—உன் நாக்குப் புழுத்துத்தான் போகும்!

முத் :—அப்பறம் நீங்க, புளிக்கற மாம்பழத்தைக் கொண்டு கொடுத்தா, மனிசன் நாயாட்டமா விழுவான்; அதைவிட ரெண்டு எலிமிச்சம்பழத்தெ எடுத்துக்குனுபோனு, செலவுக்குச் செலவும் குறச்சல்; அத்தெக்கூட விடாதுங்க அல்பங்க; ஊறுகா போட்டுச் சாப்பிடுவா. அவனும் அவனும்படை யாளும்'...இப்படி எல்லாம், ஐயாவெத் திட்டிட்டு, என்னெத் தடியாலே அடிக்க வரலே நீங்க?

[ராமா சாஸ்திரி ஒன்றும் சொல்ல முடியாமல் விழிக்கிறர். இதற்குள் வெளியே "அடே, பிடி! பிடி! பிடி! ஆள் ஓட்றன், ஓட்றன்" என்று ஏகக் கூக்குரல் கேட்கிறது.]

சர்மா :—என்ன கூச்சல் அங்கே ?

642:—(மூச்சுத் திணற ஓடிவந்து ஸலாம்செய்து) இந்தச் சாக்ஷியோட கூட வந்த இன்னெரு ஐயரு, அந்த

மூலேலே நின்னுக்கினு இருந்தவரு, திடீருன்னு, துணியெ இளுத்துக் கட்டிக்கினு ஓட்டம் புடிச்சாரு... அடுத்தபடி அவர்தான் சாக்ஷி சொல்லணும் எசமான்!

[ராமா சாஸ்திரி இடி விழுந்தவர்போல் நிற்கிறர்.]

சர்மா :—ஐயா! போதும் உம்ம பொய்ச் சாக்ஷி!...பண்டாரம்! ஒனக்கு யாராவது சாக்ஷி உண்டா?

மூத் :—சாமி! இந்த ஐயரு சொன்னது சுத்தப் பொய். எம் பழம் புளிப்பு இன்னுங்களே; சாமி! நல்ல வேளெ, அந்த மவராசன் உங்க கோர்ட்டிலே வேலெயா இருக்காரே, இதோ! இதோ! எங்கப்பன் (கோபாலெயங்காரைக் காட்டி) இவருதான் நேத்து ஆறு டஜன் பழம் வாங்கினுரே. இவரு சொல்ல மாட்டாரா?

[கோபாலெயங்கார் கைதியைப் பார்த்துச் சைகை செய்கிறர்.]

சர்மா :—என்னடாது? நான்ஸென்ஸ் பேசறயே? இன்ஸ்பெக்டர்! இது சரியான கேள்வியா?

சுப் :—(கோபாலெயங்கார் ஏதோ சொன்னதைக் கேட்டுவிட்டு) கேஸுக்குச் சம்பந்தமே யில்லே, யுவர் ஹானர்!

மூத் :—என்னுங்க, சம்பந்தமில்லேன்றிங்களே! இந்த ஐயரு—எங்கப்பன் நல்லாயிருக்கணும்—எங் கண்ணெதிரே ஆறு பழத்தை அரிஞ்சுஅரிஞ்சு திண்ணுரே. புளிப்பா யிருந்தால் திண்ணுவாரா? சாமி, புளிச்சுதா அந்தப் பழம்?......

சர்மா :—ஹெட் கிளார்க்! இங்கே வாரும்.

[கோபாலெயங்கார் வந்து நிற்கிறர்.]

சர்மா :—ஏண்டா, இவருக்கா ஆறு பழம் வித்தே?

மூத் :—ஆமாங்க!

சர்மா :—என்னிக்கி?

மூத் :—நேத்து மத்யானம் மூணு மணிக்கு.

சர்மா :—அடே! ஜாக்ரதையாய்ப் பேசு. அவருக்கு—பாவம்!—நேற்று முழுதும் ஜுரம் கண்டு ஒரு வாய் ஜலம் கூடக் குடிக்கலெ. பழம் சாப்பிட்டாருன்னு பொய் சொல்றயா, அயோக்யா?

முத் :—சாமீ! அவரு தண்ணி குடிச்சாரோ, இல்லியோ, எனக்குத் தெரியாது. எங்கண்ணுலெ பாக்க, ஒண்ணு ஒண்ணு ஆறு பெரிய மாம்பழத்தைக் கத்தியாலெ அரிஞ்சு அரிஞ்சு தின்னுட்டுப் பாக்கியெ உள்ளெ கொண்டு வைக்கச் சொன்னுரு. அவரெயே கேளுங்க. பொய் சொல்ல மாட்டாருங்க, பெரிய நாமத்தைப் போட்டுக்கினு, பெருமாளாட்டம் இருக்குருரு!

சர்மா:—என்ன ஸார்? ஹெட் கிளார்க், என்ன சொல்கிறீர்?

கோபா :—யுவர் ஹானர், இந்தப் பயல் பொய் சொல்ருன்.

சர்மா :—என்னடா பண்டாரம்! நீ பொய் சொல்றேன்னு இவர் சொல்ருர்.

முத் :—தொரயே! அவரு மாத்ரம் சத்தியம் பண்ணி நான் சொன்னது பொய்யின்னு சொல்லிடட்டும்.

சர்மா :—ஆல்ரைட், கோபாலையங்கார்! கூண்டில் ஏறும்!

கோபா :—இதென்ன? என்னை ஏதுக்கு வீணு வம்புலே இழுக்கணும்?

[முணுமுணுத்துக்கொண்டே மெல்லப் போய்க் கூண்டில் ஏறுகிறார். பெஞ்சு குமாஸ்தா சத்தியம் செய்ய வைக்கிறார்.]

சர்மா :—என்ன ஸார்? இந்தக் குற்றவாளி உம்மைப் பத்திச் சொன்னதைக் கேட்டீரா?

கோபா :—ஆமாம்.

சர்மா :—அது வாஸ்தவமா?

கோபா :—அது...அது...பொய்...நான்....நேற்று மாம்பழம் வாங்கவே இல்லை......அப்படி வாங்கி..... நான்...... சாப்பிடவுமில்லே!

முத் :—சாமி! சாமி! இதோ பாரு. வெங்கடாசலபதி மேலே! தா...இரு! இரு!

[தன் மடியிலிருந்து க்சங்கிப்போன ஒரு காகிதத்தை எடுத்துச் சர்மாவிடம் கொடுக்கிறன்.]

இதெப் பாருங்க! இதுலே எதானும் இருக்குமோ என்னமோ? இத்தெ எளுதிக் கொடுத்தது யாரோ, சீநிவாசையராமே, அவரு கிட்ட கொடுத்தாப் பழத்துக்கு ரூபா கொடுப்பாருண்ணுரு. நானு கொண்டு கொடுக்கக் கொள்ளப் போலீசுப் புலிங்க வந்து புடிச்சிக்கிணுங்க.

சர்மா :—(அதைப் படித்துப் பார்த்து) ஹா! ஹா! பேஷ், நீர் எழுதியதைப் படிக்கிறேன் கேளும் :—

"டியர் ஸ்ரீநிவாஸையர்,

இதைக் கொண்டு வரும் பழக் கடைக்காரனிடம் ரூபாய் 9-(ஒன்பது மாத்திரம்) கொடுக்கவும் நான் பணத்தை அடுத்த மாதம் முதல் தேதி திருப்பிக் கொடுத்து விடுகிறேன். நீங்களும் கொஞ்சம் பழம் வாங்கிக் கொள்ளுங்கள். பழம் ரொம்ப நன்ரு யிருக்கிறது. இப்பொழுதுதான் நான் மட்டும் ஆறு பழம் தின்னேனென்ருல் ஆச்சரியப் படுவீர்கள்.

தங்கள்,
டி. கோபாலையங்கார்"

இது உமது கையெழுத்துத்தாஞ? நன்ருகப் பார்த்துப் பதில் சொல்லும்.

கோபா :—(வாயெழாமல்) ஆமா...

சர்மா :—நேற்றுத் தேதி போட்டிருக்கிறது. அது ஸரிதாஞ?

கோபா :—ஆ...மா...

சர்மா :—நீர் போகலாம். இந்தக் கேஸ் சுத்தப் பொய்க் கேஸ். எதிரியை அக்விட் பண்ணுகிறேன்.

ரகு :—முத்துஸாமிப் பண்டாரம்! நீ குற்றம் செய்ய லென்னு சொல்லி விடுதலே செய்துட்டா கோர்ட்டார். நீ போ!

முத் :—தர்ம தொரெயே! நீ நல்லா ரொம்ப நாளெக்கி இருக்கணும்.

[போகிறன்.]

சர்மா :—கோபாலேயங்கார்! உங்கள் விஷயம் ரொம்ப ஸீரியஸ். அதைப் பத்தி என்ன ஸ்டெப் எடுக்கற துன்னு நான் யோசனே பண்ணணும்.

[எழுந்து போகிறர். கோர்ட் கலேகிறது.]

## காட்சி 5

### சுல்தான் பேட்டைக்குப் பக்கத்தில் ஏரிக்கரை

[கோபாலேயங்காரும் ஸப்-இன்ஸ்பெக்டர் சுப்பையரும் வருகிறர்கள்.]

சுப் :—எங்கே! நேத்து சாயங்காலம் இந்தப் பக்கம் வரவேல்லியே.

கோபா :—ஸ்வாமி! ஒரே ஒரு வார்த்தையிலெ சொல்லி விடறேன். ஸர்க்கார் உத்தியோகம் பண்றதை விடச் சாவடியிலே ஒக்காந்து...

சுப் :—சே! சே! சே! நீங்களா இப்படியெல்லாம் பேசறது? எங்கேயும்தான் தொல்லேயிருக்கு. கொஞ்சம் பொறுமையாய் இருங்கோ. போகட்டும்...நேத்து என்ன நடந்தது?

கோபா :—விசேஷம்தான்! என் தலேக்கே வந்துட்டுது. ஏற்கெனவே என்மேலே புது மாஜிஸ்ட்ரேட் காரம்... ஒரு எழுவெடுத்த நைட்-கேஸ்லெ அஸம்பாவிதமா...

சுப் :—எல்லாம் தெரியும். அது கொஞ்சம் அன்ஃபார்ச்சுனேட் தான். எசகு பிசகாத் தலே குடுத்துட்டிங்க.

கோபா: கிரஹசார வேளை ஸார், கிரஹசார வேளை! ஆச்சு, கலெக்டர் காம்ப் வேறெ வரது. அது முடியற மட்டும் அஷ்டமத்திலெ சனிதான்.

சுப்:—கலெக்டர் எதுக்கு வரார் தெரியுமா?

கோபா:—நான் என்னத்தைக் கண்டேன்! என்னமோ காதிலே விழுந்தது. அதை நாம் சொல்வானேன்... அப்புறம்...

சுப்:—ஸார்! எங்கிட்டெச் சொன்னு என்ன ஸார்?

கோபா:—அட எழவே! எனக்கெதுக்கு ஸார்? வம்பு வழக்கு! ஏதோ ஸ்பெஷல் இன்வெஸ்டிகேஷன்னு சொல்லிக்கரு.

சுப்:—எது விஷயமா ஸார்?

கோபா:—அட ராமா! எனக்கென்ன எழவு ஸார்! இதெல்லாம்? ஏதோ எக்ஸாமினேஷன் பேப்பர் திருட்டுப் போனதைப் பத்தின்னு கேள்வி.

சுப்:—ஓஹோ! ஓங்க டிபார்ட்மெண்டல் டெஸ்டோ? மிஸ்டர் சர்மா மொதல்லே பாஸ் பண்ணுரில்லே!

கோபா:—ஆமாம்! மொதல்லெ பாஸ் பண்ணுர்! அது மாதிரி பாஸ் பண்றது கஷ்டமே இல்லையே!

சுப்:—ஓ! அப்படியா ஸமாசாரம்? அப்படித்தான் இருக்கும் ஸார்! யாராவது கலெக்டருக்கு மொட்டைக் கடுதாசி எழுதிப் போட்டானோ என்னவோ?

கோபா:—(திடுக்கிட்டு) நான்...இல்லையே! நான் எழுதலே... அதான்.....யாராவது. ஏதோ சொல்லரா. நான் தெரியாதுன்னு சொல்ல வந்தேன்!

சுப்:—ஸரிதான்! இருக்கும், இருக்கும்! அதான் நன்னுத் தெரியரதே! உட்டுடுங்கோ ஸார், அந்த ஸப்ஜெக்ட்டை.

கோபா:...அதுக்குத்தான்—ஸார், மத்தவா விஷயத்திலே இண்டர்ஃபியர் (Interfere) ஆறதுல்லே. நான் கொஞ்சம் அவசரமாப் போகணும், வரேன்.

[போகிறர்.]

சுப் :—கலெக்டருக்கு மொட்டைக் கடுதாசி அனுப்பிச்சது யார்ன்னு நன்னு வெட்ட வெளிச்சமா தெரிஞ்சு போச்சு. இன்னம் கொஞ்சம் பொலன் விசாரிச்சா...

[வேங்கடரமண ராவ் பிரவேசிக்கிறர்.]

வாருங்கோ, ராயர்வாள்! நீங்க டாலுக் ஆஃபீஸ்லே தானே க்ளார்க்? இப்படி ஸாயங்காலம் ஏரிக் கரையிலே, காத்து வாங்க வந்தாப்போல் இருக்கு.

வேங் :—ஆமாம்! அதான்! நான் மாத்ரம் வந்தேன்.

சூப் :—ஸரிதான், ஸரிதான்! இருக்கும்.

வேங் :—நீங்க ஸந்தேகப் படராப்போல இருக்கு. ஊரிலே கண்டவா கண்டபடி பேசுவா! அதை யெல்லாம் காதுலே போட்டுக்கப் படாது. அது லெயும் இது, ரொம்பக் கெட்டுப்போன ஊர் இது!

சுப் :—கோயட் ரைட்; நாமென்ன செய்யலாம்? ஊர் வாயை மூட முடியாது.

வேங் :—நாம் நேர கண்ணுலே பாத்தாக்கூட சொல்லக் கூடாது ஸார்! ஒண்ணு மில்லே பாருங்க!

சுப் :— என்ன?

வேங் :—ஒண்ணுமில்லெ ஸார்!

சுப் :—கடக்கட்டும் சொல்லுங்கோ, ஆரம்பிச்சு நிறுத்தி டாதிங்கோ!

வேங் :—உட்டுடுங்கோ, ஸார்! என்னுத்துக்கு?

சுப் :—பரவாயில்லே, சொல்லுங்க ஸார்!

வேங் :—ஒண்ணுமில்லே! ஒரு மாஸத்துக்கு முன்னே ஒரு நாள் ராத்திரி எங்க ஆபீஸ் கட்டடத்துலேந்து ஒரு ஆள் ரொம்ப வேகமா வெளியே போச்சே பார்த்தோம்...அதான் பாத்தேன்!

சுப் :—ஊ...ம்.

வேங் :—செ! ஆளு நடக்கிறது, வாட்டம் எல்லாம் பாத்தா...

சுப் :—யாராட்டமா இருந்தது?

**வேங் :**—எங்க...ஸார்! ஐ ஆம் ஸாரி ஐ ஸ்டார்ட்டேட் தி ஸப்ஜெக்ட் (I am sorry I started the subject).

**சுப் :**—கடக்கட்டும் ஸார்! என்கிட்டெ சொன்னு என்ன ஸார்? யாராட்டமா?

**வேங் :**—அட கோபால கிருஷ்ணு! எங்க மாஜிஸ்ட்ரேட் மிஸ்டர் சர்மா மாதிரியே இருந்தது. ஆனு அது என்னு ஸார்? அவரு அந்த வேளையிலெ ஏன் ஸார் ஆபீஸுக்கு வரார்? அதுனுலெ சும்மா இருந்துட்டோம்! அதான் இருந்துட்டேன்!

**சுப் :**—அது என்னிக்கு ஸார்?

**வேங் :**—(யோசித்து) காத்து மழை அடிச்சுதே, அதுக்கு முன் நாள்.

**சுப் :**—அதாவது, டிபார்ட்டுமெண்டு பரீக்ஷைக்கு மொதல் நாள் ராத்ரி.

**வேங் :**—கோயட் ரைட்.

**சுப் :**—எக்ஸாமினேஷன் கோஸ்டின் பேப்பர்ஸ் ஆஃபிஸ் டேஸ்கிலே தானே இருந்தது?

**வேங் :**—ஆமா ஸார்! ஓ! ஆ!...ஸார்! ஸார்! எங்களை இழுத்து விடாதிங்கோ!

**சுப் :**—ஒங்களென்னு யார் யாரய்யா?

**வேங் :**—அதான்...என்னை

**சுப் :**—கூட யார் ஸார்? நடு ராத்திரியிலே ஒங்களோடெ ஆஃபீஸ் கட்டடத்துக் கிட்ட?....

**வேங் :**—நான் ஒர்த்தனே ஸார்!

**சுப் :**—பின்னே அடிக்கடி "நாங்க" "நாங்க" இன்னு சொல்லி மறுபடியும் கரெக்ட் பண்ணிக்கறகளே.

**வேங் :**—இல்லெ ஸார்! ராயன் தமிள் அவ்வளவுதான்!

**சுப் :**—ஏன் ஸார்? ஒங்க ஆஃபீஸ் பெருக்கறவ பேரு என்ன?

**வேங் :**—முனியம்மா! ஐயோ எனக்கென்னு தெரியும்? என்னையேன் ஸார் கேக்கரிங்க?

சுப் :—இல்லே! இல்லே! எனக்கு ஒரு சின்ன ஸந்தேகம். இப்பொ எல்லாம் தெளிவாப் போச்சு. தாங்க் யூ, ராயர்! குட் நைட்.

வேங் :—குட் நைட். அட க்ரஹ சாரமே! பெரிய எளவாப் போச்சே! இந்தப் போலீஸ் ஆஸாமி வெளியே இழுத்து உட்டுட்டா மானம் பூடுமே. சே! சே! [போகிறர்.]

சுப் :—மிஸ்டர் சர்மாமேலே கேஸ் இப்பொ கம்ப்ளீட்டாப் போச்சு. இனிமே நேரா மெட்றஸுக்குப் போய் வாரண்டு கேட்க வேண்டியதுதான். ப்ராஸிகூஷன் ஃபர்ஸ்ட் சாக்ஷி கோபாலேயங்கார்; ரெண்டாவது சாக்ஷி வேங்கடரமண ராவ். மூணுவது முனியம்மா. பூவர் ராயர், பாவம்! [போகிறர்.]

## காட்சி 6

[சுல்தான் பேட்டைக்கருகில் ஒரு தோப்பில் மிஸ்டர் என். ராஜ் ஐ. ஸி. எஸ். காம்ப் செய்திருக்கிறர். ஒரு மேஜையின் மேல் டீ சாப்பிடக் கோப்பை வகையறுக்கள் எல்லாம் இருக்கின்றன. மிஸஸ் ராஜ் (சுந்தரி) ஒரு நாற்காலி மீது உட்கார்ந்து தேத்தண்ணீர் தயாரித்துக் கொண்டிருக்கிறள். ராஜ் ஒரு மடிப்பு நாற்காலியில் சாய்ந்திருக்கிறர். சேத்துப்பட்டுக் கிருஷ்ண சர்மா சற்றுத் தூரத்தில் வணக்கமாய் நிற்கிறர். மேஜை மீது இரண்டு மாலேகளும், சில பழ தினுசுகளும் வைக்கப்பட்டிருக்கின்றன.]

ராஜ் :—ஆமாம்; இது நல்ல சுகமான இடம்தான் மிஸ்டர் சர்மா! முன்னெல்லாம் அந்தக் கோவில் தர்மகர்த்தா என்னே இங்கே தங்கவிடமாட்டான். நீர் எப்படி மானெஜ் பண்ணினீர்?

சர்மா :—அந்தத் தர்மகர்த்தா கொஞ்சம் படிச்சவன்... எப். ஏ வரைக்கும் போயிருக்கான்......பாவம்! அவன் செத்துப் போய்விட்டான். பெண்டாட்டி ஒருத்தி, மைனர் பையன் ஒன்று, அவ்வளவுதான் இருக்கிற ஆஸாமிகள்.

சுந் :—ஆமா, நீர் இங்கே காம்புக்கு ஏற்பாடு செய்தது சரியில்லே. அவாளைக் கேட்டுண்டு செய்திரா ?

சர்மா :—எஸ், யுவர் ஹானர்...மாடம்.

ராஜ் :—மிஸ்டர் சர்மா ! அந்தப் பெரிய மீன் எங்கே ஐயா பிடித்தீர் ?

சர்மா :—என் எஸ்டேட்டிலே.

சுந் :—உங்க எஸ்டேட்டா ? எங்கே அது ?

சர்மா :—இங்கேயிருந்து அது.....ஸெவன்டி லெவன்... லெவண்டி ஸெவன்...இருபத்தேழு மைல் இருக்கும் ...கட்டை வண்டிகூடப் போகாது. பத்து மைல் வரை ஒற்றையடிப் பாதை. பிந்தி இரட்டை மாட்டு வண்டி போகும். சேலத்திலேயிருந்து இருபது கல்.

ராஜ் :—அதென்ன ? வில்லேஜா ? பேர் கிடையாதா ?

சர்மா :—அதன் பேர் நரி வலம்வந்த கல்லூர்...இல்லெ, இல்லெ. வரி கலம் தந்த கல்லூர்...இல்லையே...கரி... ஆமாம், கரி வலம்வந்த நல்லூர்.

ராஜ் :—என்ன ஜோரான பேர் ! இருக்கட்டும். அது உப்புநீர் மீன் ஆச்சே ! சேலத்துக்கிட்டே அது என்ன ஊர் அது ? அங்கே எப்படி வந்துது ? சமுத்திரம் ஏதையா அங்கே ?

சர்மா :—மீன்கள் சமாசாரம் எனக்கென்ன தெரியும், யுவர் ஹானர் ? நான் அதை அவ்வளவா...அதை நான் சாப்பட்றதேயில்லெயே! நானெதைக் கண்டேன் ? மணியக்காரன் சொல்லித் தெரிஞ் சுண்டேன்.

[ சுந்தரி கோப்பையில் தேத்தண்ணீரை ஊற்றி ராஜிடம் கொடுக்கிறள். ]

ராஜ் :—தாங்க்ஸ்.

சுந் :—தாசில்தார்வாள் ! அந்தப் பாதாமி மாம்பழம் ரொம்ப நன்னு இருந்துதே. எங்கே அகப்பட்டுது ? இது மாங்காய்க் கால மில்லையே.

சர்மா :—மைசூரிலே என் ஸ்நேகிதர், சௌடய்யா, இருக்கிறார். அவர் இன்றைக்குத்தான் அனுப்பினார்... ஒரு சின்னக் கூடை...பாதி ரயில்லே கொள்ளை போயிட்டது. கொஞ்சம் நசுங்கிக் கெட்டுவிட்டது. மீதி, பத்துப் பதினைஞ்சு தான் நன்றாயிருந்தது.

ராஜ் :—யாரையா அது? கிராமபோன் கொடுத்திருக்காரே ...அவரா? (சர்மா தலையை அசைக்க) ஆமா, டியர்! அதை இன்னங் கொஞ்சம் சாப்பிடு. நீயும் ஷோக்கா பிடில் வாசிப்பே......

சுந் :—நீங்க ரொம்ப கெட்டிக்காரத் தாசில்தாரா யிருக்கணும்!

ராஜ் :—அவர் தாசில்தார் இல்லை, டியர்! ஸப்-அஸிஸ்டண்ட் மாஜிஸ்ட்ரேட் தான்.

சுந் :—சீக்கிரத்திலெ அவரைத் தாசில்தாராக்கி விடுங்கள், ராஜ்! இவ்வளவு இன்டெலிஜெண்ட் ஆஸாமி ப்ரமோஷன் இல்லாதெ யிருந்தா வெக்கக்கேடு.

ராஜ் :—அறுபது ரூபாய் போட்டுக்கொடுத்து இன்னும் அரை மாஸ மாகலையே! அதுக்கு முன்னே உம்ம சம்பளம் என்னய்யா? பதினைந்து ரூபா யில்லே?

சர்மா :—ஆமாம், யுவர் ஹானர்!

சுந் :—ஓஹோ அப்படியா? பலே பேஷ்! ரொம்ப சந்தோஷம் மிஸ்டர்...

ராஜ் :—சர்மா!

சுந் :—சர்மா!

ராஜ் :—இவருக்கு மேலே இருந்த பத்துப் பன்னிரண்டு குமாஸ்தாக்களை யெல்லாம் தாண்டி இவருக்கு இந்த வேலையைக் கொடுத்தோம்.

சுந் :—இதென்ன அநியாயம்! அப்படியும் பண்ணலாமா?

ராஜ் :—பெண்பிள்ளைகள் சமாசாரம் இவ்வளவுதான். கொஞ்ச முன்னே இவரைத் தாசில்தாராக்க லேன்னு சண்டை பிடிச்சவள் தானே நீ?

சுந் :—இந்தக் கதையெல்லாம் எனக்கென்ன தெரியும்? ...மிஸ்டர் சர்மா லாயக்கா இல்லாதெ நீங்களாகத் தூக்கிக் கொடுத்துட்டெகளோ ?

ராஜ் :—கிடக்கட்டும், மிஸ்டர் சர்மா ! நீர் க்ரிமினல் எக்ஸாமினேஷன் பாஸ் பண்ணினத்தைப் பத்தி என்ன இவ்வளவு கலாட்டா?......உம்ம காதுலே ஒண்ணும் விழலையா ?

சர்மா :—எஸ், யுவர் ஹானர்! அதாவது இல்லே, ஒரு வார்த்தைகூட இல்லே. அது என்ன சமாசாரம் கேட்கலாமோ ?

ராஜ் :—வெல், எனக்கும் தெரியாது. எதாவது அக்கப் போர் பெட்டிஷன் இருக்கும். வழக்கம்தானே ! நீர் முதல் தரமாகப் பாஸ் பண்ணினதாகச் சொல்ல வில்லே ?

சுந் :—சொன்னுரா ? பாஸ் பண்ணியிருப்பார் !

சர்மா :—எஸ், யுவர் ஹானர் !

ராஜ் :—பின்னே என்ன இந்தக் கலாட்டா எல்லாம்? ரெவின்யூ போர்டில் உமக்கு யாராஞ ஆகாதவா இருக்காளா ?

சர்மா :—ஆபீஸிலெ எனக்குக் கீழே இருக்கிறவா...... அதுவும் இப்பொ......

ராஜ் :—எஸ், எஸ்! மறந்துட்டேன்...ஓ! அப்படியா அது ?

சர்மா :—எது ? எது ?

ராஜ் :—பரீக்ஷைக்காக ரொம்பக் கஷ்டப்பட்டுப் படித் தீர்களோ இல்லியோ ?

சர்மா :—கஷ்டப்படாதயா ? அதை நானே சொல்லிக்கக் கூடாது......ஆனுல் இங்கே சொல்றேன். எதையாஞ ஒண்ணே ஒருதரம் படிச்சுட்டேனே, அவ்வளவு தான் ! அப்படியே வார்த்தை வார்த்தயா ஒப்பிச்சுடுவேன்.

ராஜ் :—அப்படியா ? பேஷ் !

சுங் :—எனக்கு எத்தனை தரம் படிச்சாலும் ஒண்ணும் ஞாபகமிருக்காது. எந்தப் பரீக்ஷையிலும் நான் கடைசியாக் கூடப் பாஸ் பண்ணமாட்டேன்னு நெனைக்கிறேன்.

ராஜ் :—அதென்னமோ? ஜோரா ட்ரெஸ் பண்ணிக் கறத்திலெ ஒரு பரீக்ஷை வைச்சா, நீ தான் முதல்!

சுங் :—ஸில்லி!

ராஜ் :—மிஸ்டர் சர்மா! உங்க பரீக்ஷயிலே யாராவது பேபர் கரெக்ட் பண்ணுகிறவர் உமக்குப் பாத்தியமா? இல்லை! பின்னை ஏன் நீங்க ஸரியா பாஸ் பண்ணி யிருக்கமுடியாதுன்னு எல்லாரும் ஸந்தேகப்படரு?

சர்மா :—பாத்தியமா? இந்த லோகத்திலே எனக்குப் பாத்தியஸ்தாளே கிடையாது,—எங்கம்மா, பெண் டாட்டி தவிர.

ராஜ் :—ஆனல் எதற்காக என்னை உம்மைப்பத்தி ப்ரைவேட் ரிப்போர்ட் அனுப்பச் சொல்லிக் கேட் டிருக்கிருர்கள்?

சர்மா :—பகவானுக்குத் தான் தெரியும். எல்லாம் பொருமை தான்.

சுங் :—அத்தனை பேரைத் தாண்டிண்டு பெரிய வேலைக்குக் குதிச்சா ஏன் இராது?

சர்மா :—மாடம்! நானு குதிச்சேன்? அவா போட்ட ஆர்டர் என்னை ஒரு தூக்குத் தூக்கித்து.

ராஜ் :—வெல்! நான் அவாளுக்கு இதெல்லாம் பிரமோஷன் கிடைக்காத குமாஸ்தாக்கள் விஷமம் என்று எழுதி அனுப்பிச்சுடறேன். எதுக்கும் உம்ம மேலே உங்க ஆபீஸிலேயிருந்து யார் எழுதி யிருக்க முடியும்னு கண்டு பிடியும்.

சர்மா :—பிடிக்கிறேன், பிடிக்கிறேன்...என் ஸந்தேக மெல்லாம்...

ராஜ் :—யார் மேலே?

சர்மா :—அந்த ஹெட் குமாஸ்தா கோபாலையங்கார் மேலேதான். எதுக்கும் நன்னு விசாரிக்கிறேன்.

ராஜ் :—வெல், மிஸ்டர் சர்மா! லேட் ஆகிறது. நீர் போகலாம். மூன்று மைல் இருக்கே, எப்படிப் போவீர்! நடைதானே?

சர்மா :—அது ஒண்ணுமில்லே. நான் போய்டுவேன்.

ராஜ் :—குட் ஈவினிங்.

சர்மா :—குட் ஈவினிங், யுவர் ஹானர்! அம்மாவுக்கு ஏதாவது வேண்டுமானால் சொன்னால் உடனே அனுப்புகிறேன்.

சுந் :—ஒண்ணும் வேண்டாம், தாங்க்ஸ்.

சர்மா :—(இருவரையும் வணக்கமாய் நமஸ்கரித்துவிட்டுப் போய்க்கொண்டே தனக்குள்) நல்ல வேளை அந்த மட்டும். என்னமோ ஏதோன்னு பயந்தேன். பகவான் இருக்கிறார்!

## காட்சி 7

[கிருஷ்ண சர்மாவின் புதிய வீடு. சேவகன் சுல்தான்கான் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். ஒரு வயது சென்ற குருடனும் அவனுடன் ஒரு சிறு பையனும் பாடிக்கொண்டு பிச்சை யெடுக்க வருகிறார்கள்.]

சுல் :—அரே...ரே...! குருடன்கி இருக்கிறான்...பையன்கி ரொம்ப நல்ல பாட்று...இந்தா. ...

[அவர்களுக்கு ஒரு தம்பிடி கொடுத்தனுப்புகிறான்.]

ருக் :—(உள்ளிருந்து வந்து) யார்ரா அது, நினச்ச போது வாசல்லே வந்து நாயாக் குலேச்சு நரியா ஊளை யிடறது? வேளை சமயமில்லாத ஒரு பிச்சையா?

சுல் :—அம்மா! நம்போ அவன்கி அனுப்சுட்டா.

ருக் :—போ, சிப்பாய்தான்! கண்டவனை யெல்லாம் கிட்டக்கூட வரவிடாதே, தெரியுமா?

[போகிறள்.]

சுல் :—ரே! ரே! ரே! இந்த அம்மாதான் மாலச்சுமி... தூ...

[வெளியில் ஒரு குரல். "யாரங்கே...யாரங்கே?" என்று கேட்டுக்கொண்டே கோபாலையங்கார் வருகிறர்.]

அரே! தூ! ஷைதான்! ஓடிப்போ! இங்கே வரக் கூடாது! கயிதேகி...

[கோபாலையங்கரைப் பார்த்து இடி விழுந்தவன் போல் ஸ்தம்பித்து, ஸலாம் செய்து நிற்கிறன்.]

கோபா :—என்னுடாது?

சுல் :—கோவம் பண்ணிக்காதே ஸாமி! நாம்ப ரொம்பத் தப்பு சேஞ்சா. உங்கள்கி ப்ாத்தான் இல்லே.

கோபா :—ஸரிதான்......அய்யா இருக்காங்களா?

சுல்:—இல்லிங்கோ! வண்டிலே ஏறிப் போயிருக்காங்கோ.

கோபா :—அம்மா இருக்காங்களா?

சுல் :—இருக்கருங்கோ. இதோ கூப்பட்றே.

[உள்ளே போகிறன்.]

கோபா :—(மனசுக்குள்) உங்கய்யா இல்லாதது எனக்குத் தெரியாதா என்ன? நான் அதைத் தெரிஞ் சுண்டுதானே வந்தேன்? என் குழந்தைக்குக் கலி யாணத்துக்கு வாங்கின புடவையை எடுத்துண்டு வந்து இந்த அல்பாயசுப் பிள்ளை பெண்டாட்டிக்குக் கொடுக்க வேண்டி வந்துதே! என்ன பண்றது? இவளைக் கொண்டாவது பேர்வழியைச் சரிபண்ணி, நம்ம தலை தப்பணும்.

சுல் :—(வந்து) அம்மா வராங்க.

கோபா :—(தட்டில் புடவை, ரவிக்கை, மஞ்சள், குங் குமம், வெற்றிலை, பாக்கு எல்லாம் வைத்துக்கொண்டு

வாசற்படியண்டை போய், தனக்குள்) :—இந்தச் சுவர் மறைவிலிருந்து எதிர்ப்பட்டுத் திடீரென்று கொடுத்தால் சந்தோஷப் படுவாள். இதோ வருகிருள். (திடீரென்று முன் வந்து) 'தீர்க்க ஸுமங்கலீ பவ!

[உள்ளிருந்து ருக்மிணி அம்மாள் வந்து இதைக் கேட்டு ஸ்தம்பித்து நிற்கிறள். கோபாலையங்கார் ஒன்றும் தோன்றாது விழிக்கிறர்.]

கோபா :—நீங்களா?......மன்னிக்கணும். நான்......உங்க மாட்டுப் பொண்ணுன்னு பார்த்தேன்......ஆத்துலே இன்னிக்கி மங்கிலிப் பொண்டுகள் பண்ணிரு. நல்ல ஸுமங்கலிக்குப் புடவை வெற்றிலே பாக்குக் கொடுத்தால் சுபம்னு சொன்ன......அதுக்குத்தான் இதை இங்கே குழந்தைக்குக் கொடுத்துவிட்டு ஆசீர்வாதம் பண்ணிப்பிட்டு போகலாம்னு வந்தேன்.

ருக் :—(சிரித்துக்கொண்டு) அதுக்கென்ன? நல்லது தானே......பெரியவா ஆசீர்வாதத்திலேயாறு அவனுக்கு ஒரு குழந்தை பிறந்து நான் பார்த்துவிட்டுச் செத்தேன்னு திருப்தியா இருக்கும். இருங்கோ, அவளே வரச் சொல்றேன்.

[போகிறள்.]

கோபா :—நல்ல வேளே! இன்னிக்கி முழிச்ச முகம் நல்ல முகந்தான்......

[கனகவல்லி வந்து நமஸ்கரிக்கிறள்.]

தீர்க்க ஸுமங்கலி பவ! சீக்ரமே ஜீவந்த் ஸுபுத்ரா ப்ராப்தி ரஸ்து...

கன :—(தட்டை வாங்கிக்கொண்டு) பெரியவா ஆசீர்வாதம். ஆத்துலே எல்லாரும் ஸௌக்கியந்தானே?

ருக் :—(பிரவேசித்து) அடீ கனகம்! இதோ நான் போறேன் கோவிலுக்கு! அங்கே சாத்துமுறை முடிஞ்சு, திருமஞ்சனம் எல்லாம் ஆறத்துக்கு மூணு மணியாகும். நான் போது விடிஞ்சுதான் வருவேன். ஆத்தைப் பாத்துக்கோ. அவன் கேட்டா சொல்லு.

[போகிறள்.]

கன :—போயிட்டு வாங்கோ!......சரி, என்ன விசேஷம்?

கோபா :—விசேஷம் ஒண்ணு மில்லே! ஆத்துலெ ஏதோ சுபகாரியம். குழந்தைக்குக் கல்யாணம் சீக்கிரத்திலே வரது. அதுக்காக மங்கிலிப் பொண்டுகள் பண்ணிஞு. நல்ல தினத்திலே நம்ம க்ஷேமத்தை நினைக்கிற ஸுமங்கிலிக்கு ஏதோ நம்மாலான ஸம்பாவனை பண்ணிஞு க்ஷேமமோல்லியோ......ஹி...ஹி... ஹி...

கன :—அதுக்கென்ன? ஒண்ணும் குறைச்சலில்லே. குழந்தைக்கு வர ஆமடையான் நல்ல பாக்யசாலியா யிருப்பான். கவலைப்படாதீங்கோ.

கோபா :—அது ஒண்ணுமில்லே அவ்வளவா. இன்னொரு பெரிய கவலைன்ஞு வந்துடுத்து!

கன :—அதென்ன?

கோபா :—ஒண்ணு மில்லே! இங்கே எஜமானர், நம் மண்டே ஏதோ அதிருப்தியா யிருக்காப்பலே இருக்கு. நா...ஒரு தப்பும் செய்யலே; கேழ்க்கவும் பயமா யிருக்கு...

கன :—பயமென்ன? உம்மைப் போலப் பெரியவாளுக்கு என்ன பயம்?

கோபா :—அதுலே...பாருங்கோ...நானும் ஒரு அசட்டுத் தனம் பண்ணி வச்சுட்டேன். கோர்ட்லே ஏதோ சாக்ஷி சொன்னதிலே ஞாபக மறதியாப் பிசகாச் சொல்லிப் பிட்டேன். அது அவ்வளவா நிஜ மில்லேன்னு ஏற்பட்டுப் போச்சு. எஜமானர் அதுக் காக ரொம்பக் கோபமா யிருக்கார். பொய்ச் சாக்ஷி சொன்னதா எம்மேலே குற்றம் சாட்டி விசாரணை செய்யப் போவதா ஏற்படறது.........நான்........ பாருங்கோ...பெரிய ஸம்ஸாரி...அநியாயமா ஒரு குடும்பம் அழிஞ்சு போகும். நானேதோ பொய்க் காரணம் சொல்லி ஆபீஸுக்குப் போகாதே லீவு அப்ளிகேஷன் போட்டதாக எம்மேலெ குற்றம். நம்படவா ஸம்ப்ரதாயப்படி, பகவானிடம் போகிறவா நேரே போகப்படாது. லக்ஷ்மியே ஆச்ரயிச்சுண்டு

அவள் மூலமாய், அவளுடைய சிபார்சு மேலே பகவானுடைய அனுக்ரஹத்தை அடையணும். என்னமோ, நீங்கதான் ஸாக்ஷாத் கனகவல்லித் தாயாராயிருந்து, என் குறைகளைத் தீர்த்து வைக்கணம். புண்ணியமாப் போகும்.

கன :—அப்படியெல்லாம் சொல்லாதேயும். நீங்க பெரியவா. என்ன பிரமாதம்? நான் சொல்லி எல்லாத்தையும் சரிப்படுத்தறேன்.

கோபா :—என்னாலே ஆன தண்டனைகளையும் நானே எனக்கு விதிச்சிண்டேன். பாருங்கோ! இப்பொ பெரிய கலெக்டர்வாள் வந்திருக்கா. அவாளுக்கு ஸப்ளை எல்லாம் சரியா ஒரு மிஸ்டேக்கு இல்லாமெ இருக்கணும்னு நானே நேரா கவனிச்சுண்டு வரேன். அது எங்கையானு......ஒரு 500, 600 ரூபாய் செலவாகும். இங்கே எஜமானர் அந்த ரூபாயெத் தாமே கொடுக்கணும்னு சொல்லியிருந்தார். நானிருக்கச்சே அவாளே கொடுக்க வைக்கிறது மரியாதையா பாருங்கோ?...ஆகையாலே ஸாமான் போக்குவரத்துக் கொடுத்த ஆசாமிகள் அனுப்பிச்ச பில்களை நானே வாங்கிக் கொண்டேன். அவாளுக்குப் பணமும் சேர்ந்து போச்சு. இங்கே பில்களும் வரவே வராது. இன்னும் வேறெந்த விதமா......

கன:—ஐயோ பாவம்! அதெல்லாம் வேண்டாம்! நீங்க போங்கோ; நான் பாத்துக்கறேன். நீங்க பயப்பட வேண்டாம்.

கோபா :—நான் வரேனம்மா! உன்னைத்தான் நம்பியிருக்கேன். நீ என் வயத்தலே பிறந்தவளாட்டமா......

[அழுவது போல் பாசாங்கு செய்கிறர்.]

கன :—இதென்ன இது? பெரியவா இப்படியெல்லாம் நல்ல நாளும் அதுவுமா அழக்கூடாது. நீங்க போய்விட்டு வாங்கோ......

கோபா :—வரேனம்மா...... [போகிறர்.]

கன :—ஐயோ பாவம்! பெஞரிஸ் பட்டுப்போலிருக்கு. நல்லவர். 150 ரூபாயிருக்கும். பெரிய ஸம்ஸாரி! நல்ல அகலம்; $3\frac{1}{2}$ முழமிருக்கும். எவ்வளவு ப்ரீதியாக ஆசீர்வாதம் பண்ணிவிட்டுப் போஞர்! யாரங்கே?

[சுல்தான் வருகிறன்.]

இதைக் கொண்டுபோய் உள்ளே வை!...

[சுல்தான் தட்டையெடுத்துப் போகும்போது, கை தவறி எல்லாம் கீழே விழுகின்றன.]

என்னடா அவ்வளவு அஜாக்கிரதை?...எடுத்துண்டு வா......

[முணுமுணுத்துக் கொண்டே போகிறன்.]

சுல் :—(எல்லாவற்றையும் பொறுக்கித் தட்டின் மேல் வைத்துக்கொண்டு)—எட் கிளார்க் அய்யுரு பலே கெட்டிக்காரன்கி இருக்கிரு...அய்யாகி குளியிலே வெட்டி மூடப்பாக்கரு. அம்மாகிட்ட வந்து அளுவுரு. பாப்பான்கி வேலே படா வேலே...

[கிருஷ்ண சர்மா பாடிக்கொண்டு வேத சந்தோஷமாய் வருகிறர்.]

சர்மா :—(பாடிக் கொண்டே தலைப்பாகை, சொக்காய் எல்லாவற்றையும் கழற்றி வைத்துக்கொண்டு) யாரங்கே?

["ஸார்" என்று சொல்லிக்கொண்டு சுல்தான்கான் வருகிறன்.]

எங்கேடா! பேப்பர் வந்துதா? எஸ்; இதோ இருக்கு. இதோ இந்த நாற்காலியை இப்படி இழுத்துப் போடு...

[பத்திரிகையைப் பிரித்துப் பார்க்கிறர்.]

மோசம், மறுபடியும் ஒரே...விளம்பரங்கள்! காந்தி மீது...வெடிகுண்டு...சீ! சீ!! வர வரக் கொஞ்சமாவது நியூஸ் இருக்கிறதே இல்லை...இந்த நாளில்

படிக்கறதுக்கு லாயக்கா ஒரு சமாசாரம் கிடையாது. இது என்ன ?—"போலீஸ்காரர், கவர்ண்மென்ட் க்ரிமினல் பரீக்ஷைக் கேள்விப் பேப்பர் - திருட்டைப் பற்றிப் புலன் விசாரித்து வருகிறார்கள். கூடிய சீக்கிரம் பல ஆச்சரியமான விஷயங்கள் வெளியாகு மென எதிர் பார்க்கப் படுகிறது." மிஸ்டர் ராஜ் இன்னிக்கிச் சொன்னாப்பலே ரிப்போர்ட் அனுப்பிச் சுட்டா, எல்லாம் அமுங்கிப் போய்விடும்!

[ஏதோ பாடுகிறார்.]

அடே ! யார்ராங்கே ?

[சுல்தான் வருகிறான்.]

எங்கேடா உங்கம்மா ?......ஹல்லோ ! வாட் இஸ் திஸ் ?

[கனகவல்லி புதுப் புடவையை உடுத்திக்கொண்டு, அழகு செய்துகொண்டு வருகிறாள்.]

சர்மா :—யாரிது ? அம்மா ! நீங்க யாரு ? யாரெப் பாக்க வந்தேள் ?

கன :—(வெட்கத்துடன் தலை குனிந்து) என்ன ! கண் கூடத் தெரியலையா ?

சர்மா :—யார் ?...ஓஹோ நீங்கதானா! (உரக்கச் சிரித்து) அடையாளமே தெரியலெ. யாரோ ஜமீன்தாரிணியோ, பாலாமணியோ நம்மாத்துக்கு வந்துட்டாள்னு பார்த்தேன். (ஏற இறங்க உற்றுப் பார்த்து) என்ன இதெல்லாம் ?

கன:—நன்னாயிருக்கா ? சொல்லுங்கோ !

சர்மா :—என்னாலே ஒண்ணுமே சொல்ல முடியலெ. கண்ணைத் திறந்தால் புடவை அடிக்கிற டால்லெ கூசிப்போறது; கண்ணை மூடினால் உன்னண்டே யிருந்து வர வாசனை தூக்கிண்டு போறது !

கன :—பரிகாசம் பண்ணாதேங்கோ ! நன்னாருக்கா ? சொல்லக்கூடாதா ?

சர்மா :—இரு! புரோகிதரைக் கூப்பிட்டுண்டு வரச் சொல்றேன், இப்பவே முகூர்த்தம் பார்த்து வைக்கிறத்துக்கு.

கன :—எதுக்கு ?

சர்மா :—நம்ம ரெண்டு பேருக்கும் மறுபடியும் கல்யாணம் பண்ண !

கன :—ஆமா ! குறும்பைப் பாரு...அதிருக்கட்டும். நீங்க சொல்லுங்க......இதெயெல்லாம் போட்டுண்டதும் முதல் முதல்லே யாரு என்னைப் பார்க்கணும்னு நான் ஆசைப்பட்டேன்னு ?

சர்மா :— அதுக்குக் கூடவா ஸந்தேகம் ?

கன :—யாரு ? சொல்லுங்கொ.

சர்மா :—எங்கம்மா !

[கனகவல்லி கோபித்துக்கொண்டு போகிறள்.]

சீ! சீ! பயித்தியம். ஓடாதே வா ! நான் உன்னுடெ விளையாடக் கூடாதா? (போய் அழைத்து வருகிறார்.) என்ன கோபம்டாப்பா மூக்குக்கு மேலே ! மூக்குக் கூராயிருக்கிறவாளையே நம்பக்கூடாது.

கன :—அப்பொ முதல்லெ இந்த மூக்கை நம்பக்கூடாது !

[சர்மாவின் மூக்கைப் பிடிக்கிறள்.]

சர்மா —விடு, விடு ! அம்மா வரப் போரு !

கன :—வரமாட்டா, கோவிலுக்குப் போயிட்டா. நாளைக் குத்தான் வருவா...

சர்மா :—சரிதான். நான் இன்னிக்கி அந்த மிஸ்ஸஸ் ராஜ் —எங்க கலெக்டர் ஆமடையாளைப் பார்த்தேன். அவள் ஃபாஷனும் அவள் ஸ்டைலும் 'டிப்டாப்' ஆக இருந்தது. அவளைப் பார்க்கச்சே எனக்கே ஒரு மாதிரியா யிருந்தது...இப்பொ உன் ஸ்டைலேயும் உன் ஷோக்கையும் பார்த்தால், ஏதேது...அவளைத் தோற்கடிச்சு விடுவெ போலிருக்கே !

கன :—ஆமா! எங்காத்துக்காரருக்கும் மாஸம் 2,000 ரூபாய் சம்பளம் வந்தால் நானும் நாளுக்கொரு பாஷனகத்தா னிருப்பேன்.

சர்மா :—ஸரி, ஸரி. அதைப் பத்திப் பேசி என்ன பிரயோஜனம்?...... இதெல்லாம் ஏது?

கன :—ஒத்தர் கொண்டு வந்து ஆசீர்வாதம் பண்ணிக் கொடுத்துட்டுப் போனு. அவாத்துலே மங்கிலிப் பொண்டுகளாம்...நல்ல ஸுமங்கிலியாப் பார்த்துக் கொடுக்கணும்னு இங்கே வந்து கொடுத்துட்டுப் போனு.

சர்மா :—அடடே! யாரந்தக் குபேரன்—மங்கிலிப் பெண்டுகளுக்கு பெனரிஸ் சேலை கொடுக்கிறவன்?

கன :—பாவம்! அப்டியெல்லாம் சொல்லாதிங்கோ... அவர் ரொம்ப ஸாது, பாவம்!

சர்மா :—யாரது? சொல்லேன்.

கன :—நம்ம கோபாலையங்கார்.

சர்மா :—யாரது? பர்மா ஷெல் ஏஜெண்டா?

கன:—பர்மாவு மில்லே, ஷெல்லு மில்லே...எல்லாங் கடக்க அவரேன் வரார்? அவாத்துவாளுக் கிருக்கிற கர்வமும், ராங்கியும்!

சர்மா :—பின்னே யார் கோபாலையங்கார்?..."நம்ப கோபாலையங்கார்" புரோகிதர் காழியூர் கோபாலையங்காரா? அவர்தான் ஏகமாச் சம்பாதிச்சுச் சேர்த்து வைச்சிருக்கார்னு சொல்ருளே.

கன :—இன்னும் யாராவது உண்டா? ரொம்ப நன்னருக்கு! நம்ம ஆபீஸ் ஹெட் குமாஸ்தா கோபாலையங்கார்.

சர்மா :—யாரு?

கன :—தில்லைவிளாகம் கோபாலையங்கார். தெரியாதா?

சர்மா :—ஓ! அப்படியா சமாசாரம்? பலே வேலை! ஆசாமி ஸ்க்ரூவெ இங்கெ முடுக்கி யிருக்கானு? ஊஹும்.

கன:—பாவம்! கண்ணுலே ஜலம்விட்டு அழுதார் அவ்வளவு பெரியவர்...என்ன தப்பு அப்படிப் பண்ணிப்பிட்டார் அவர்? உங்க மேலே அவருக்கு என்ன ப்ரியம் தெரியுமா? உங்களை எவ்வளவு சிலாக்யமா......

சர்மா:—வாஸ்தவம்தான்! என் மேலே இருக்கிற ப்ரியத்தைவிட என் உத்தியோகத்து மேலே இன்னும் அதிக ப்ரியம் அவருக்கு.

கன:—ஆமா; உங்களுக்கு எப்பவும் வீண் சந்தேகம் தானே! இல்லாட்டா, எதுக்காக இருநூறு ரூபாய் போட்டு இந்தப் புடவை ரவிக்கையெல்லாம் வாங்கித் தரணும் எனக்கு?...இல்லே! எதுக்காக—உங்க பெரிய கலக்டர் இப்ப வந்திருக்காரே—அவருக்குச் செய்யற ஸப்ளை எல்லாத்தையும் தன் தலைமேலே போட்டுண்டு, அதுக்கெல்லாம் தானே கையை விட்டுப் பணம் கொடுக்கணும்?

சர்மா:—தானேயா கொடுக்கப்போகிறார்? பில்லெல்லாம் எனக்கு அனுப்பச் சொன்னேனே?

கன:—அனுப்பப் போறதில்லையாம். அவரே கொடுத்துக் கூட ஆச்சாம்.

சர்மா:—சரிதான்! பொய்ச் சாட்சி சொன்னத்தை மன்னிக்கறத்துக்கும், மேலே நடவடிக்கை எடுக்காதிருக்கிறதுக்கும் தக்ஷிணையா?

கன:—அவரை நீங்க ஒண்ணும் செய்யப்படாது. ஊ...ம்? பாவம்! ஏழைப் பிராமணர் தானே!......என்ன? சொல்லுங்களேன்!

சர்மா:—பார்க்கலாம், பார்க்கலாம்...நான் வரும் வழியிலே அந்த "க்ருஷ்ண பவன்" ஹோட்டலிலே 2, 3 புதுப் பாட்டுகள் கேட்டேன்...கிராம போனிலே...ரொம்ப நன்னா யிருந்தது. அந்த மாதிரி பாட்டெல்லாம் நீ பாடக்கூடாதா?

கன: (சிரித்துக்கொண்டு):—ஊ...ம்! பாடினா என்ன தருவேள்?

**சர்மா** :—இதென்ன ? லீலாவதி-சுலோசனு ட்ராமாவா ? காதல்-ஸீன் ஆக்ட் பண்றயா என்னேடே ?

**கன** :—பண்ணக்கூடாதோ ?

[கோபித்துக்கொண்டு போகப் பார்க்கிறள்.]

**சர்மா** :—இதென்ன ? மனேஹராவா, நந்தனுரா ?—பெண்டாட்டி கோவிச்சுண்டு போறது, ஆம்படையான் பின்னுலேயே போய்க் கெஞ்சி அழைச்சுண்டு வறது ?

**கன** :—எனக்கு அதெல்லாம் என்னதெரியும் ? என்னேடெ எப்பவாறு அப்படியெல்லாம் சேஞ்சிருந்தா எனக்குத் தெரியும். என்னைக் கண்ணுலே பாக்கறத்துக்கு முன்னே கரும் புரும் இங்கறதும், உறுமறதும், 'உள்ளே போ !' இங்கறதும்தானே நான் கண்டதெல்லாம் ? என்னமோ அத்திப்பூ பூத்தாப்பலெ இன்னிக்கு இந்தத் தசை அடிக்கிறது எனக்கு !

**சர்மா** :—சீ, சீ, அசடு ! வேடிக்கைக்குச் சொன்னு, நீ கோவிச்சுக்கலாமா ? கோவிச்சுண்டா, உன் மூஞ்சி நன்னுவேயில்லை. ஏதோ...பாடு, பாடு ! கேக்கலாம்...

[ஹார்மோனிய சுருதி வைத்துக்கொண்டு ஒரு பாட்டைப் பாடுகிறள்.]

**கன** :—நன்னு யிருந்துதா ?

**சர்மா** :—பேஷ் ! பேஷ் ! வா, வா ! சீக்கிரம் சாப்பிட்டுட்டுக் கொஞ்ச நாழி வேடிக்கையாப் பேசிண்டு இருக்கலாம்.

**கன** :—நீங்க கை காலெ அலம்பிண்டு வாங்கோ...நான் போய் இலையெல்லாம் போட்டு வைக்கறேன்.

**சர்மா** :—செய் !......பாட்டு உனக்கு யார் சொல்லிக் கொடுத்தா ?

**கன** :—(போய்க்கொண்டே) உங்கம்மா !

[சிரித்துவிட்டுப் போகிறள்.]

**சர்மா** :—போக்கிரி !

[போகிறர்.]

## காட்சி 7

[சேத்துப்பட்டுக் கிருஷ்ண சர்மாவின் புதிய வீட்டில் ஓர் அறை. ஒரு படுக்கை, ஓர் ஆபீஸ் மேஜை, மேஜை விளக்கு, சில நாற்காலிகள் எல்லாம் இருக்கின்றன. கிருஷ்ண சர்மா ஒரு சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டிருக்கிறர். அவர் முகத்தில் கவலைக் குறிகள் தோன்றுகின்றன. ஒரு நாற்காலியில் கோபாலையங்கார் உட்கார்ந்திருக்கிறர்.]

**சர்மா** :—வாஸ்தவமா? உங்களை நம்பறதா இல்லையான்னு தெரியவில்லை. ஒரே குழப்பமாயிருக்கிறது.

**கோபா** :—அவாவா ஸ்வபாவம் அவாவாளுக்கு. நீங்கள் என்னைக் கெடுக்கப் பார்த்திக. அதனுலே நான் நல்லதைச் சொல்லுவேன்னு உங்களுக்குத் தோணல்லே. ஸகஜந்தானே?

**சர்மா** :—வாரண்டைக் கண்ணுலே நீரே நேராப் பார்த்திரா?

**கோபா** :—அட நாராயணு! பார்த்தேன், பார்த்தேன். அந்தப் பசங்களுக்கு என்மேலே என்ன நம்பிக்கென்னு, 'நீங்க என்னைத் தொலைச்சிப்புடப் பார்த்தேள். ஆகையினுலே, நான் அதைப் பார்த்துச் சந்தோஷப்படுவேன்; உங்க கிட்டச் சொல்லமாட்டேன்' இன்னு நினைச்சா! தெரியறதோ?

**சர்மா** :—வாரண்ட் மெட்ராஸிலேருந்து வந்ததா? எந்தெந்த ஸெக்ஷன் கீழே சார்ஜ் பண்ணி யிருக்கு?

**கோபா** :—அட கோவிந்தா! ஏதேதோ மூணு, நாலு ஸெக்ஷன் போட்டிருந்தது. அந்தக் கண்றுவியையெல்லாம் யாரு வாசிச்சுப் பார்த்தா? எழவெப் பார்த்தால்கூட நம்ம மேலே ஸந்தேகப்படுவாளே!

**சர்மா** :—இங்கே பாருங்கோ, மிஸ்டர் கோபாலையங்கார்! இவ்வளவு நாளா உம்மிடம் விரோதமாயிருந்த

எம்மேலே உமக்குத் திடீர்னு என்னய்யா ஸ்நேகம் வந்துட்டுது ?

கோபா :—அட ராமசந்திரா ! நீரென்ன செய்துட்டீ ரென்னே ? என்னமோ பாம்பு கடி, தேள் கடி வேளெலே ஏதோ எழவும் பேரெழவுமாகக் கிளம்பி மனஸ்தாபமாச்சு. அதுவுமில்லாதே...

சர்மா :—இல்லாதெ ?

கோபா :—அட கோபாலா ! அந்தக் கிழவி ஒண்ணு, பச்சு பச்சுன்னு சிறு பொண்ணு ஒண்ணு, கண்ருவிகள், உம்மை நம்பிண்டு வளய வந்துண்டிருக்குதுக. உமக்கு ஏதாவது வந்து தொலெஞ்சா, அதுகளுக்குத் தானே கஷ்டம் ? லோகமே விசித்ரம்—பாருங்கோ— பழி ஓரண்டெ, பாவம் ஓரண்டெ !— நீங்க எத்தையோ பண்ணித் தொலெச்சுட்டுப் போறிங்க... கஷ்டப்படப் போறவா யாரு? ஒரு பாவமும் அறியாத கிழம் ஒண்ணு ; உம்மைக் கட்டிண்ட கண்ருவி ஒண்ணு... 'நமக்கென்ன வேண்டிருக்கு வைஷம்யம் ? சொல்லித் தொலச்சா என்ன ? ப்ராமணன் ஜெயி லுக்குப் போகாதே தலெ தப்பி ஓடிப் பிழைச்சுப் போகட்டும்'னு சொன்னேன்.

சர்மா :—கோபாலையங்காரே ! நீர் செய்த உபகாரத் துக்கு நானென்ன செய்யப் போறேன் ?

கோபா :—அட ரங்கநாதா ! வெறுமெ பேசிண்டிருந்தா ? ஸரி, ஸரி ! அவா வரச்சே நானிங்கே இருந்தேன்னு, உம்மைப் பிடிச்ச சனியன் என்னெயும் பிடிக்கும் ! நான் போறேன்.

[போக எழுந்திருக்கிறர்.]

சர்மா :—ஐயோ ! நீர் போகிறீரா ? நான் என்ன செய் யட்டும் ? எனக்கு ஒண்ணும் புரியலெயே...கிரஹ சாரமான்னு இருக்கு...உங்களுக்குத் தெரியாது ? அந்த எழவெடுத்த கேள்விப் பேப்பரை நானேயா திருடினேன் ?

கோபா :— அட பாபமே ! அத்தெயெல்லாம் இப்ப சொல்லி என்ன லாபம் ? நடந்த விஷயம் நடந்து போச்சு.

புறப்பட்டுப் போமையா! எங்கேயாவது—புதுச் சேரிக்கு—காரைக்காலுக்கு—மாஹிக்கு—கோவாக்கு—தாடி வச்சுக்கோங்க—பேரை மாத்திண்டு, எங்கே யானு கண் மறைவா ஒரு நாலு வருஷம் இருந்துட்டு வாங்களேன்!

சர்மா:—எங்கம்மா——ஸம்ஸாரம்——இவாளெ யார் பார்த்துக்குவா?

கோபா:—அட ராமா! நாழியாச்சே. நான் போகிறேன்... அவா வர ஸமயமாச்சு.

[அங்கேயும் இங்கேயும் பார்த்துக் கொண்டு போகப் பார்க்கிறர்.]

சர்மா:—ஸ்வாமி! ஒரு நிமிஷம் இருமே! நீர் சொல்ற தெல்லாம் வாஸ்தவம்தானு? இல்லாவிட்டால் என்னை வெறுமனே பயமுறுத்தி வயத்தெரிச்சலைக் கொட்டிக்கிறீரா?...வாயைத் திறவுமய்யா! வாஸ்தவ மாகச் சொல்லும்! உம்ம யக்ஞோபவீதம் மேலே ஆணை!

[வெளிக்கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது.]

கோபா:—அட ஆஞ்சநேயா! அதோ! வந்துட்டாளே! என்னத்தைப் பண்ணி அழறது? என்னடா எழவு இது!—ஐயையோ!——நானெப்படிப் போறது?—இதோ புழக்கடெ வழியா ஓடிப்போயி வரதாச்சாரி யாத்துக்குள்ளே நுழைஞ்சுடரேன். வாருங்க எம் பின்னே!

[பின் பக்கமாய் ஓடிப்போகிறர்.]

சர்மா:—இந்தப் பாவிப் பிராமணன் பண்ணின மோசமா யிருக்குமோ—என்னைத் தொலைச்சுட்டுத் தனக்கு உத்யோகத்தெ ஸம்பாதிச்சிக்க? அட ராமா! வாஸ் தவமாயிருந்தாலும் இருக்கலாம். என்ன கர்மமிது? என் கதி என்ன?...சீ சீ சீ சீ!

[வெளிக்கதவைப் பலமாய்த் தட்டும் சத்தம் கேட்கிறது.]

அது யாரது? திறக்கலாமா, வேண்டாமா? யாருன்னு கேட்டுப் பார்க்கட்டுமா?

[கனகவல்லியும் ருக்மிணியும் உள்ளிருந்து வருகிறர்கள்.]

ருக் :—கிட்டு! யாரோ அப்போ பிடிச்சுக் கதவெத் தட்ருளே! அந்தக் கட்டாலே போன பில்லைச் சேவகன் எங்கே தொலேஞ்சு போயிட்டான்?

கன :—என்னமோ வெளியிலே ஏகக் கூட்டமா இருக்காப் பலெ இருக்கு. ஏகமாச் சத்தம் போட்ரு—யாரோ கதவெ உடேன்னுப்போல காதிலே கேட்டுது. என்னமோ ஒண்ணும் தெரியலேயே? அதோ, அதோ! ஐயோ! பயமாருக்கே...

சர்மா :—அவா தான்! என்னைப் பிடிச்சுண்டு போக வந்திருக்கா...

[கதவு முறியும் ஓசை கேட்கிறது.]

அதோ, அதோ வந்துட்டா! நான் போறேன்...நீங்க ஜாக்ரதெயா யிருங்கோ! என்னை மறந்துடுங்கோ!

[பின் பக்கமாய் ஓடுகிறர்.]

ருக்:—இதென்னடீது? கிட்டுவுக்குப் பைத்தியமா என்ன?

[போலீஸ் இன்ஸ்பெக்டர், சேவகர்கள், அநேக ஜனங்கள் வருகிறர்கள். கனகவல்லி சமையலறைக்குள் ஓடிப்போகிறள்.]

ருக் :—என்னடாது? யார்ரா நீங்கள்?

சுப் :—எல்லாம் அப்பறம் சொல்கிரும், பாட்டீ! உங்க பிள்ளை எங்கே?

ருக் :—ஆர்ரா பாட்டி? பாட்டியாம் பாட்டி! கூப்பட றத்தைப் பாரு! நீ யென்ன, பேரனு வாச்செயோ எனக்கு? நல்ல பேரன்! மொட்டத் தலெயும் முக க்ஷவரமும் மோரக்கட்டையுமா...

மு. சேவ :—தா! பெரியம்மா! சும்மாப் பேசாதே...

ருக் :—நீ யார்ரா? உன்னை வெட்டி அடுப்பிலே போட்டா நாலு சருவம் வெந்நீர் காயும். மட்டு மரியாதெ யில்லாதெ குறுக்கே பேசறியே! யாருன்னு பார்த்தேடா?

இ. சேவ :—அம்மா, நாங்க போலீஸ்காரா!

ருக் :—சீ ! சீ ! வாயெ மூடு ! என்னமோ மூக்காலே மோர் ஸிங் அடிக்கிறயே ! மலேயாளத்திலிருந்து போலீஸ் உத்யோகம் பார்க்க வந்துட்டயோ ?...பல்லெப் பாரு !

சுப் :—அம்மா ! நாங்க ஸர்க்கார் வேலேக்காரா......... ரொம்ப அவசரமான காரியமா வந்திருக்கோம். டிலே பண்ணுதிங்கோ...உங்க பிள்ளெ எங்கே ?

ருக் :—நான் என்னத்தைக் கண்டேன் ? நீங்க பண்ற அமக்களத்தைக் கேட்டுட்டு உள்ளேருந்து ஓடி வந்தேன். அவன் இங்கேதான் இருக்கான்னு நிணெச்சேன்.

சுப் :—அம்மா! நீங்க சொல்லாமல் போனுல் வீடு முழுதும் சோதனே போட வேண்டி வரும்.

ருக் :—அட் பட்டுக்கடப்பான் ! சோதனே போடறயா ! யார் வீட்டை சோதனே போட்றதுடா ? ஏண்டா, யார் ? இதென்ன ஐதர் காலமா ? கொஞ்சமானும் மட்டு மரியாதெயில்லாமெ பிராம்மணுளாத்திலே நுழைஞ்சு, வீட்டு ஆம்பளெ இல்லாத ஸமயத்திலே, பொம்மனுட்டியண்டெ சூரத்தனம் பண்றயோ ? நீ என்னடா பண்ணுவெ ? பொண்ணுப் பசங்களுக்கு வயஸிலே கல்லாணம் பண்ணுதே, அதுக குதிரை குதிரையா வளந்து, குட்டி போட்ட பிற்பாடு கட்டிக் கொடுக்கணும்னு சட்டம் பிறப்பிச்சிருக்கிற ஸர்க்கார் சம்பளத்தெ வாங்கறவன் தானே ? சாஸ்த்ரீன்னும், கனபாடீன்னும், ஆசாரீன்னும் தொடப்பகட்டேன்னும் பேரை வச்சிண்டிருக்கிற கழிச்சல்லெ போறவனெல்லாந்தான் இதுக்குப் பெரிய தனம் பண்ணிண்டு வரதெல்லாம்—ஏண்டா நீ என்ன ! நீ பாப்பான் தானேடா ! துமுசு கட்டை யாட்டமா இந்தப் பள்ளித் தடியனெல்லாங் கூட்டிண்டு சமயக்கட்டுலே போய், சோதனே போடப் போறயோ ?

[பின் புறத்திலிருந்து ஒரு ஸேவகன் சர்மாவைப் பிடித்துகொண்டு வருகிறன். ஜனங்களேல்லாம் “அம்புட்டுண்டான் !” என்று கத்துகிறர்கள்.]

சுப் :—நல்ல வேளே !

சர்மா :—என்ன நல்ல வேளே? எல்லாம் சீக்கிரம் பிச குன்னு தெரியும். என்னைத் தொட உங்களுக்கு என்ன அதிகாரம்?

சுப் :—போலீஸ்காராள் வாரண்ட் இல்லாதே ஒரு வேலேயும் செய்யமாட்டாளென்னு கோர்ட்டாருக்குத் தெரியுமே?

சர்மா :—என்னுது?

சுப் :—ஆமாம், பாவம்! மாஜிஸ்ட்ரேட்வாளுக்கு ஒண்ணும் தெரியாது. அதனுலெதான் புழக்கடைச் சுவரை ஒரேயடியாய்த் தாண்டப் பார்த்தாப்பலே இருக்கு. என்ன? தேகப் பயிற்சியோ? எங்கேடா பிடிச்சே, 642?

642 :—நானு போலீஸ் ட்ரஸ்ஸில்லாமெ அந்தப் பக்கமா சும்மா வந்துக்கினிருந்தேன். அந்தப் பின்தெரு மூலெ கிட்ட யாரோ ஒரு ஆளு ஓடினத்தைப் பார்த்தே னுங்க. அவன் பின்னே போயிப் பார்க்கலாம்னு நெனக்கக் கொள்ள, ஐயா சுவத்துமேலேருந்து சொரக்காயாட்டமா இறங்கினுரு. நல்ல வேளே! வேறே தப்பு ஆஸாமி பின்னுலே போவலயேன்னு நெனச்சுக்குனு, ஐயாவை அப்படியே கொயங்தெ யாட்டமாக் கைலே ஏந்தி இறக்கி இதோ இட் டாறேன்!

சுப் :—வெரி குட், 642! கொண்டுவா இங்கெ ஆஸாமியெ!

சர்மா :—எங்கே சொல்லுங்கள். நானு வரேன்...... என்னைத் தொடாதே, ஜாக்கிரதை.

சுப் :—ஏன்! பகிரங்கமாக விஷயத்தைச் சொல்லணுமா?

சர்மா :—ஸரிதான் வாருங்கடா! என்னமோ உருட் றகளே? எங்கே போகணும்டா? எவ்வளவு நாழி வச்சுண்டிருக்கப் போறிகடா?

642 :—என்ன! ஒரு ரெண்டு வருஷம்!

சர்மா :—அவ்வளவுதானே! அதுக்கப்பறம் விட்டிடு விங்களோ இல்லேயோ? வெளியே வந்ததும், என்ன பாடு படுத்தறேன் பாருங்க!

[போலீஸ் இன்ஸ்பெக்டர் முன் செல்ல, சேவகர்கள் சர்மாவைப் பிடித்துவர, ஜனங்கள் பேசிக்கொண்டும், சிரித்துக் கொண்டும் பின்வர, சர்மா போகிறர்.]

ருக்மிணி :—அடீ கனகா! கனகா! கனகா!

[கத்திக்கொண்டே உள்ளே போகிறள்.]

# வர்ணக் கண்ணாடிகள்

# நாடக பாத்திரங்கள்

ராவ் பஹதூர் ராமசந்திர ராவ்: ராஜம்பேட்டை ஜமீன்தார் (ராம)

கிருஷ்ணையங்கார்: ஜமீன்தாரின் நண்பர் (கிரு)

கோபிநாத ராவ்: ஜமீன்தாரின் தாயாதிகளில் ஒருவன் (கோபி)

டாக்டர் நாயுடு: ஜமீன்தாரின் குடும்ப வைத்தியர் (நாயுடு)

சுப்பன்: ஜமீன்தாரின் வேலைக்காரன் (சுப்)

ராகவன்: ஜமீன்தாரின் சமையற்காரன் (ராக)

விட்டல்ராவ்: ஜமீன்தாரிணியின் தகப்பனார் (விட்)

முதல் பிச்சைக்காரன் (மு. பிச்)

இரண்டாம் பிச்சைக்காரன் (இரண். பிச்)

பையன்: விட்டல் ராவின் பிள்ளை (பையன்)

ஜட்கா வண்டிக்காரன் (ஜட்)

பீதாம்பர ஐயர்: வக்கீல் (பீதா)

சுந்தரி பாய்: ஜமீன்தாரின் தாயார் (சுந்)

கிரிஜா பாய்: ஜமீன்தாரின் மனைவி (கிரி)

பத்மினி பாய்: ஜமீன்தாரின் புத்திரி (பத்)

# காட்சி 1

## சாயங்காலம்

*ராஜம்பேட்டையில் ராவ் பஹதூர் ராமசந்திர ராவ் வீட்டில் ஒரு அறை.*

[ராமசந்திர ராவ் கொஞ்சம் உடம்பு அஸௌக்கிய மடைந்தவரைப் போல், ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறர். பக்கத்தில் ஒரு தோல் நாற் காலியில் கிருஷ்ணையங்கார் உட்கார்ந்திருக்கிறர். ஒரு மேஜைமேல் மருந்துப் புட்டிகள் முதலியன வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு ஸோபா ஒரு பக்கமாய்ப் போடப்பட்டிருக்கிறது. சில நாற் காலிகள் அங்குமிங்கும் போடப்பட்டிருக்கின்றன.]

*ராம :—இதுவும் ஒரு பெரிய வேடிக்கை தான்!*

*கிருஷ் :—எது?*

*ராம :—இதான். லைஃப்னு சொல்ராளே. அதான். அதெ நன்ன தெரிஞ்சுண்டவா யாருமே கிடையாது. ஆன ஒவ்வொத்தரும் அதெ கரைகண்டவா மாதிரி தான் பாவிக்கிறது.*

*கிருஷ் :—இதென்ன? லேட்டஸ்ட் டெஃபனிஷனே?*

*ராம :—டெஃபனிஷன் (விளக்கம்) பண்ர விஷயத்துக் கெல்லாம் நான் போறதில்லே. அதெல்லாம் ஒங்களெப்போல பெரிய ஃபிலாஸஃபர்ஸ் (தத்துவ சாஸ்திரிகள்) செய்யற வேலே.*

*கிருஷ் :—நானென்ன ஃபிலாஸஃபரா?...ஆனல் ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்ருர்.*

*ராம :—போரும்! போரும்!! ஸ்வாமி! அந்தக் கிருஷ் ணனே ஏனிப்படி வாய்க்கொருதரம் சந்தியிலே பிடிச்சு இழுக்கிறீர்? பென்ஷன் வாங்கிண்ட டிபுடி கலெக்டர்கள் வாய்கள்ளெ இப்படியெல்லாம் ஆப் டுண்டு முழிக்கணும்னு தெரிஞ்சிருந்தா, அவர் ஒரு நாளும் பகவத் கீதையே சொல்லியிருக்கமாட்டார்.*

**கிருஷ்** :—இந்த வயசுலே ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பத்தி ஏகதேசமா நாஸ்திகமாப் பேசறீளே!

**ராம** :—என்ன ஸாரிது? என்ன வந்துட்டுது என் வயசுக்கு?...நேத்து அந்த டாக்டர் பசங்களெல்லாம் சேர்ந்துண்டு பண்ணின காப்ராவெப் பாத்தா, என்னெ எப்பொ ரேழியிலே எடுத்துவிடப் போறாளோன்னு பார்த்தேன். கடெசீலெ பார்க்கப்போனு, செத்துப்போரது கூட ஸ்வாரஸ்யமா யிராது போல இருக்கே.........லைஃபைப் போலவே டல்லா இருக்கும்னுதான் தோண்ரது.

**கிருஷ்** :—இல்லாமலென்ன? மனுஷா சாகறதெ நீங்க பாத்ததில்லையா? ஸ்ரீ கிருஷ்ண......

**ராம** :—ஊம்! என்னதானிருந்தாலும் நேரா தானே அனுபவிச்சுத் தெரிஞ்சுக்கறது வேறெதான்...ஏன்? சாதாரணமா சொல்றதில்லையா "முன்னே செத்திருந்தாத்தானே சுடுகாட்டுக்கு வழி தெரியும்!"னு?

**கிருஷ்** :—சே! சே! ஜமீன்தார்வாள்! ஏனிப்படி சாவு, எழவுன்னு பேசறிக? ஒங்களுக்கு ஒடம்பு என்னனு சொல்லு? நான் நேத்து ராத்திரிதான் திரும்பி வந்தேன். உடனே கேள்விப்பட்டேன். ஏதோ ஒங்களுக்கு ஒடம்பு அஸௌகர்யம்னுட்டும் ரொம்ப ஸீரியஸ் இன்னுட்டும்...மதராஸ்லேந்துகூட டாக்டர்கள் வந்து பார்த்ததாகவும்...இப்படி ஏதானு ரொம்ப ஸீரியஸா இருக்கான்னு?

**ராம** :—ஹா! ஹா! ஏன் ஸார் ஒங்களுக்குத் தெரியாதா... டாக்டர்கள் வெச்சா குடுமி செரச்சா மொட்டெ!... வேறெ ஒண்ணுமில்லே. இரண்டு நாளைக்கி முன்னே காலங்கார்த்தாலெ எனக்குக் கொஞ்சம் வயத்து வலி கண்டது. எங்கம்மா ஒடனே டாக்டர் நாயுடுவை வரவழைச்சுட்டா. அவர் வந்தார். என்னெ எக்ஸாமின் (பரீட்சை) பண்ணப் பண்ண அவர் முகம் அதிகமா நீள ஆரம்பிச்சுது. தனக்கு ஒண்ணும் புரியலேன்னுர். வாஸ்தவம் தானே! பாடுபட்றவன் நான் தானே! என்னென்னமோ சொல்லி எதுக்

கெதுக்கோ மருந்தெ கொடுத்தார். ஒண்ணும் உபயோகமில்லெ. கடசீலெ அது அப்பெண்டி ஸைட் டிஸ் இன்னு தீர்மானிச்சுட்டார்...அதாம் ஸார்...... பணக்காரர்களுக்கு மாத்தரம் வரதே ஃபாஷனபிள் டிஸீஸ் (நாகரிக வியாதி)! வாய்க்கு ஒரு தரம் நம்ப முனிசிபல் வாட்டர் வோர்க்ஸைப் பத்திச் சொன்னார். பெரிய டாக்டரோடெ கன்ஸல்டேஷன் செய்யணும்னு சொன்னார்...ஏதோ ஒரு காரண மில்லாதே சொல்லியிருக்க மாட்டார் ...... எங் காத்திலே......எங்கம்மாவிலெருந்து, வேலெக்காரச் சுப்பன் வரெக்கும் அவர் பக்கம்தான் சேந்துண்டா ......நீங்ககூட இல்லையா? சிவனேன்னு சம்மதப் பட வேண்டி வந்துது. நேத்துச் சாயங்காலம் கன்ஸல் டேஷனும் நடந்தது. மதராஸிலேந்து ஒரு பெரிய டாக்டர் பாக்கியில்லாதே வந்தா. டாக்டர் மௌன குரு, காப்டன் சுப்புசாமி, மேஜர் ஸாண்டர்ஸன், மூணு பேரும் வந்திருந்தா...டூபர்குலோஸிஸ் ஸ்பெஷ லிஸ்ட் (க்ஷய ரோக நிபுணர்) டாக்டர் பெட் ஷீட்டும் வந்திருந்தார்...வயத்துநோவாச்சேன்னுட்டு, 'பிள்ளை பெறும் ஆஸ்பத்திரி' டாக்டர் சத்ருக்ன ஸ்வாமியெ வரவழைச்சா. வயத்துவுள்ளே இருக் கறத்தே அப்படியே கண்ணாலே பாத்துச் சொல்லிடு வாருன்னு ஐ ஸ்பெஷலிஸ்ட் (கண் நோய் நிபுணர்) டாக்டர் சாமி தொரையெ கூப்பிட்டா. எங்கம்மா வுக்கு இருந்த ஆத்திரத்துலே பக்கத்து ஊர்க் குதிரை-டாக்டர் கிருஷ்ண ராவைக் கூட வருத்தினா. எங்க சமயல்காரன் ராகவன், தன் மச்சினன் மெடிகல் காலேஜிலே டிபன் ஸப்ளை பண்றானும், அவனேயும் அழெச்சுண்டு வந்தான்...சாயங்காலப் போது யமப் போதாக் கழிஞ்சுது...ஒத்தன் வயத்தெத் தடவினான்; இன்னொத்தன் வெரலாலெ குத்திக் கிளறினான்; இன் னொத்தன் தூரத்திலே நின்னுண்டு கண்ணாலே மொறச்சுப் பாத்தான்; இன்னொத்தன் ஏதோ கொழாவை யெடுத்துக் காதுலே வெச்சுண்டான்...... ஐயா! பல விதமா பாடெ படுத்தினா, போங்களேன் ..

அப்புறம் அடுத்த வுள்ளே போயி ஒண்ணறை மணி சாகவாசம் காச்சு மூச்சுன்னு கடந்து கத்தினு. நடுவூலெ நடுவுலெ எதோ சில வார்த்தைகள் காதுலெ விழுந்துது. கறிகா சிவஜுப்பலெ சிவணும்னுன் ஒத்தன். மருந்துலேயே மாயமா கரெச்சுப்புடுவேன் னுன் ஒத்தன். ஸ்வாமி! லேப் அடிக்கணும்னுகூட சொன்னுன் அந்த குதரெ டாக்டர் பய...கடசீலெ ஒரு முடிவுமில்லெ. அவாவா பீஸை வாங்கிப் பையிலே போட்டுண்டு போய்ச் சேந்தா. டாக்டர் நாயுடு இப்ப வந்தா சேதி தெரியும்.

கிருஷ் :—என்ன ஒபுத்ரவம் போங்க! இந்த 'பாடி' (தேகம்), இந்தச் சரீரத்தெ கொடுக்காமே ஏன் நம்மெ போறப்பிச் சிருக்கக்கூடாது?...ஸ்ரீ கிருஷ்ண !

ராம :—ஐயா! நில்லும்......வீண் வம்பு செய்து நம்மெத் திண்டாடவெச்சு வேடிக்கெ பாக்கரத்துக்காகவே கிருஷ்ண பகவான் நம்ம சரீரத்தெக் கொடுத்தான்.

கிருஷ் :—அது சாஸ்தர விரோதமான வார்த்தெ......ஸ்ரீ கிருஷ்ண பகவான் எங்கெயோ சொல்லியிருக்கார்... மறந்து போச்சே.

ராம :—அப்பா ! க்ஷேமம்,

கிருஷ் :—பேஷ் ! ஒடம்பு தேவலென்னு சொல்றீரா.

ராம :—ஆமா ! வெறென்ன ? அதுவும் நீங்க என்னேடே இருக்கும்போது.

கிருஷ்:—டாக்டர்ஸ் என்னமோ, யாரும் ஒங்களெப்பாக்கக் கூடாதுன்னு சொன்னதாக் கேள்விப் பட்டேனே.

ராம :—ஆமாமாம்! வழக்கம் தானே, பாவம், பாருங்கோ... ஃப்ரெண்ட்ஸ் (சிநேகிதர்கள்) வந்து சாதாரணமா பேசிண்டு இருந்தா நான் நோவாளி யிங்கறத்தை மறந்து பூடுவனேன்னு? அது கூடாது பாருங்கோ! நான் தனியாப் படுத்துண்டு எண்ணமிட்டுண் டிருந்தாத் தானே என் நோவைப் பத்தியே நெனச்சுண்டு இருப்பேன். அதனுலே அதுவும் இம்ப்ருவ் (விருத்தி) ஆகும்! எது? டிஸீஸ் (வியாதி) ஸார்! இம்ப் ருவ் ஆரத்துக்குத்தானே டாக்டரைக் கூப்பட்ரது?

**கிருஷ்** :—பேஷ்! பேஷ்! நல்ல போடு போட்டிங்க! ஸ்ரீ கிருஷ்ண பகவான்கூட ஒரு எடத்திலெ அதே மாதிரி சொல்றுர். யோகத்தெ பத்தி! யோகமாற தென்ன! அதுவும் ஒருவிதமான நிஷ்டை! இங்கே நீங்களும்...

**ராம** :—ஆமா! ஆமா! ரொம்ப ஸரி. பகவத்கீதையிலெ இல்லாத விஷயம் கூட உண்டோ?

**கிருஷ்** :—இல்லியோ! பாருங்கோ! அதுவும் எவ்வளவு சின்ன புஸ்தகம் பாருங்கோ!

**ராம** :—ஆமா! சின்னதானுத்தானே சுலபம்!......மாத்தரையெப் போலே...அப்படியே கண்ணெ மூடிண்டே உள்ளே தள்ளிடுலாம்...பேஷ்!

**கிருஷ்** :—இல்லியோ? பாருங்கோ! ஒரு மணி நேரத்திலே படிச்சுடலாம்...ஒரு புருஷாயுசுலே அர்த்தம் புரிஞ்சுக்க முடியாது?...ஏன்?

**ராம** :—அதனுலேதான் நான் ரெண்டெயும் ட்ரை (பரீட்சை) பண்ணலே...இதெல்லாம் பாருங்கோ ஸார்...எனக்கு எப்படியோ ஒரு இன்ஸ்டின்க்ட்லே தெரியறது.

**கிருஷ்** :—பேஷ்! அதான்! இன்ஸ்டின்க்ட்னு சொல்றது என்ன? அதுக்கு இன்னொரு பேர்...

**ராம** :—ஸ்ரீ கிருஷ்ணபகவான்! ஸேர்டன்லி (நிச்சயமாய்)

[சுப்பன் வருகிறன்]

**சுப்** :—எசமா! பங்காளி-ஐயா கோபிநாத ராயரு வந்திருக்காரு. பெரியம்மாகிட்ட பேசிகிட்டிருக்கிருரு... எசமானே பாக்கணுங்கிருரு.........

**கிருஷ்** :—என்ன? கோபிநாத் ராவா? நான் நெனைச்சுது.....

**ராம** :—ஊ......ம்! ஸரி! ஸரி! வரட்டுமேடா. (சுப்பன் தயங்குகிறன்) போய் அவரெ வரச் சொல்லேண்டா சுப்பா!.........இருங்கோ! இருங்கோ! ஐயங்கார் வாள்! நீங்க போக வேண்டாம். நீங்க கேட்டதில்லையா —'வருவது வந்தே தீரும்'னு நம்ம

ஓல்ட் ப்ரெண்ட் (பழைய சிநேகிதர்) வெங்கட்ரமண ராவ் சொல்றத்தே... இங்கே "வருவது" எது? கோபி நாத்..... வந்தே தீரும்...... வரட்டுமே........ பாத்துப்பிடலாம்...

கிருஷ் :—சே! சே! சே! என்ன லோகமையா இது?... த்ஸு! த்ஸு! த்ஸு!...சே!

ராம :—என்ன ஸார் இது? என்ன இவ்வளவு ஆச்சரியம்? முட்டாளுக்கும், முழு ஞானிக்கும் ஆச்சரியம் ஏது ஸார்?...அது சரிதான்...நீங்க முழு ஞானி...

[கோபிநாதராவ் துக்ககரமான முகத்துடன் வருகிறான்]

ராம :—வா, வா; அந்த நாற்காலிலே ஒக்காரு கோபிநாத ராவ்! என்ன ஒனக்கு? உன்னைப் பார்த்தா பெரிய...

கோபி :—என்ன அப்பிடியுமா கேழ்க்கிறது? நீங்க இப்படி படுத்துண்டு இருக்கச்சே எனக்கு இன்னும் வேறென்ன வேணும்?

ராம :—ஆமாமாம், அதே மறந்து போய்த்தொலச்சேன். கவலெப்படாதே........அப்படி ஒன்னும் எனக்கு ஜாஸ்தியாயில்லெ......பூமியிலே பொறந்தாச்சுன்னு போகவேண்டியதுதானே என்னிக்காவது ஒருநாள்! "ஸுபஸ்ய சீக்ரம்"...நாள் தள்ளிப் போறதெ விடச் சீக்ரமாப்போறதே நல்லது?...நீ அப்படி நெனக்கலே?

கோபி.—அதென்னமோ! அதெல்லாம் எங்களெப்போலெ ஏழைகளுக்கு ஸரிதான். ஆனால் ஒங்களெப்போலெ பெரிய ஜமீன்தார், லக்ஷ லக்ஷமான ஜனங்களுக்கு ஆதரவாயிருந்துண்டு, லோகத்துக்கே ஒரு பெரிய இதுவா......

ராம :—ப்ளீஸ் ஸ்டாப்! (தயவு செய்து நிறுத்து) இன்னும் இப்படியே சொல்லிண்டு போனயோ இப்பவே பூடும் எனக்கு உசிர்.

கிருஷ் :—இதோ பாருங்கோ ராயரவாள்! ஜமீன்தார் வாளுக்கு பாதெ ஜாஸ்தியா யிருக்கு. நாம் அதெ இன்னும் அதிகப்படுத்தக்கூடாது பாருங்கோ!

ராம:—போமய்யா போம்! ஓங்களாலே ஆகாது...நீங்க அதிகமாக்கவும் முடியாது...டாக்டர்கள் குறைக்கவும் முடியாது...எல்லாம் விதிங்காணும்!

கோபி:—அது ஸரி! விதிதான்! விதியெ வெல்ல யாராலெ முடியும்?

ராம:—ஆமா! முடியாது!...அதுவும் ஹிந்துக்களுக்கு முடியவே முடியாது!..பகவத் கீதையிலே அப்பிடிச் சொல்லிருக்கோல்லியோ?

கிருஷ்:—ஸந்தேகமில்லாதெ!

கோபி:—என்ன வைராக்யம்! என்ன பக்தி ச்ரத்தெ! .....ஆஹா! இப்பேர்ப்பட்ட புண்யாத்மாக்கள் தான் நேரா—ஸ்வர்க்கத்துக்கு—இல்லெ—மோக்ஷத்துக்குப் போறது!

ராம:—ஐயையோ! எனக்கெங்கே மோக்ஷம்! எனக்குப் பிள்ளெ கடையாதே.........ஐயங்காரவாள்! சாஸ்த்ரங்கள் என்ன சொல்றது? புத்ரனுகப் பட்டவன் தான் தன் தகப்பனெ "புத்" எங்கர கோரமான நரகத்திலேந்து தப்பிச்சு வெக்கறவன்... அப்பப்பா! நெனக்கச்சேயே நடுங்கறதே...

கோபி:—என்ன நான்ஸென்ஸ்! ஓங்களெப்போல நன்னு படிச்சவா இதெல்லாம் நம்ப வேணுமா?...... கடசிலே பாக்கப் போனு......

ராம:—என்ன கடசிலே பாக்கப் போனு......படிச்ச வாளுக்கு பரமாத்மா கெடயாதா......படிப்பு ஆத்மாவெ அடிச்சு தொரத்திப்புடறதா?

கோபி:—இல்லே. இல்லெ! நோ! நோ!! நான் சொல்ல வந்ததென்னுன்னு...நீங்க வேணும்னு மனசுலெ ஸ்மரிச்ச மாத்ரத்துலே ஒண்ணுக்குப் பதினுயிரம் பிள்ளெகள் ஓங்களுக்கு இருக்கமாட்டாளா?.

ராம:—பதினுயிரமா? பிள்ளேகளா?...ஸ்மரிச்சதுமா? பேஷ்! கஷ்டமில்லாத சமாசாரமாயிருக்கே!... இத்தனெ நாளா தெரியாமெ போச்சே...

**கோபி** :—அதுலெ எதாளு சந்தேகமா? நீங்க வாயெத் திறந்து ஒரு வார்த்தெ சொல்றத்துக்கு முன்னே, யார் வேணும்னாலும் தன் பிள்ளெயெ ஒங்களுக்கு ஸ்வீகாரமா கொடுக்கமாட்டாளு?... ஸந்தேகமா அதுக்கு?

**ராம**:—ஓ! அதுவா மீனிங் (அர்த்தம்)? ஆமாமாம்! வாஸ்தவம்தான்...எத்தனயோ பேர் காத்துண்டு இருக்கா...ஏன்? இன்னும் ரெண்டு, மூணு பேர் இருக்கா...பாவம். நான் கேழ்க்கறவரைக்கும்கூட வச்சுக்க மாட்டா...அந்த ச்ரமம் கூட எனக்குத் தர மாட்டா...பாவம்!

**கோபி** :—யார்தான் கொடுப்பா ஐ மீன்...தி ஸன் (அது தான் பிள்ளையை)—ஐயோ இல்லே...அதான் ச்ரமம் ...ச்ரமத்தெ...அதான். நீங்க கேக்கர...ச்ரமத்தெக் கூட ஒங்களுக்கு குடுக்கமாட்டா.

**ராம** :...ஆளு பிள்ளெயெ கொடுத்துடுவா!...ஐயோ எவ்வளவு ப்ரீதி! நீ வரத்துக்கு முன்னே தான் சொல்லிண்டிருந்தேன் கிருஷ்ணயங்காரண்டே......எல்லாரும் எதிர்பார்க்கிறுப்போலெ எனக்கு ஏதாவது ஆய்ப் போளு...நீ...எனக்கு நெருங்கின பந்துவாச்சே. எங்கம்மா கெழவியெயும், என்னும்மண்டியாளெயும் சும்மா விட்டுடமாட்டேன்னு சொன்னேன்...வாஸ் தவம்தான்...என்ன இருந்தாலும் ரத்த பந்தம் விடுமா? அது தெரிஞ்சு தானே நம்ம பெரியவா ஜாயிண்ட் ஃபாமிலி ஸிஸ்டம் (அவிபக்த குடும்பம்)னு ஒண்ணு ஏற்படுத்திளு...நான் ஒங்களுக்கு சொல்லலே ஐயங்கார்வாள்?...ரொம்ப சந்தோஷம்! நமக்குள்ளே இருக்கிற மனஸ்தாபத்தெயெல்லாம் மறந்துட்டையே! என்ன இருந்தாலும் பங்காளியில்லேயா? டயத்துக்கு வந்தெயே!

**கோபி** :—பெரியண்ணு அப்படியெல்லாம் என்னெ ஸ்தோத்ரம் பண்ணக்கூடாது.

**ராம** :—சே! சே! ஒருநாளுமில்லே...நன்னுருக்கு.........

[சுப்பன் வருகிறுன்]

என்னடாது?

**சுப்** :—டாக்டர் வந்திருக்கிரார்ரு. யசமானெ பாக்கணுங்கிருரு. ரொம்ப கோவமில்லே பண்ணிக்கிட்டாரு! யசமானெ இத்தினி பேர் வந்து பாக்கும்படி விட்டுட்டோம்னு......

**ராம** :—அப்படியா? நீ ஒண்ணும் பயப்படாதெடா சுப்பா! அவராலே ஒன்னே ஒண்ணும் பண்ண முடியாது. ஒனக்கு ஒடம்பு ஒன்னுமில்லே. எனக்கேதாவது வழி வெக்கலாமே தவிர ஒன் வேலெயெயாவது ஒன்னெயாவது அசைக்க முடியாது, போ.

**கிருஷ்** :—ஸரி! அப்போ...நான் அப்பிடீ போய்ட்டு வரட்டுமா? கொஞ்சம் கார்யமிருக்கு...முடிஞ்சா நாளெ வந்து பாக்கறேன் மறுபடியும்.

**ராம** :—ஸரி! ரொம்ப ஸரி! இன்னொரு வேளே நாம் பேசிக்கலாம்......பொதுவா லோகத்தெப் பத்தி... ஸ்ரி! ஆல்ரைட் (எல்லாம் சரி) குட் மார்னிங்.

**கிருஷ்** :—ஸரி! ஐ ஷால் டேக் லீவ், குட் மார்னிங் (நான் விடைபெற்றுக் கொள்கிறேன். வந்தனம்) வரேன் ஸார் ராயர்வாள்.. ...ஸ்ரீ கிருஷ்ண!

[போகிறர்.]

**கோபி** :—அப்போ...நானும் போயி வரட்டுமா?

**ராம** :—சீ! சீ! இதுக்குள்ளேயா......அப்பிடியெல்லாம் போகக்கூடாது...ஏன்? உள்ளே போயி அம்மாவெ பார்க்கலேயோ?

**கோபி** :—அஹா! முன்னயே...இல்லே...அதான் இப்பிடி...

**ராம** :—தாட் இஸ் ஆல் ரைட் (அது ரொம்ப சரிதான்) டோண்ட் ஒர்ரி! (கவலே வேண்டாம்), நன்ணு புரிஞ்சுது...ஸரி...மறுபடியும் பாக்கறது! இங்கே யில்லாவிட்டாலும் வேறெயெங்கேயாவது...ஏண்டா சுப்பா! என்னடா இங்கே நிக்கறெ? போயி டாக்டரை வரச்சொல்லேன்.

[சுப்பன் போகிறன்]

கோபி :—நான் தினம் வந்து பாத்துண்டு போறேன்... அதெவிட எனக்கு வேலெதான் என்ன? ஹி...ஹி...

ராம :—சே! சே! இருந்தாலும் ஒனக்கு நான் வீண் ச்ரமம் கொடுக்கலாமா? ஒண்ணும் தொந்தரவு பண்ணிக்க வாண்டாம்...நான் சொல்லி அனுப்பறேன்...அதுதான் ஏதாவது நடந்துபோனு......எனக்காக வீணு க்லேசப்படாதே...நான் அப்பிடி அவசரப்பட்டுப் போறதாயில்லே—எங்கேயா? செத்து......இன்னும் ரொம்ப நாளாகும்......ஆகையினலே வீணு ஒர்ரி (கவலே) பண்ணிக்காதே.....அதோ டாக்டர் வருர்..... ஊம்.....குட் பய் (போய் வா)

[கோபிநாத ராவ் போகிறன்]

ஐயோ பாவம்! இது ஒரு ஜன்மம்!

[டாக்டர் நாயுடு வருகிறர்]

வாங்கோ டாக்டர்! வாங்கோ...இப்டி ஒக்காருங்கோ. என்ன? சமாசாரமென்ன? இப்பொ வெளியிலே போன எங்க பங்காளி முகத்தெவிட ஓங்க முகம் ஏனய்யா நீளமாயிருக்கு?

நாயுடு :—அவரு எதுக்காக வந்தாரு?

ராம :—நான் செத்துப்போகப் போறேனே யில்லியோ அதான்னு தோணரது.

நாயுடு :—என்ன ஸார்? இப்படியெல்லாம் ஓங்களுக்கு யார் சொன்னுங்க?

ராம :—சுப்பா! [சுப்பன் வருகிறன்]

மிர்ரர் (கண்ணுடி) கொண்டுவாடா.

[கண்ணுடியைக் கொண்டு வருகிறன்]

இதோ! இதிலே பாருங்கோ! இந்த மூஞ்சி ப்ரகாசம்......ஏனய்யா மூணுமொழ நீளமிருக்கு ஒம்ம மூஞ்சி?

நாயுடு :—நீங்க என் மூஞ்சியே வர்ணிக்கறது எனக்கு ரொம்பச் சிரிப்பு வருது. [சிரிக்கிறர்]

ராம :—அப்பொ நீளம் கொறஞ்சு அகலம் அதிகமாகும்.

நாயுடு :—அது ஸரிதான்! ஒங்க ஞாதிக்கு நீங்க சிக்கா யிருக்கிறதெ யாரு சொன்னது?

ராம :—ஏன் டாக்டர்? வியாதி விஷயமான நியூஸ், கெட்ட நியூஸ்தானே... அது தாணுகவே பரவும் பாருங்கோ... ஊருக்கெல்லாம் தெரிஞ்சிருக்கச்சே என் ப்ரீதியான பங்காளிக்குத்தாணு தெரியக்கூடாது? ஏன் ஸார்?

நாயுடு :—என்ன ஸார்? ஒங்களுக்கு ஸீரியஸ்னு கேட்ட தாகவா சொன்ஞரு? யாரு ஸார் சொல்லி யிருப்பாங்க?

ராம :—யாரு?......அவன் மனஸேயோ....இல்லாப்போஞ என் டாக்டர்களோ?

நாயுடு :—ஐயையோ! என் பாவமா? நான் ஒத்தருக்கும் மூச்சுகூட உடல்லியே......இதோ நேரா மதராஸ் லேந்து வறேன்...நானு வரக்கொள்ள ஒங்க தாயாரு கதவண்டெ நின்னுக்கினு ரொம்ப யுக்தியாக் கேட்டு தெரிஞ்சுக்குணும்னு கூட பாத்தாங்கோ.... நானு? க்ல!...க்ல!......வாயெக்கூட தெறக்காதெ அப்படியே வந்துட்டேன்......

ராம :—ஓ! அங்கே இருந்தாளோ?......டாக்டர்! என்ன? எங்கம்மாவெ பித்தூன்ஞ பாத்திங்க? இல்லெ! ஒங்க மனஸிலே இருக்கறத்தெத் தெரிஞ்சிக்க அவளுக்கு அவ்வளவு கெட்டிக்காரத்தனம் வேணுமா? இதோ! இந்த க்ஷணத்திலே ஒண்ணு பாக்கியில்லாதெ எல்லாம் தெரியும் அவளுக்கு......

நாயுடு :—ஒங்க தாயாரெ நீங்க எவ்வளவாஞ மெச்சிக் கொங்க.........ஆஞ, எங்கிட்டருந்து அந்தம்மா ஒண்ணும் தெரிஞ்சுக்கலெ.

ராம :—ரொம்ப ஸரி! இல்லெ!...இல்லே...என் சமாசார மென்ன? டோண்ட் வேஸ்ட் டைம். (காலத்தைப் போக்க வேண்டாம்) எப்படி முடிவு பண்ணினீங்க?

நாயுடு :—முடிவா?.........அட ராமா! பண்ணியிருந்தா தேவலையே!

ராம :—என்னய்யா இது என்னமோ கூடமாப் பேசறீகளே....டாக்டர்! நான் செத்துப் போறதுன்னு நீங்க தீர்மானிச்சுட்டிகளா இல்லையா ?....எனக்கெவ்வளவு கெடுவு வைச்சிருக்கிறிக ?

நாயுடு :—அப்பிடி ஒண்ணும் நான் நெனக்கல்லெ...... இருந்தாலும் பாருங்கோ.....

ராம :—"இருந்தாலும்" என்ன? ஸார்! டாக்டர்! நான் கொழுந்தெயில்லெ..............வயஸான ஆம்பளெ. வேண்டிய நாள் வாழ்ந்தாச்சு. ஐயா! வாஸ்தவமா சொல்றேன்......எனக்குப் போரும்......இருக்கறதெ நெனச்சுண்டா வாயிலெடுக்கவறது. ஐ ஆம் ஸிக் ஆஃப் லைஃப் (எனக்கு வாழ்க்கையில் வெறுப்பாயிருக்கிறது). ஆனா, வாழ்க்கைக்கும் என் மேலே வெறுப்பா என்னு தான் பாயிண்ட் (பிரச்னை). அவ்வளவுதான். போகத் தயாரா யிருக்கேன்...எனக்கு ஒன்னும் பயமில்லெ... எல்லாரும் போக வேண்டியவா தான். ஆனா இன்னிக்கா நாளெக்கா என்னுதான் க்வஸ்டியன் (கேள்வி.) அடெ, எப்பொ போறு என்னுய்யா ?...... முழிச்சமுழாதே ஐயா! முழுங்கி தொலைக்காதே....... நீரும் ஆம்பளெயா என்னெயும் ஆம்பளெயா மதிச்சு ஒளிக்காதெ, தேங்கா ஒடச்சாப்பலெ உள்ளத்தெ உள்ளபடி சொல்லும் ........அட! வாயெத் தெறவுமய்யா!

நாயுடு :—நீங்க ரொம்ப இது ஸார்......

ராம :—எது ?

நாயுடு :—ஐ மீன் (நான் நினைக்கிறது) ரொம்ப டிஃபிகல்ட் பேஷ்யண்ட் (உபத்ரவமான வியாதிக்காரர்) ஸார்.

ராம :—பேஷ்யண்ட் (வியாதிக்காரர்)ன்னு ஆயிட்டாலே பேஷ்யன்ஸ் (பொறுமை) இருக்கறதேயில்லை ஸார்! அதனாலேதான் அந்தப் பேர் வெச்சாங்களோ என்னமோ ?

நாயுடு :—இருக்கலாம் ஸார்! இருக்கலாம்........டாக்டர்களுக்கு அந்தப் பேரை வெச்சா சரியாயிருக்கும்...... அவா வாங்கற ஒதெக்கு.

ராம :—டாக்டர்! என்ன ஒரே வார்த்தையிலெ எல்லாரெயும் ஒண்ணுக்கிவிட்டீரே!......அப்படி நீர் ஒண்ணும் என்னண்டே வாங்கலெபோலெ இருக்கே...... பீஸ் தவிர.

நாயுடு:—ஃபீஸ்! என்ன ஃபீஸ்? யாருக்கு வேணும் ஸார்? நாங்க ஒரு கௌரவமான தொழிலெச் சேர்ந்தவா. கேவலம் கட்டி மாத்தரெ கொடுக்கற க்வாக்ஸும் (போலிகள்), கலரைத் தண்ணியிலே கரைக்கிற கம்பவுண்டர்ஸும் இல்லெ! வியாபாரிகளுமில்லெ! வ்யாஜ்யத்தெ வெலெக்கி வாங்கற வம்பு வழக்குக் காரருமில்லெ ...... மத்தவாளுடைய உயிர்களேயும் சுகத்தையும் காப்பாத்தறதுக்காக எங்க சுகத்தையும், க்ஷேமத்தையும்.....ஐயா, உயிர்களேயுங் கூட த்யாகம் செய்யத் தயாரா இருக்கப்பட்டவா... ஏன் ஸார் வீண் வார்த்தை....... இந்த மனுஷ கோடிகளுடைய சுகதுக்கங்கள் எல்லாத்துக்கும் நாங்கதான் ஸார் உத்தரவாதம்!

ராம :—அப்பாடா! இந்த லெக்சரைக் கேட்ட பிற்பாடு இன்னமே எனக்கு ஆயிரம் உயிர்கள் இருந்தாலும் எல்லாத்தெயும் கண்ணெ மூடிண்டு ஒம்ம கையிலேயேதான் ஒப்பிச்சுடுவேன்! ஸரி...... இப்பொ நான் என்ன செய்யணும்னு சொல்றிக?

நாயுடு :—ஜாஸ்தியா ஒண்ணு மப்படியில்லே......கடசீலெ பார்க்கப்போனா ரொம்ப ஸர்வ ஸாதாரணமான விஷயமா ஏற்பட்டாலும் ஆய்ப்பூடும்....நாம் கன்ஸல்ட் பண்ணின டாக்டர்கள் எல்லாரும் ஒரே மனஸா அபிப்ராயப்படறு......என்னன்னு கேக்கறீங்களோ?...இது கொஞ்சம் அர்ஜண்ட் கேஸ். மேஜர் ஆபரேஷன் செய்ய வேண்டிய கேஸ். டிலே கொஞ்சம் கூட ஒதவாது......அவ்வளவுதான்.

ராம :—என்னது? எந்த வியாதிக்காக ஆப்ரேஷன்...... அவா சேஞ்ச டயக்னோஸிஸ் (நிர்ணயம்) என்ன? ......நோவுக்கு காரணமென்னன்னு சொல்றா?

நாயுடு :—பாத்திங்களா? மெடிகல் ஸயன்ஸ் (வைத்திய சாஸ்திரம்) படிக்காதவங்க சமாசாரம் எப்பவும் இதான்......ஆனு, 30, 40 வர்ஷத்துக்கு முன்னே யிருந்த டாக்டருங்களெ விட நீங்க கெட்டுப் போவலெ. அவங்க என்ன சேஞ்சிண்டிருந்தாங்க? ஒரு எடத்திலே ஏதோ கட்டியோ பொளவையோன்னு நிச்சயம் பண்ணிக்கினு, அந்த எடத்துலே அப்புறம் அதுக்கு ஆப்ரேஷன் பண்ணிக்கினிருந்தாங்க...அது என்ன ஸார்! தொழிலே தலைகீழா செய்யற தில்லே?......இப்பொல்லாம் நாங்க—அதாம் பெரிய ரண வைத்தியருங்கல்லாம்—என்ன செய்யறது தெரியுமா........எந்த எடத்துலே நோவுண்ணு சொல்றுங்களோ, அங்கே உடனே கீறி அறத்து ஆபரேஷன் பண்ணிடறது......அப்புறம் பாக்கறது உள்ளே என்ன மிஷ்டேக்குண்ணுட்டு......ஏன் ஸார்?

ராம :— பேஷ்! ஆமாம் உள்ளே ஒண்ணும் மிஷ்டேக் தெரியாப்போனு?

நாயுடு :—வாட் ஸார்!! (என்ன ஸார்) ஒப்பன் பண்ரவனுக்கு க்ளோஸ் பண்ணி தெச்சுவிடவா தெரியாது.

ராம :—நீங்க ஸந்தேகப்பட்ர எடத்தெல்லாம் ஓபன் பண்ணிப் பார்த்துட்டு க்ளோஸ் பண்ணிண்டு வறதா?

நாயுடு :—எல்லாம் க்விக் வொர்க்......(சீக்கிரம் நடக்கும்:) மின்னல் போல் செய்வோம். நாங்களல்லாரும் இப்போ......சில வேளெலெ பாருங்க, ஞாபக மறதியா எதானு ஆயுதம் கீயுதம், பஞ்சு கிஞ்சு, ரப்பர் கிப்பர் எத்தயானும் உள்ளேயே வைச்சுத் தச்சுப்புட்றதுதான். பின்னலே தேடிப்பாக்கக் கொள்ள சாமான் ஆம்படாப்போனு தெரியவருங்க...

ராம :—ஆமா. அதுங்கதி அப்புறம்......?

நாயுடு :—கடந்து போவுதுண்ணுட்டு கம்முனு உள்ளேயே உட்டுட்டாலும் உட்டுடுவோம். இல்லாப்போனு திரியும் க்ளோராஃப்பாம் குடுத்து ஒப்பன் பண்ணி எடுத்துடுவோம்.

ராம :—ஆமாம் ஸார்—நீங்க ஓப்பன் பண்ணி க்ளோஸ் பண்ணிண்டு வரத்துலே மனுஷன் உசுரே பூட்டா ?

நாயுடு :—அப்படிப் போர உசுரு எத்தனெ நாளு இருக்க போவுது ஸார் ? நாங்க கயத்தெப் போட்டா கட்டி வைக்கமுடியும் ?

ராம :—எஸ், எஸ்—(ஆம்-ஆம்) கோய்ட் ரைட் (ரொம்ப சரி).

நாயுடு :—அதுலே இன்னொரு பாயிண்ட் (விஷயம்) இருக்குது பாருங்கோ. ஓபன்பண்ணிப் பாக்கச்சே உள்ளே ஒண்ணும் மிஸ்டேக் இல்லாப்போனு, எதுக்கும் உள்ளே இருக்கிறதெல்லாம் சுத்தம் பண்ணி நீட்டா மறுபடியும் தெச்சுபுட்டா...என்னு... மோட்டார்காரை கயட்டி ஓவரால் செய்றுங்க பாருங்க. அதுபோல...... அப்பறம் ட்ரபிள் (தொந்தரவு) கடயவே கடயாது....

ராம :—பேஷ் ! பேஷ் ! நல்ல ஐடியா (யோசனை) டாக்டர் ஓவரால் செய்யற ஆப்ரேஷன் ! ஒரே ஒரு சமாசாரம். என் டாட்டர் (மகள்) பத்மினி இங்கே இல்லே........ அவளுக்கு தந்திகூட அனுப்பியிருக்குது......யூ ஸி (நீங்கள் பாருங்கள்) எனக்கு ரொம்ப அவமேலே தான் பத்து.........என்னெ மோட்டார் காருன்னு சொன்னிங்க பாருங்க......இந்த மோட்டார்காருக்கு அவ தான் டிரைவர் !...நாளைக்கு வந்துடறு. அவளெ ஒரு வார்த்தை கேட்டுட்டு நாளை ஈவனிங் (மாலை) சொல்லக்கூடாதா ?......ஏன் டாக்டர் ?

நாயுடு :—ஸரீ......செய்யுங்க......ஆறு டிலே (தாமதம்) சேஞ்சா—டேஞ்ஜர் (அபாயம்).........

ராம :—என்ன அபாயம் டாக்டர் ? எனக்கு என்ன ஒடம்பு ? ஒங்க சந்தேகமென்ன ?.........அதைச் சொல்லுங்க.

நாயுடு :—ஸந்தேகமே இல்லே......அந்தக் காலமெல்லாம் போச்சு. இதோ உட்டு சொல்றேன் கேளுங்க...... ஒங்க அடி-வவுத்துலே......ஒரு விதமான......கெட்ட வஸ்து வளர்ந்துக்கினு வறது......அது ஒரு மாதிரி

செடியாட்டம் வளருது......செடி இண்ணு......செடி அல்ல......அது ஒங்களுக்கு சொன்னு தெரியாது.... அதுக்குக் காரணம்......இப்ப......பாருங்க......நம்ம மதராஸ் முனிஸிபாலிடிலே புது வாடர் ஸப்ளை ஏற்பாடு சேஞ்சாங்களே......அது.........மொதல்லே புடிச்சு வாணும் வாணும்னு அடிச்சுகினு எவ்வளவோ சொன்னோம், டாக்டருங்க...அந்த பாவிக் கவுன்ஸலருங்க.

ராம:—அது போகட்டும் டாக்டர்!...இப்போ இந்த ஆபரேஷன் செய்யாபோனா......இன்னும் எத்தனை காலம்...கொஞ்சம் நோவு இருந்தாக்கூட....உயிரோட இருக்கலாம்?

நாயுடு:—அது என்னமா சொல்றது?....கொஞ்சம் அவர்ஸ் (மணிகள்) இருக்கலாம்...இல்லெ...கொஞ்சம் டேஸ் (நாட்கள்), ஒரு வேளை கொஞ்சம் வீக்ஸ் (வாரங்கள்)... இல்லாகாட்டி மன்த்ஸ் (மாதங்கள்) கூட இருக்கலாம். கொஞ்சம் இயர்ஸ் (வருஷங்கள்) இருந்தா கூட இருக்கலாம்.

ராம:—ஒழியறது; ரொம்ப ஸ்பஷ்டமாத்தான் சொல்லிட்டுங்க...போகட்டும்...என்ன செய்தா முடிவு சீக்கிரமா வந்துடும். அதெ சொல்லுங்கோ.

நாயுடு:—என்ன ஸார், நீங்க வைத்திய சமாசாரம் ஒன்னும் தெரியாதவரு. உங்களுக்குப் புரியும்படி சொல்றது மெத்தக் கஷ்ட்டம்......பாருங்க...மனுஷ த்ரேகம் இருக்குதே... அதுலே ஸதா எப்பவும்...பாசி புடிச்சிக்கினே வருதுங்க......பாசிங்க! பாசி......தண்ணிலே வருது பாருங்க......பாசி......இந்த பாசியெ படர வுட்டாதெ அப்பப்போ கண்ட்ரோல் பண்ணிக்கினு வரது டாக்டருங்க வேலெ....ஏதோ கொஞ்சம் அசந்து போயோ...ஏமாந்தோ...வுட்டுட்டா இந்த பாசி படந்துக்கினே வந்து...செடிங்க மரங்க மாதிரி வளரும்......உள்ளுக்குள்ளேயே வளரும்......அது வளர வளர உள்ளே கோளாரு அதிகமாயிக்கினே வராதா?......கடசிலெ.....அது ப்ரோயன்லே (மூளை)

டர் பண்ணுது......கபீல்ண்ணுட்டு ஞாபகம் பூடுது. ஆளு மரமாட்டம் தொபுக்குன்னு வுளுந்துடரா... அப்புறம். அவ்வள தா...

ராம் :—தாங்க் யூ டாக்டர்! இப்ப நல்ல க்ளியரா தெரிஞ்சு போச்சு......சொல்ல மறந்து பூட்டனே... என் ஸர்வண்ட் (வேலைக்காரன்) சுப்பன் இருக்கானே யு நோ ரொம்ப பெய்த்புல் சாப் (நன்றியுள்ளவன்), உங்களுக்குத் தெரியும். அவன் நேத்து ராத்திரி வந்து ஒரு டோஸ் வெளக்கெண்ணே – காஸ்டர் ஆயில்—சாப்பிட்டு பார்க்கலாமேன்னு சொன்னு... சாப்பிட்டேன்...இன்னிக்கி மார்னிங்கிலேந்து கொஞ்சம் தேவலையா இருக்காப்பலே இருக்கு...ஒரு வேளை. அது...

நாயுடு :—சே. சே. சே...ஒருக்காலுமில்லே...அதூ...... வவுத்தாலே போனத்துலே கொஞ்சம் ஜக்கி யிருக்குது...அது நோவு கொறஞ்சாபலே காட்டுது... அது இல்லிங்க...நம்ப ஊர் புது வாடர் ஸப்ளை செய்யற வேலெங்க அது...பாருங்க! இன்ஜினீயருங்க சொல்றாப்பலே டாக்டருங்க கேக்கணும்னு. வேறே என்ன நடக்கும்?...

ராம :—டாக்டர் கொஞ்சம் பொறுத்துக்குங்கோ...... நீங்க இப்ப சொன்ன பெரிய ஆபரேஷனைச் செய்து முடிச்சுட்டா, ஒங்க வேலைக்கு வேலையும் ஆய்ப் போறது...இஞ்சினியருங்க மேலே பழி வாங்கினாப் பலேயும் ஆய்ப்போறது......இல்லே?...ஸரி...நானை காலமே ஒம்பது மணிக்கு வாங்கோ!...கார் அனுப்ப றேன்...குட் மார்னிங்!

நாயுடு :—குட் மார்னிங் ஸார்! வ்ரேனுங்க.

(போகிறார்.)

ராம :—என்ன? வாஸ்தவமாகவே எனக்கு அவ்வளவு நோயா? வாட்டர் வோர்க்ஸ் வேலைதானு? யாருக்குத் தெரியும்?

# காட்சி 2

## ராத்திரி 9-30 மணி

### ஜமீன்தார் வீட்டு முன்புள்ள தெரு

[சமையற்காரன் ராகவனும் வேலைக்காரன் சுப்பனும் வருகிறார்கள்]

சுப் :— என்னய்யா இது? நானும் பாத்துகிட்டு இருக்கறேன். ஐயாவுக்கு ரெண்டு நாளா ஒடம்பு சொஸ்தமில்லாதெ, அவஸ்தே பட்டுக்கினு இருக்காரு. ஒத்தருக்கானு நெஜமான அக்கரயே காணமே...சே!...சே!

ராக :— எல்லாரையும் ஒண்ணு ஆக்கிடாதடா சுப்பா!

சுப் :— என்னய்யா, நீயும் நானும் என்ன சேஞ்சுட முடியும்? ஒன்னுலே ஆனது காபி நல்ல தீக்கா போட்டுக் கொடுப்பே...என்னமோ ஒங்க அண்ணாத்தையெ இட்டுகினு வந்து காம்பிச்சே...அவரு என்ன பாசு கீசு சேஞ்சுருக்கிறாரா?

ராக :— ஆமா...பாசு செஞ்சவனெல்லாம் கிழிச்சுடறானே! முக்கால்வாசி டாக்டர்கள் சும்மா கொழாத்தண்ணியே கலரைக் கரைச்சு குடுத்துட்டு, காசெ வாங்கிண்டு போறவன்கதான்......அதுலே கொஞ்சம் சாமர்த்தியக்காரன் அதே கொழாத் தண்ணியே ஊசியிலே கொட்டி உடம்பிலே ஏத்திட்டு இன்ஜக்ஷன்னு சொல்லி, அஞ்சு ஆறுன்னு வாங்கிடறான். எங்க தமயன் என்ன கெட்டுபூட்டார். ஆயிரம்பேரைக் கொல்றவனே அரைவைத்தியனும். ஆயிரக் கணக்கான வயித்தர்களை கொல்லாதே காப்பாத்தி இருக்காரே அவர்...டிபன் ஸப்ளை பண்ணி...ஊ... ஊ-ம்!

சுப் :— ஹ - ஹ - ஹ - ஹ - ஹா (சிரிக்கிறன்) நல்ல போடு போட்டே ஐயா! அது என்னமோ உண்மைதான்... நேத்து வந்தானுங்களே அத்தினி டாகுட்டருங்க, என்னதான் செஞ்சுட்டானுங்க? காச்சு மூக்சுன்னு

கத்திபுட்டு காசெ வாங்கிப் போட்டுக்கினு போயிசேந்தானுங்க. ஆளுக்கு இருபதோ முப்பதோ இருக்கும் போல இருக்குது...ஓங்கண்ணுத்தை நெஜமான மனஸோடெ தன் கையாலே தண்ணியே கொட்டி கொடுத்தாக்கூட அதுக்குப் பலன் இந்திருக்கும்!

ராக:—எங்க ஊரிலே அவருக்கு நல்ல பேர்தான்...அது இருக்கட்டும்...காலமெ போனவன் இப்பதான் வந்தே, எங்கே போயிருந்தேடா?

சுப்:—சாமி அது ஒரு ரவசியம்......சொன்னு சிரிக்க மாட்டயே?

ராக:—சிரிப்பென்ன வேண்டிருக்கு சிரிப்பு! நம்பளே பாத்து நாலுபேர் சிரிக்காதெ இருந்தா போராதா?

சுப்:—நல்லா சொன்னெ சாமி! சின்ன வயசுலெ கொஞ்சம் கஷ்டப்பட்டு படிச்சிருந்தா நீ நன்னு முன்னுக்கு வந்திருப்பே ஐயா!

ராக:—போரும் போரும், என் கரண்டி ஆபீஸ் வேலை நெலயா நின்னு போரும்...எங்கேடா போயிருந்தே?

சுப்:—சாமி, வடக்கே பத்து மைலுக்கு அப்பாலே சென்னிமலேன்னு ஒரு மலே இருக்குது. அதுக்கிட்ட ஒரு கொஹெலே ஒரு பெரியவரு இருக்காரு சாமி! அவரு ரொம்ப பெரியவரு. அவரு கையாலே கொடுக்கற மருந்துக்கு சொஸ்தமாவாத வியாதியே கெடயாதய்யா?...நம்மய்யா படற கஷ்டத்தைப் பார்க்க முடியலெ..சொல்லாதெ கொள்ளாதெ ஓட்டமா ஓடிப் போயி அவரு கால்லே உழுந்து கேட்டேனுங்க. அவரு ஒருமாதிரி சிரிச்சுபுட்டு, நாலு சின்ன உருண்டைங்க சேஞ்சு கொடுத்தாரு. அதெ எடுத்துக்கினு ஓடியாந்து அய்யா கிட்டகொண்டு கொடுத்தேனுங்க.. என்ன பண்ணுரு?.. எல்லாத்தையும் சொல்லி அவரெ சாப்பிடச் சொல்லி ரொம்ப தூரம் கேட்டுக்கினே...... சிரிச்சாரு......இதோ பாரய்யா! அந்த பெரியவரு சிரிச்சமாதிரியே அய்யாவும் சிரிச்சாரு......க்ல! க்ல! க்ல!..என்னெ ஒரு மாதிரி உத்துப்பாத்தாரு .... ஒடம்பு பலம் இல்லியா? உத்து பாத்ததோ

என்னமோ, கண்லெ மலமலன்னு தண்ணி வந்துடுச்சு ...சரிதான் கொடுன்னுட்டு மருந்தெ வாங்கி வச்சுக்கிறுரு...சாப்பிடுவாருன்னு தோணுது...ஏன் ஐயா? நம்ப ஐயாவுக்கு ஒண்ணு பாத்திருக்கயா? எல்லாம் தெரிஞ்சும் ஒன்னும் தெரியாதுபோல இருக்காரு; இங்கே வர ஆசாமிங்களெ அவரு அளவெடுத்து வச்சு இருக்கிருரு.

ராக :—அது அவாளுக்கு தெரியலயே!...எதுக்கும் இந்த வேலையிலே அந்தப் பத்மா இராதெ போகணுமா!... அந்தப் பொண்ணு ஒன்னுதான் அவரெ கவனிக்கும், பாவம்! பாக்கிபேரெல்லோரும் சுய காரியப் புலிகள் தான்...டே சுப்பா! நானு சொல்றத்தெ கேளு.... எப்பவும் ரெண்டாவது பெண்டாட்டியே மாத்திரம் கல்யாணம் பண்ணிக்காதே.

சுப் :—யாரு ரெண்டாம் பொஞ்சாதியெ?....

ராக :—என்னடா ஒளர்ரியே! பொதுவா சொல்றேன்டா. இரண்டாவதா வரவ, ஸாதாரணமா வயசு ரொம்ப சின்னவளா?......மனஸெல்லாம் ஷோக்கு சேஞ்சுக்கறது, தளுக்கு பண்ணிக்கறது, இதுகளிலே தான்...வீடு, புருஷன்...அதெல்லாம் அப்பறம்தான் ...இந்த வீட்டிலே நடக்கறத்தெ பாக்கறமே...

சுப் :—சாமி, நானு மொத்தமா ஒரே அடியா அப்படி சொல்லிடமாட்டே....அல்லாம் பொறப்புலெ இருக்குதுங்க..நல்ல கொலத்துலே பொறந்தவங்க நடத்தையே வேறெதான்....என்னமோ நம்ப ஐயா போயி எந்தக் காட்டுலெந்தோ பிடிச்சு வந்தாரு... இப்போ பத்மா அம்மாளெ பாருங்க...அல்லாம் அவங்க ஆத்தாதான், அப்பிடியே உறிச்சிக்கிணு வந்துருக்குது...பாவம்! அத்தெ பாத்து வயறெரிஞ்சு சாவராங்க இந்த சின்ன ராணி....இவங்களே யாரு ஒரு பொண்ணே பிள்ளேயோ பெத்துக்க வாணும்னு சொன்னது? அத்தெ காணம்! நம்ம ஐயா என்ன கெழமா, கட்டா?

**ராக** :—அதெல்லாம் எங்கேடா! ஸதா வெனெயிலே வெந்துண்டு போருளே....எங்கே கொழந்தெ பொறக்கும்? அட்டே! யாரிது?

[இரண்டு பிச்சைக்காரர்கள்—ஒருவன் பெரியவன், மற்றொருவன் சிறு பையன்—வருகின்றனர். அவர்கள் பாட ஆரம்பிக்கின்றனர்.]

**ராக**.—டே! டே! டே! நிறுத்தடா! நிறுத்து! கூச்சல் போடாதேடா!....ஐயாவுக்கு ஒடம்பு சுகமில்லேடா.

[பிச்சைக்காரர் நிறுத்தி விடுகின்றனர்.]

**மூ. பிச்** :—இல்லே சாமி! எங்கப்பனுக்கு என்ன ஒடம்பு சாமி? பாவம்! தர்மதொரெ அவரு நல்லா யிருக்கணும்!

**ராக** :—எதொ ரெண்டு நாளா ரொம்ப கஷ்டபடுருர். நீங்க கத்தருதலெ வேதனேயாயிருக்கும்...தூங்கர சமயம்.

**சுப்** :—ஐயாவுக்கு இந்த மாதிரி பாட்டுன்ன ரொம்பப் பிரியம்....நான் போய் பாத்துக்கிணு வர்ரே....தூங்க ராரா என்னுன்னுட்டு. [போகிறன்.]

**ராக** :—இந்த பையன் யாரு? ஒம்பிள்ளேயா?

**மூ. பி**.—இல்லிங்க! இவன் ஒரு அனுதி பையனுங்க. இவனுக்கு யாருமே கதி இல்லிங்க! பாவம் நல்லா பாடுவானுங்க!

**ராக** :—ஏண்டா? இவனுக்கு படிப்பு கிடிப்பு சொல்லி வெக்கக் கூடார்தா?

**மூ. பி** :—ஏழை பிள்ளெங்கனெ யாரு சாமி! கேக்கராங்க? ஏழைங்களுக்குனு வச்சிருக்கிற பள்ளிக்கூடங்களிலே பணக்கார பசங்கதான் படிக்கருங்க.

**சுப்பன்** :—(வந்து) ஐயா முழிச்சிட்டுதான் இருக்கிருரு. இவங்களே பாடச் சொன்னுரு....நல்லா இருக்குதாம்....இத்தெ கொடுக்கச் சொன்னுரு.

[ஒரு ரூபாயைக் கொடுக்கிறன்; பிச்சைக்காரர் பாட எல்லோரும் சந்தோஷிக்கின்றனர்.]

ராக :—அடே டே ! சிவ பூஜையிலே கரடியே விட்டாப் பலே இந்த எழவு அர்த்த ராத்திரியிலே எங்கே வரது.

சுப் :—மரம் பழுத்துடுச்சானு வௌவாலே யாரு கூப்பட் ராங்க ?

[பிச்சைக்காரரிடம்]

அடே ! இதோ பாரு. வரூரே அவரு ரொம்ப பெரிய பணக்காரரு !....நம்ம ஐயா பொண்ஜாதிக்கு தகப்பனுரு....அவரெ துட்டு கேளுங்க.

[விட்டல்ராவ், அவர் பிள்ளை,
ஜட்காக்காரன் வருகிறர்கள்.]

விட் :—அடே, அந்த மூட்டெயெ அங்கே திண்ணை மேலே வச்சுட்டுவா...

[ஜட்காக்காரன் மூட்டை கொண்டு போகிறன்]

அடே, நில்லுடா ! அந்தச் சின்ன மூட்டெயெ பையனண்டே கொடுத்துடு...ஹு...ஊம்.

[ஜட்கா வண்டிக்காரன் சற்று நிதானித்து மூட்டைகளைக் கீழே இறக்குகிறன். சிறுவன் சிறிய மூட்டையை எடுத்துக் கொள்கிறன். ஜட்கா வண்டிக்காரன் பெரிய மூட்டையைத் தூக்கிக்கொண்டு உள்ளே போகிறன். சிறிய மூட்டை ரொம்பவும் கனமாக இருப்பதால் பையனல் அதைத் தூக்க முடியவில்லை. அதைக் கீழே பல இடங்களிலும் அவன் போடுவதால் அதிலிருந்து பூட்டுகளும் சாவிகளும் கீழே சிதறி விழுகின்றன.]

விட் :—(பையனை அடித்து) கழுதே ! என்ன அவ்வளவு அஜாக்ரதெ !...

ராக :—என்ன இது ? இத்தனெ பூட்டுகள் எதுக்கு ?

பையன் :—இந்தாத்துக்குத்தான் ! சீக்ரம் வேண்டி யிருக்குமென்னு...

விட் :—(அவன் வாயைப் போத்தி) பேசாமே இரு, அதிகப் பிரசங்கி ! ஒன்னெ யாரு கேட்டா ?...பயலுக்கு ஒன்னும் தெரியாது !...வேறே எதையோ நெனச்

சுண்டு பேத்தருன்......வரச்சே வழியிலே ஒத்தன் கொண்டு வந்தான்...ரொம்ப சீப்பா கொடுத்துடரதா சொன்னுன்...பூட்டுகள் நன்னு இருக்கு. ஸரீன்னுட்டு வாங்கிப்போட்டேன்......பூட்டுக்கு எப்பவும் உபயோக முண்டோல்லியோ!

சுப்:—ரொம்ப சரிங்க! மொதல்லே ஒண்ணே எடுத்து பிள்ளெயாண்டான் வாய்க்குப் போட்டுடுங்க!

[எல்லோரும் சிரிக்கின்றனர். விட்டல்ராவ் முறைத்துப் பார்க்கிறன்.]

ஜட்:—(வந்து) சாமி! மூட்டேயே வச்சுட்டேனுங்க, நம்ப கூலியெ குடுங்க!

விட்:—அடே சுப்பா! உள்ளே போய் அம்மாவெக் கேட்டு இந்தப் பயலுக்குக் காசு கொடுத்தனுப்பு.

சுப்:—அம்மா எல்லாரும் படுக்கப் போயிட்டாங்களே... நானு போயி எளுப்பறதா?...

விட்:—அடே! என்னடா இது? எங்கிட்டே சில்லரெ இல்லெ போலிருக்கே?

ராக:—எவ்வளவுக்கு?

விட்:—கால் ரூபாய்க்கு.

ஜட்:—என்னய்யா அது? காருவாய்க்கா? சில்ரெயா? சத்தம் எம்பட்டுன்னு நெனச்சிக்கினு பேசரே?...

விட்:—சும்மா எரையாதெடா! (ஒரு கிழிந்த பையை எடுத்து வெகு நேரம் தடுமாறி 2 அணு எடுக்கிறர்.) இந்தா.

ஜட்:—என்னய்யா இது? என்னய்யா இது? நீயே வச்சுக்கோ.

விட்:—எரையாதேடான்னுக்க...

ஜட்:—சும்மா அடாபுடா இன்னுதெய்யா. ஒங்க வூட்டு வேலேக்காரனு நானு?......ரயிலடிலேந்து நானு மைலாச்சு, மூணு ஆளு, மலே மூட்டையே சொமந்துக்கினு வந்தா, என்னமோ 2 அணு குடுக்கறயே.

விட்:—மூணளாம் மூணளு ..ஏதுடா, ஏதப்பா?

**ஜட்** :—நீயே ரெண்டரை ஆளாச்சே... கூட ஒரு பையன்! அடே என்னயா! சும்மா மரியாதையா குடுத்துடு, தெரியுமா ?

[கத்துகிறன்.]

**ராக** :—வண்டிக்காரா! இங்கே கத்தாதே. ஐயாவுக்கு ஒடம்பு ஸரியில்லே... ஒனக்குச் சத்தம் சரியா சேராப் போளு...

**ஜட்** :—நீ எனக்குச் சொல்லித்தர வாணுய்யா! (பையனிட மிருந்து பூட்டு மூட்டையைப் பிடுங்கிக்கொள்கிறன்.) இதோ எனக்கு சேரவேண்டிய ரூபாயே கொடுத்துட்டு இத்தெ வாங்கிக்கிணு போங்க...

**விட்** :—அடே, டே, டே, டே! அதெ எடுக்காதேடா... ரொம்ப முக்யமான சாமான்கள் இருக்கு அதுலெ...

**ஜட்** :—என்ன தான் பாத்துடலாமே! (மூட்டையைப் பிரித்துப் பூட்டுகளைப் பார்க்கிறன்.) அட சீ, துரு பிடிச்ச பூட்டுங்க! இது காலணுகூட தாளாதே! (கீழே எறிகிறன்) கொண்டாய்யா ரூபாயெ, இல்லாப்போளு...

**விட்** :—இதென்ன சங்கடம்? எங்கிட்ட அடியோடெ காசே இல்லெயே.

**பையன்** :—என்னப்பா! மறந்தூட்டயே! ரயில் ஸ்டேஷன்லே நான்தான் பத்து ரூபா நோட்டுக்கு சில்லரை மாத்திக்கொண்டு வந்து குடுத்தேனே. நோக்கு மறந்து மறந்து போறதப்பா...!

**விட்** :— (பற்களைக் கடித்துக்கொண்டு) கழுதை! இந்தாடா...

[இன்னும் ஒரு 2 அணு கொடுக்கிறர்.]

**ஜட்** :—(வாங்கிக்கொண்டு)...... கருமாந்தர பாப்பான், ரயிலடிலே வெளக்கு நல்லா இல்லாததாலே எனக்கு நஷ்டம்!

**சுப்** :—அது ஏன் அப்பா?

**ஜட்** :—அங்கே வெளக்கு நல்லா இருந்திருந்தா, இந்த மூஞ்சி... இந்த தாராள தொண்டி மூஞ்சியே பாத்திருப்பேன்... அப்போ அந்த மூட்டெயே தூக்கிக்

கிணு நடந்துதான் வந்திருக்கணும் இங்கெ...சே! குதிரெ பாவம் ஐக்கி பூட்டுதய்யா...பொணப் பளுவு!

[போகிறன்.]

**விட்.**—அயோக்கியப் பசங்கள்...

[பிச்சைக்காரர்களைப் பார்த்து]

நீங்க யாரடா?...என்னமோ சிரிக்கிறெளெ! பிச்சைக் காரப் பசங்களா!

**மூ. பி:**—சாமி! தர்மம் கேழ்க்கறேன் நாங்க ஏழைங்க சாமி!...(பாடுகிறன்.)

**விட்:**—சீ! சீ! கழுதைகளா! பிச்சை யெடுக்கறத்துலே பாட்டு வேறயா?

**இ. பிச்:**—அடே! இவருக்குக் கோபம் வந்தா மூஞ்சி நல்ல அழகாயிருக்குதடா!...ர்.. ர்...ர்...ர்...ர்...ர்...

**விட்:**—போக்கிரிக் கழுதை! உதைக்கிறேன் பாரு.

**இ. பி:**—அந்தக் காலாலேயா?...அண்ணத்தே! இவரு பேரு தெரியுமா?...

**விட்:**—(அவனை அடிக்கப் போகிறன்) போக்கிரிக் கழுதை! ஓடரயா இல்லையா...போ.

**ராக:**—அடே பையா! இந்தா? இதை வாங்கிண்டு போ!

[பிச்சைக்காரப் பையன் வருகிறன். 2 அண கொடுக்கிறன்.]

**சுப்:**—அவரு பேரு என்னடா? சொல்லப் போனவன் நிறுத்திட்டாயே.

**இ. பி:**—கலிகாலக் கர்ணன்...கொடையாளிக் கர்ணன்... இல்லே! இல்லே! கொலையாளிக் கர்ணன்!

[எல்லோரும் சிரிக்கிறர்கள். விட்டல்ராவும் பையனும் முணு முணுத்துக்கொண்டு உள்ளே போகிறர்கள்.]

**ராக:**—அடே! நீங்க இன்னெரு பாட்டு பாடிட்டுப் போங்கடா.

**பிச்—கள்:**—எங்கப்பனுக்கு நல்லா சுகமாவணும். நாங்க வர்ரோம்...ஐயா! காலங்காத்தாலெ பெரிய ஐயா

எழுந்துக்கச்சே நல்லா சுகமா எழுந்துப்பாரு. கடவுள் காப்பாத்துவாரு !

[போகிறார்கள்.]

ராக :—இவாளுக்கு இருக்கிற நன்றிகூட சொந்த மனுஷாளுக்கு இல்லையே.

இ. பி :— (திரும்பி வந்து) எங்கண்ணுத்தெ சொல்லச் சொன்னாரு...இப்ப வந்தாரே, அவரு படுக்கிற உள்ளே அவரு கொண்டு வந்தாரே அந்த பூட்டுலே ஒண்ணே எடுத்து பூட்டிவக்கச் சொன்னாரு. இனி வேளெலெமாத்திரம் திறக்கச் சொன்னாரு ! (ஓடுகிறான்.)

சுப் :—இந்த வேடிக்கையே எல்லாம் ஐயாவுக்குச் சொல்லணும் ! அத்தெக் கேட்டு சிரிச்சாலே கொணமாவும்...வா, போகலாம்.

[போகிறார்கள்.]

## காட்சி 3

### காலை

### ராமசந்திர ராவ் வீட்டில் மற்றொரு அறை.

ஒருபலகையும் இரண்டு நாற்காலிகளும் போடப் பட்டிருக்கின்றன. சுந்தரிபாய் வெள்ளைப் புடவையும் கண்ணில் மூக்குக்கண்ணாடியுமாய், கையில் ஒரு தடியுடன் பலகை மீது உட்கார்ந் திருக்கிறாள்...சற்றுத் தூரத்தில் கிரிஜாபாய் வேதமுடுக்காய் நிற்கிறாள்.]

சுந் :—ஆனா நீ கோபிநாதன் பிள்ளையே வளத்துக்க மாட்டே ?

கிரி :—அவனையும் வளத்துக்கமாட்டேன், வேறெவனையும் மாட்டேன்...அப்படி யாரையானா வளத்துக்கணுமானா என் தங்கை பிள்ளை எங்கே போனான் ?

சுந் :—யாரு ? ஒங்க தங்கை பிள்ளேயா ?...ரொம்ப அழகா யிருக்கு !...ஒண்ணுங்கெட்ட புரோகிதன் பிள்ளேயை ராஜாக்கள் பொறந்த வமிசத்துலே வளத்துக்கப் போறயோ ? இதெல்லாம் புதுசா யிருக்கே ! ஓஹோ! நேத்து ராத்திரி ஒங்கப்பா வந்தாரே...அவர் ஒபதேசமோ ?

கிரி :—எங்கப்பாவை ஒண்ணும் பிடிச்சு இழுக்க வாண்டாம்...

சுந் :—ஒங்கப்பாவை நான் ஏண்டி பிடிச்சு இழுக்கணும் ? என் தலே விதியா ? இழுக்கறதாம்...மனுஷாளாலே முடியற காரியமா ! குதரெயெக் கட்டிணுக்கூட முடியாதே ! ஊ-ஊம் !

கிரி :—அவரொ தெய்வம் பொறப்பிச்சாப்பலெ இருக்கார்! எல்லாரும் ஒங்களெப்போலெ ஊர்வசியா யிருக்க முடியுமா ?

சுந் :—பாத்தயாடீ !... என்னெ தேவடியாளாக்கருளே !... நன்ருக்கு வாயும் வாயாட்டமும் ! அவன் எழுந்திருக்கட்டும் ; சொல்லிப் பாக்கலாம் !...அதிருக்கட்டும்டீ ! இப்ப எந்தக் காக்கா போயிச் சொல்லித் துடீ ! ஒங்கப்பா ஏதுக்குடி வந்து ராவோடெ ராவா வந்து குதிச்சார் ?

கிரி :—அதெப்பத்தி ஒங்களுக்கென்ன ? நீங்க அவரெ இடுப்புலே எடுத்து வச்சுண்டு ஊட்ட வாண்டாம்... என்னமோ ஒரு ஆபத்துன்ன....ஏதாவது ஆச்சுன்ன, எம்மனுஷாளும் இருக்கட்டும்னு தான் வர வழைச்சேன்.....

சுந் :—கூட ஒரு கோதி ஒண்ணு, வீட்டெல்லாம் அலங்கோலப் படுத்தறத்துக்கு.....துர்போதனெ செய்யரத்துக்குத் தயாரா வந்துட்டாளோ ?...புரோகிதக் கூட்டம் ! பஞ்சைகள்....அதுலெ ஒண்ணெ வளத்துக்கிணமாம் !...

கிரி :—வெஷப்பாம்புக் குட்டியெ வளத்துக்கிறதெவிட புரோகிதன் பிள்ளெயெ வளத்துக்கறது எவ்வளவோ

தேவலே! உ....ஊம்...எதுக்கு வீண் வார்த்தை? நான் மாட்டேன்...அவ்வளவுதான்.

சுந் :—ஆமு, எக்கேடானு கெட்டு எருக்கா மொளச்சுப் போ...ஒன்னும்படையான் உசிரு போனதும் போகாததும் சர்க்கார் வந்து உள்ளத்தெயெல்லாம் கொண்டு பூடுவானும்...அப்பறம் நீயும் நானும் ரெண்டு முண்டைகளாத் திமிக்க் கட்டெகளாட்டமா நிக்க வேண்டியதுதான்...பிடி அரிசிக்குப் பிச்சை எடுக்க வேண்டியதுதான் !!!...

கிரி :—ஒரு நாளும் இராது. அதெல்லாம் சுத்தப் பொய்ப் பேச்சு! னக்கு கொஞ்சம் தெரியும்...எல்லாருந் தான் சொல்ருளே...நம்ப ராஜா ரொம்ப நல்லவ்ராம். வக்கீல் பீதாம்பரய்யர்தான் சொன்னுரே !...அப்படியெல்லாம் ஒண்ணும் நடக்காதாம்...இருக்கட்டுமே... ஒங்க பிள்ளெயெத்தான் ஒரு உயில் எழுதி வெக்க சொல்லறது தானே?......அதுக்குப் பொவுஷு இல்லாதெ...

சுந் :—உயிலா? போரும்! போரும்! அது ஒண்ணுதான் பாக்கி...உயிலே ஒண்ணு எழுதி வெச்சுட்டு அவன் பூடட்டும். இருக்கறவாளெல்லாம் கோர்ட்டும் கொத்தளமுமா அலேஞ்சு அவுத்து முடிஞ்சு அடி மாண்டு போகலாம்...பார்க்கலே! பக்கத்து ஊர்லே பெருமாள் செட்டி உயில் எழுதிவச்சானே...ரெண்டு லக்ஷ ரூபாயோ என்னமோ தான் வெச்சுட்டுப் போனுன்...அவன் பிள்ளேயும் பொண்ணும் நிக்க நிழலில்லாமல் அலயரு...அத்தனெ சொத்தெயும் ரெண்டு வக்கிலாச் சேந்து முழுங்கியாச்சு !...

கிரி :—ஆமா ! செட்டிபாளேயம் ஜமீன்தார் தன் சொந்தத் தம்பி பிள்ளெயெ வளத்துண்டாரே...இப்ப என்ன வாழறது?...பிள்ளெ பட்டத்துக்கு வந்தானே இல்லயோ...வளத்துண்ட தாயாரெயே வெளியிலே ஓட்டிட்டான் !...வமிசத்துலே என்ன இருக்கு, வல்லக் காட்டுலெ என்ன இருக்கு !

[தூரத்தில் சுப்பன் வருகிறன்.]

சுந்:—அடியம்மா! என்ன நீட்டி வச்சிருக்குடீ ஒன் வாயே... கொஞ்மானு மட்டு மரியாதெ இல்லாதெ மாமியா ரோடெ எதிர எதிர வாயாடரத்தெப் பாரு... ஏட்டின்னு-போட்டி...ஒன் மேலேயா தப்பு?...காலம் பண்ற பாடுடியம்மா! கலி முத்தரதோ அன்னே? பொம்மிண்டாட்டிக இந்த நாளுலெ மீசெ ஒண்ணு வச்சுக்கலே! அது ஒரு வித்யாசம் தான்...மீதியெல் லாம் ஆம்பளெக தான்...ஒரு அடக்கமா, ஒரு அச்சமா எல்லாம் எங்கேயோ தொலஞ்சேபோச்சு...கட்டெ கட்டெயா தடியாம் பிள்ளைகளோடெ சேர்ந்துண்டு மீடிங்கு கூடிப் பேசறது. கோவிலே இடிக்கலாமா, கொளத்தெத் தூக்கலாமா...இன்னு அதிக பிரசங்கம் பண்றதும் போரும்-போரும்......இந்தக் கோல கீதத்தெ எல்லாம் பாக்கணமுன்னு என் தலேயிலெ எழுதியிருந்தது...என்னுயசு மாளலே... அவரோடேயே என்னெயும் கொண்டு போயிருக்கக் கூடாதா?.... [அழுகிறள்.]

கிரி:—நான் ஒன்னும் கூடாதுன்னு சொல்லலயே... ஓடங்கட்டெ ஏறி போயிருக்கறது தானே... ஊரெல்லாம் கொண்டாடியிருக்குமே!...

சுந்:—பாத்தயாடீ—பாத்தயாடீ—என்ன பேச்சு! என்ன கல்வி!...என்ன காலம்!...என்ன காலம்!...பேச்சு! பேச்சு! பேச்சு! பேச்சு...தவிர ஒன்னும் கிடயாது ...ஆண் பேசறது—பொண்ணு பேசறது—கழும் பேசறது—குஞ்சு பேசறது. எல்லாம் பேச்சோடெ நின்னுபோறது. காரியத்துலே ஒன்னெயும் காணம்...

கிரி:—அதென்னமோ வாஸ்தவம். நாங்க வாயாலெ பேசறதோடெ நிறுத்திடறோம்...நீங்க காரியத்திலே புலியாச்சே...இல்லாப் போனு பதனாறு வருஷமாப் படியேறி வராத பகையாளி, பல்லெ இளிச்சுண்டு பங்காளி மொறை கொண்டாடிண்டு வந்தானே... எப்படி வந்தாங்கிறேன்...!

சுந்:—எப்படி இருந்தா என்ன? அவன் இந்த வமிசத்திலே சேர்ந்தவன்...நேரா மாதவராயர் வழியிலே பொறந்தவன்...

கிரி :—அடாடடாடா !

சுந் :—எங்கொழந்தெக்கு ஒடம்பு சரியாயில்லேன்னு கேழ்விப் பட்டுப் பாத்துட்டுப் போக வந்தாளுக்கும் ...குத்தமென்ன அதிலே ?...

கிரி :—ஒன்னுமில்லெ...அதிலே குத்தமில்லே ; ஓங்க ளோடே அறைக்குள்ளே பூந்துண்டு கொசகொசன்னுட்டு 2 மணி நேரம் காதெக் கடிச்சானே...அது லேயும் குத்தமில்லே...அப்புறம் ஓங்க பிள்ளையின் அறைக்கு வெளியிலே நின்னுண்டு அவா என்ன பேசருண்ணு நீங்க ஒட்டு கேட்டதுலே குத்தமே யில்லெ......பாக்கலாமே......ஓங்க பிள்ளெக்குத் தெரிஞ்சா என்ன தான் சொல்ருரோ பாக்கலாமே...

சுந் :—ஐயையோ பாத்தயாடி ! பாத்தயாடி !! என்ன பொய் ! என்ன பித்தலாட்டம்...அடீ ! ஒன் வாய் புழுத்துப் போயிடும்...

[ராமசந்திர ராவ் பிரவேசம்].

ராம :—என்ன இது அமக்களம் ?...சண்டெ போடறேளா என்ன ?....எதுக்காக ?

சுந் :—சண்டெயா ? சண்டெயுமில்லே சச்சரவுமில்லெ... ஏண்டி, சண்டெயா போட்டோம் ?

கிரி :—ஒண்ணெயும் காணம்....சண்டெ என்ன வேண்டி யிருக்கு !

ராம :—ஓ, அப்படியா ? ஆனு சரஸ ஸல்லாபம் நடந்துண் டிருந்ததோ ? கொஞ்சிண்டு ஒத்தரெ ஒத்தர் கண்ணே முத்தேன்னு கூப்பிட்டுண்டிருந்தீர்களோ ? ....பொய் பித்தலாட்டமின்னு காதுலே விழுந்ததே.. ....அதென்ன ?

சுந் :—அதுவா....அது....நான் சொல்லிண்டிருந்தேன்..,... லோகமே கெட்டு போச்சு....எங்கே பாத்தாலும் பொய்யும் மோசமுமாயிருக்கு....

ராம :—வாஸ்தவம் !....வாஸ்தவம் !....அதுலே சந்தேகமே யில்லே...இன்னியப் போதுக்கு இவ்வளவு போராதா? ....வீடு ஒண்ணு இல்லெயா கவனிக்க?...

*சுந் :*—அடி கிரிஜா ! இது அந்தக் கட்டேலே போவான் சுப்பன் வேலெயாத் தான் இருக்கணும்....

*கிரி :*—பின்னெ வேறெ யாரு இருக்கப் போறது ? குட்டிக் கலகத்துலே வேறே நாரதன் வேண்டாம்....நீங்க வாங்கம்மா. நாம் உள்ளே போகலாம்.

[இருவரும் போகிறர்கள்.]

*ராம :*—ஐயோ ! அடாடாடாடாடா ! என்ன ஒத்துமை ! என்ன ஒத்துமை ! கடைசிலே தனியா நிக்கறவன் நான் தான் போலிருக்கு !....

## காட்சி 4

### முற்பகல்

லாயர் பீதாம்பர ஐயர் வீடு

[லாயர் தன்னறையில் மேஜையருகில் உட்கார்ந் திருக்கிறர். கிரிஜாபாய் நிற்கிறள். சுற்றிலும் புஸ்தகங்களும் காகிதங்களும் இருக்கின்றன.]

*பீதா :*—ஜமீன்தாரை அந்த மாதிரி உயிலெழுத வெக்கர துன்னு ரொம்ப கஷ்டமாச்சே ! அதிலே ரொம்ப எடக்குகளெல்லாமிருக்கே ! ....எதுக்கும் பார்ப் போம், பார்ப்போம்...

*கிரி :*—அப்படியே செய்யும்படி நீங்க ஏற்பாடு செய்துட்டா என்னுயுசு வரெக்கும் ஒங்களெ மறக்க மாட்டேன்....எல்லாருக்கும் லாபமுண்டு....ஒங்க ளுக்கும் கூட....

*பீதா :*—எனக்கு நன்மை கடக்கட்டும்....நான் செய்ய வேண்டிய கடமை.

*கிரி :*—கடமை இருக்கட்டும்...,நன்மையுமிருந்தா.... அதுலெ தப்பில்லெயே !

பீதா :—வாஸ்தவம்தான்!,...இந்த சின்ன விஷயத்துக்கு நீங்க இவ்வளவு சிரமமெடுத்துண்டு இவ்வளவு தூரம் வரணுமா? ஒரு குருவி கிட்டெ சொல்லி யனுப்பிஞ நான் ஓடோடி வந்திருப்பேனே....ஸரி! என்ஞலானதெ செய்யறேன்....ஆஞ ஓங்களுக்கே தெரிஞ்ச விஷயம். ஜமீன்தார் ரொம்ப பிடிவாதக் காரர்.

கிரி :—எனக்கு தெரியாதா? பதனஞ்சு வரஷமா கட்டிண்டு வாழரனே. அதுகூடத் தெரியாதா?... அதுக்குத்தான் ஒம்ம ஒத்தாசை வேண்டிருக்கு.... நீங்க சேஞ்சா தான் உண்டு....ஆஞ நான் இங்கெ வந்த சமாசாரம் ஒத்தருக்கும் தெரியப் படாது.... அடுத்த தெருவிலே எங்க தமக்கையெ பாக்கராப் பலெ இங்கே வந்திருக்கேன்....நமக்குள்ளெ நடந்த பேச்சு கக்ஷிக்காரிக்கும் லாயருக்கும் நடந்தது.... வெளியிலெ தெரியவேண்டிய அவசியமேயில்லெ.

பீதா :—நீங்க கவலெயே படவேண்டாம்...,லாயர்க ளண்டெ வரது வேறெங்கேயும் வெளியிலே போகாது.

கிரி :—அதுவும் நீங்க ரொம்ப ஜாக்கரதையாயிருக்கணும் ...முக்யமா ஒத்தருக்கு தெரியக்கூடாது...யார் தெரியுமா? எங்க மாமியார்...கழுகு ஒண்ணு இருக்கு பாருங்கோ அதுக்கு......

[சுந்தரிபாய் பிரவேசம்]

சுந்த :—கழுகு யாருடி? கழுகாம் கழுகு! ஓங்காத்துக் கழுகுக்கு ரெண்டு கையும், ரெண்டு காலும் மொளச்சுப் பொடவை உடுத்திண்டு இருக்குமோ?

கிரி :—நான் ஒன்னும் ஓங்களெ சொல்லலே!

சுந் :—பின்னெ யாரெச் சொன்னெ? "மாமியார், மாமியார்" இன்னு யாரெச் சொன்னெ?...

கிரி :—நான் ஒன்னும் கழுகுன்னு சொல்லலே...... அழகுன்னு சொன்னேன்...இல்லே ஸார்?

சுந் :—போரும்! போரும்! இவ்வள நாழி யோசனெ பண்ணலயோ? அழகாம் அழகு! என்னெ அழ

குன்னு சொன்னயோ!........ சொல்லமாட்டாயா? ஏண்டி சாதிக்கரெ?.......இருக்கட்டும்..... இங்கே என்ன செய்யரேடி? தன்னந்தனியா லாயர் வீட்டிலே ஒனக்கென்னடீ வேலெ?

கிரி:—எனக்கென்ன வேலெ இங்கே? ஒரு வேலையுமில்லே! நான் போறேன்...

சுந்:—ஏதுக்குடீ இங்கே வந்தேன்னு கேட்டா?...

கிரி:—எல்லாம் நீங்க வந்த வேலையாத்தான்...

சுந்:—பாத்தயாடீ! நான் வந்த வேலையாமே!...நான் வந்த வேலெயெ நீ எங்கேடீ கண்டே? பீதாம்பரய்யர் தமக்கையும் நானும் ஒண்ணு விளையாடினவா! அவளுக்கு ஒடம்பு ஸரியில்லேன்னு சொன்னு... பார்த்துட்டுப் போகலாமுன்னு வந்தேன்...

கிரி:—அதனுலேதான் நேரா...ஆபீசு உள்ளுக்குள்ளே வந்தேங்களோ?..லாயராபீசிலே அவர் தமக்கைதான் ஆபீசு பண்ணராளோ?...

சுந்:—அதெல்லாம் நீ யாருடி கேக்கறத்துக்கு?...உள்ளே போயுண்டிருக்கச்சே....ஒங் குரலெப்போலெ இங்கே கேட்டது....இதென்னடீ அதிசயமுன்னு வந்து பார்த்தா, லாயரோடே தனியா எதுவோ கொசு கொசுண்ணுட்டு ரகசியம் பண்ணிண்டிருக்கே... ரொம்ப அழகு!...ஒங்க ஆம்படயானுக்குத் தெரிஞ்சா ரொம்ப சந்தோஷப்படுவான்!...

பீதா:— அம்மா, அப்படி ஒண்ணும் தவறில்லேயே! ஒங்க மாட்டுப்பொண்ணு எனக்கு சகோதரிபோல...

கிரி:—அவர் தமக்கை ஒங்களோடே விளையாடினவள்னு நீங்க சொன்னு, அவர் என்னேடெ படிச்சவருன்னு நான் சொல்றேன்...ஆனு நான் சொல்றது நிஜம்.

பீதா:—அம்மா! அம்மா! நீங்க ரெண்டு பேரும் இந்த மாதிரி சண்டெ செய்யறது நன்னுயில்லெ! நீங்க ரெண்டு பேரும் வந்த காரியம் ரெண்டு பேருக்கும் நன்னு தெரிஞ்சதே ஏன் வீணு ஒளிக்கப்பாக்கறேள்?

அப்படி ஒளிக்கத்தான் முடியுமா ? இல்லே இல்லே ! நாம் கட்டு கண்ணுமூச்சு ஆடுவதெல்லாம் பசங்களா யிருக்கச்சே சேஞ்சா நல்லது. பெரியவாளானு மறந்துடணும் !

கிரி:—த்ஸு! த்ஸு! த்ஸு! த்ஸு! எவ்வளவு வாஸ்தவம்! ஊரிலே இருக்கப்பட்ட லாயர்களத்தனே பேரும் இதே மாதிரி நல்ல வழிகளை உபதேசம் செய்தா எவ்வளவு நன்னுயிருக்கும் ?

சுந்:—லாயர்கள் மாத்ரமென்ன ! லோகத்துலே எல்லா ருமே இப்படி நடந்துண்டா, இன்னும் சிலாக்கியமாத் தானிருக்கும்.

பீதா:—ரொம்ப ஸரி ! ஹி ! ஹி ! நீங்க ரொம்ப..... ஆனுலும் எனக்கு ரொம்ப லஜ்ஜையாயிருக்கிறது... என்னைப்பத்தி ஸ்தோத்ரமா பேசறதை கேழ்க்க ரொம்ப லஜ்ஜையாயிருக்காதா ?......

கிரி, சுந் :—(இருவரும்) ஆனு நான் போய் வரேன்..........

பீதா:—இல்லே ! இல்லே ; இருங்கோ ஒரே நிமிஷம்... நான் சொல்ல வேண்டிய விஷயம் ஒண்ணு இருக்கு ...நான் ரொம்ப தூரம் யோசனை செய்து இதுதான் சொல்லச் சரியான சமயம் என்னு தீர்மானிச் சுட்டேன்...பெரியம்மா ! ஒங்களுக்கு அபிப்ராயம் என்னன்னு ஸர்க்கார், சொத்துக்களை அடிச்சுண்டு போகாதபடிக்கு ஒங்க பிள்ளை ஒரு ஸ்வீகாரம் சேஞ்சுக்கணும் !" அதானே ?

சுந்:—அதே தான் !

பீதா:—அதுவும், இன்னும் ஒங்கபிள்ளை காலத்துக் கப்புறம் நீங்க ஒங்க மாட்டுப் பெண்ணண்டே கை கட்டி நிக்கப்படாது ... என்பது ... மனஸ்தாபம் வாண்டாம், அறத்து பேசிப்படலாம்...

கிரி:—அப்படித்தான் வச்சுக்கோங்களேன்.

பீதா:—சரி! நீங்க (கிரிஜா) அபிப்ராயப்படறது, எவ னுவது பத்து விட்ட பங்காளி வந்து அடிச்சுண்டு

போகாதே சொத்துக்களை யெல்லாம் ஒங்க புருஷன், ஒரு உயில் எழுதி ஏற்பாடு செய்துடணும்; அதானே ?

கிரி:—அதுவேதான் !

பீதா:—மேலும் ஒரு உயில் ஏற்பட்டா, ஜமீன் விஷயங் களை நீங்க நடத்தறத்திலே ஒண்ணும் தகரார் இராது.

சுந்:—அதுவும் தான்.

பீதா:—ஸரி! இப்போ நான் வந்து ஒங்க ரெண்டு பேருக்கும் திருப்திகரமான ஏற்பாடு ஒன்றைச் செய்யும்படி ஜமீன்தாருக்கு சொல்லிக் கொடுத்தா... அதாவது ஜமீன், குடும்பத்துக்குள்ளேயே இருக் கணும்...ஆனு ஸ்வீகாரம் நடக்கணும்...அந்த ஸ்வீ காரம் இப்போ உடனே நடக்கப்படாது ... ஆனு நடக்காமெ இருக்கப்படாது. ஒங்க ரெண்டு பேருக்கும் தனித்தனியா ஏற்பாடு. அதாவது, ஒத்தரிடத்திலே இன்னொருத்தர் அடங்கியிருக்க வேண்டியதில்லே. ஆனு...ரெண்டு பேருக்கும் ஸ்நேகம் நெலேச்சு இருக்கணும்...அதாவது ஸ்வீ காரம் செய்தும் செய்யாததுமா, உயில் எழுதியும் எழுதாதுமா...ஸ்வீகாரத்தினுடைய ஸாதகங்களும், உயிலினுடைய ஸாதகங்களும் மாத்தரமே இருக் கணும். ரெண்டினுடைய பாதகங்கள் இருக்கப் படாது...நான் சொல்றதென்ன? பங்காளிப் பயல் வந்து ஏதாவது பேசினு ஸ்வீகாரம், உயில் ரெண்டையும் சொல்லி வெரட்டி யடிக்கலாம்... ஸ்வீகாரம் சேஞ்சுக்கிற பயல் வாலே ஆட்டினுல் உயிலாலே வாலெ அறத்துடலாம். உயில் எக்ஸி கூடர்களே ஸ்வீகாரக்காரன் அப்போதுக் கப்போது விசாரிச்சுண்டு வரலாம்...எப்படி ?......எப்படி ?......

கிரி :—ரொம்ப பேஷாயிருக்கு ?

சுந் :—ஆச்சர்யமா இருக்கு! ஆனு, ஸ்வீகாரம் சேஞ்சுக் கிற பையனுக்கு என்ன ஏற்பாடு ?

கிரி :—ஜமீன் விஷயங்களை நான் நடத்தறதெப்பத்தி என்ன ஏற்பாடு ?......

பீதா :—அடா டா டா டா டா டா ! கொஞ்சம் பொறுமை வேணும் ! அவசரப்பட்டு சரமாரியா என்னெக் கேள்விகள் கேட்கப்படாது...நான் எவ்வளவோ... நான் யோசனை பண்ணிக் கடசிலே இந்த ப்யூட்டிஃபுல் ஐடியா (அழகான ஆலோசனை) வந்துது......ஒங்க ரெண்டு பேருக்கும் அனுகூலமானதா இருக்க வேணுமேன்னு ரொம்ப யோசனெ சேஞ்சிருக்கேன்... என்னெ நம்பப்படாதா ? நாளைக் காலமே சரியா 9 மணிக்கு நான் பங்களாவுக்கு வரேன்......அங்கே வந்து அப்போ செய்யப்போற ஏற்பாட்டைப் பாருங்களேன்...அப்புறம் ஒங்க ஆயுசு வரைக்கும் என்னை மறக்கவே முடியாது. அந்தமாதிரி ஏற்பாடா யிருக்கும். ஏன்...

சுந் :—த்ஸு ! த்ஸு ! த்ஸு ! த்ஸு ! என்ன புத்திமான்... இந்த லாயர்கள் தான் எவ்வளவு கெட்டிக்கார மனுஷா, பார்த்தாயா ?

கிரி :—லாயர்கள் என்ன......எல்லா லாயர்களும் லாயர் களாய் விடுவார்களா ! லாயர்களிலேயும் லாயர்கள் இருக்கா !

(போகிறார்கள்.)

## காட்சி 5.

### காலை 8-மணி

ராமசந்திர ராவ் வீட்டில் அறை.

[ராமசந்திர ராவ் நீண்ட நாற்காலியில் தனி யாய்ப் படுத்துக் கொண்டிருக்கிறார்.]

ராம :—எனக்கு ரொம்பத் தேவலை போலிருக்கு. கடசிலே நான் பொழச்சிடுவேன்போல இருக்கே !...ஐயோ ! பாவம். எத்தனெ பேருக்கு எவ்வளவு டிஸப்பாய்ண்ட் மெண்ட் (ஏமாற்றம்)...பாபம்!

[சுப்பன் வருகிறான்]

சுப் :—எஜமானுக்கு எப்படி இருக்கு இன்னிக்கிக் காலே ? நேத்து ராவிக்கு நானு கொண்டு வந்து கொடுத்த மருந்துலே குணம் ஏதானு உண்டா ?...இல்லே எம் மனசு திருப்திக்காக எசமா சாப்பட்டதுதானு ?...

ராம :—ஒம்மருந்து ரொம்ப குணம் செய்திருக்கு...சுப்பா! இப்பொ அடியோடெ நோவே இல்லெ......அதை ஒனக்கு யாரு கொடுத்தா சுப்பா ?

சுப் :—நானு அடிக்கடி எசமாங்கிட்டெ சொல்லிக்கிட்டு வருவனே.......அந்தக் காட்டுக்கப்புறம் இருக்கிற சென்னி மலேக் கொகைலே ஒரு பெரியவரு இருக்கிறாருண்ணு...அவரு ரொம்ப பெரிய மஹானுங்க...... அவருக்குத் தெரியாத மருந்து கடையாதுங்க... இங்கே யசமா ரொம்ப நோயிலே அவஸ்தப் படறத்தெ எனக்குப் பார்க்க முடியலிங்க...ஓட்டமா ஓடி அவரு காலுலே உழுந்து மருந்து குடுக்கச் சொல்லி வேண்டினேனுங்க. அவரு குடுத்தாரு......இங்கே வெள்ளிக்களமெ டாக்குடருங்க பேசிக்கினத்தையும் பாத்துக்கினத்தையும் கண்டு எனக்கு ரொம்ப காப்ரூ ஆயிப் போச்சு. யசமானுக்கு ஏதானு நேந்துபூட்டா ஏழை எங்கதி என்னு ?......

ராம :—சுப்பா ! நீ ஒத்தன்தான் எனக்கு உண்மையான பந்து......என் கொழந்தை தவிர...ஸரி! கார் ஸ்டேஷனுக்குப் போச்சா?...கொழந்தை வராளே... மணி யென்ன பாரு !......

[பத்மினிபாய் பரபரப்புடன் வருகிறள்.]

பத் :—அப்பா ! அப்பா !...ஒண்ணுமில்லயே !......

[சுப்பன் போகிறன்]

ராம :—(அவளைக் கட்டியணைத்து) பத்மா ! ஏனம்மா ?...... ஏனிப்படி ஒடம்பு நடுங்கறது ?

பத் :—ஒண்ணுமில்லே அப்பா ! உன்னெ உயிரோடெ பார்க்கப் போறேமா என்னு அலறியடிச்சுண்டு ஓடி வந்தேனே : அவா அடிச்ச தந்தி...

ராம :—யாரோ மிஸ்சிஃப் (விஷமம்)ஆகச் செய்திருக்கணும்...நீ கவலைப்படாதே...நான் ஸௌக்கியமாயிருக்கேன்... ரெண்டு நாளா ஏதோ கொஞ்சம் அசௌகரியமாத்தான் இருந்தது...நத்திங் டு ஓரி! (விசாரப்பட ஒன்றுமில்லை) வயத்துலே கொஞ்சம் பெயின் (வலி)...நம்ப டாக்டர் நாயுடு சமாசாரந்தான் ஒனக்குத் தெரியுமே! அவர் பெரிய கலபா பண்ணிட்டார் ... எல்லாருமாச் சேர்ந்து எனக்கு ஏதோ பெரிய ஸீரியஸ் நோவு என்னு தீர்மானம் பண்ணிட்டா ...

பத் :—இப்பொ எப்படி இருக்கு அப்பா ?

ராம :—எல்லாம் சரியாப் போச்சுன்னு நெனக்கிறேன்... என்னை யார் ஸ்வஸ்தமாக்கிஞ தெரியுமா ஒனக்கு? நம்ப சுப்பன்...ஓல்டு எவர்-ரேடி சுப்பன்! (எப்போதும் தயாரா யிருக்கும் பழைய சுப்பன்) பாவம். நான் படாத அவஸ்தை பட்டேஞ, ......அவனுக்கு பார்க்கச் சகிக்கல்லே......இங்கேருந்து பத்து மைல் தூரம் ஓடிப் போய்...அங்கே ஒரு சின்ன மலையிலே யாரோ ஒரு பெரியவர் இருக்காராம்...அவருக்குச் சுப்பனிடத்திலே ரொம்ப ப்ரீதியுண்டாம்... அவருக்குத் தெரியாத மருந்து கிடையாதாம்... அவரைக் கேட்டு ஒரு மருந்தை வாங்கிண்டு ஓடோடி வந்து என்னண்டை கொடுத்துச் சாப்பிடச் சொல்லி ரொம்பவும் வேண்டிஞன்...எனக்கு மொதல்லே இதிலெல்லாம் நம்பிக்கை அவ்வளவா இல்லே...... ஆஞ நமக்காக இவ்வளவு உண்மையாப் பாடு பட்டு நம்ம க்ஷேமத்தை நினைக்கிறவன் ஒத்தனே ஒத்தன் ......அவனுக்கு திருப்தியா யிருக்கட்டுமேன்னுட்டு சாப்பிட்டேன். நன்ஞ தூங்கினேன்...இப்பத்தான் எழுந்தேன் ... நோவெல்லாம் பறந்து போச்சு ... ஒடம்புலெ ஒன்னும் தோஷம் இருக்கறதாவே தெரியலே...

பத் :—நிஜமாவா ? ஆஞ ரொம்ப நல்ல மருந்தாயிருக்கணும்!......ப்ரீதியோடெ எதைக் கொடுத்தாலும்

அதுக்குப் பலனுண்டு! சுப்பன் அவ்வளவு நிஜமான ப்ரீதியோடெ ஒனக்குச் செய்ததை நினேச்சுண்டா எனக்கு நெஞ்சை அடைக்கிறதப்பா! வேலைக்காரனு என்ன, யாரானு என்ன? அவனை நமஸ்காரம் பண்ணலாமென்னு தோணுகிறது!

ராம:—ப்ரீதி உடையவனை ப்ரத்யக்ஷ தெய்வமென்னு சொல்லலாம்.

பத்:—எனக்கு ரொம்ப சந்தோஷமாயிருக்கு......ஐயோ என் மனசு பட்ட கஷ்டம்...நான் வந்து பாக்கும் போது நீ இந்த மாதிரி இல்லாதே ஏதாவது விபரீதமா......

[நெஞ்சடைத்து நிறுத்துகிறள்.]

ராம:—அதாவது பிணமாவோ...பிரக்ஞையில்லாதேயோ ......சீ, சீ, அசடு! அப்படியெல்லாம் நினைக்கலாமா? இதோ பாரு பத்மா! ஒங்கப்பா சாச்வதமென்னு நினேச்சுண்டு இருக்கயா? இல்லெ. நீ தான் சாச்வதமாயிருக்கப் போருயோ? யாரும் சாச்வதமில்லெ...எல்லாரும் ஒரு நாளைக்குப் போகிறவா தான்......ஆனு, செத்தெ முன்னே பின்னே போவா— அவ்வளவுதான்......அதுக்கு எப்பவும் தயாராய் இருக்கிறது நல்லதில்லையா, அம்மா?

பத்:—சரிதான் அப்பா! என்னப்பா? நீ இப்பொ பெரிய தத்துவ மெல்லாம் பேச ஆரம்பிச்சுட்டயே...... எப்போ அப்பா, பிலாஸஃபர் (தத்துவ சாஸ்திரி) ஆய்ப் போனே?

ராம:—என்னிக்கும் இருந்த மாதிரிதான் இருக்கேனு ஒன்னண்டை அந்த மாதிரியா நடந்து காண்பிக்கல்லே. நீ கொழந்தெயானத்தாலே ஒன்னோடெ எப்பவும் வெளையாட்டும் சிரிப்புமா இருந்துண்டு வந்தேன்.

பத்:—அப்பா! லோகத்திலே எவ்வளவு ஆச்சர்யமும் விசித்திரமுமான சமாசாரங்கள் நடக்கிறது? பார்க்க

எவ்வளவு ரஸமாயிருக்கு! ஸ்வாமி எதுக்காகச் சாவு என்பதைச் சிருஷ்டிக்க வேணும்!. அது இல்லாமல் இருந்தா ?...

**ராம** :—பைத்தியமே! அது பெரிய தத்துவமாச்சே! அதை எடுத்துட்டயே. ஈச்வரனுடைய நியமத்தை அறிஞ்சுக்கறது ரொம்பக் கஷ்டம்...லோகத்திலே நாம் பாக்கறதெல்லாம் மாயை. நமக்கு ஞானம் வந்துட்டா மாயையெல்லாம் நம்மை ஏமாத்த முடியாது; இந்த மாயை எல்லாம் எப்போ ஒழியுமென்று ஆவலாயிருப்போம்.

**பத்** :—அப்பா! நான் பத்து நாள் போய் வரத்துக்குள்ளே நீ என்ன இவ்வளவு மாறிவிட்டே!

**ராம** :—மாறுதல் ஒண்ணுமில்லெ அம்மா! நாம் பாக்கற வஸ்து எப்பவும் ஒரே மாதிரிதான் இருக்கு. அதுலே மாறுதல் ஏற்படற மாதிரி தோணுவதுக்குக் காரணம், நம்ம பார்வையிலே இருக்கு. இதோ பாரு! ஒரு சின்ன கொழந்தையை ஒக்காத்திவச்சு அதுக்கு எதிரே ஒரு எலேயிலே ஒரு படி அரிசிச் சாதத்தை வைச்சா, அது ரொம்ப அதிகமாகவும் பைத்தியக்காரத்தனமாகவும் காணரது. அதே எலேயை ஒரு யானேக்கு எதிரெ வெச்சா, அதே சாதம் ரொம்ப கொஞ்சமா காணரது...சாதமா மாறரது? வித்தியாசத்துக்குக் காரணம் நாம் பாக்கற விதத்தை பொறுத்ததில்லேயா? ஆகையினுலே நாம் எந்த வர்ணக் கண்ணுடியைப் போட்டுண்டு லோகத்தெ பாக்கறமோ, அது அந்த வர்ணமாத் தெரியறது!

**பத்** :—ஆணு அப்பா! நீ உன் கண்ணுடியை மாத்திவிடு. இப்ப நீ பாக்கற கறுப்புக் கண்ணுடி எனக்கு பிடிக்கல்லே. எப்பவும் கறுப்புக் கண்ணுடி போட்டுண்டு இருக்கிறவாளே நம்ப முடியாது. அவா கண் நோக்கம் தெரியாது; மனசையும் அறிய முடியாது—எனக்காக அதை மாத்தமாட்டாயா அப்பா?

**ராம** :—ஒனக்காக எது வேணுமென்னுலும் செய்யறேன், அம்மா! என்னே இந்த லோகத்தோடெ பொணச்சு வச்சுருக்கிறது ஒரே ஒரு மெலிசு நூல்—அது நீ!

**பத் :**—ஆமா, நான் நூலாயில்லாமெதெ இரும்புச் சங்கிலி யாயிடுவேன் !

**ராம :**—இரும்பெதுக்கு ? தங்கச் சரடா யிரு !

**பத் :**—ஸரிதான்...என்னப்பா ! இன்னும் எதோ மாதிரி மூஞ்சியெ வச்சுண்டிருக்கே——சிரிக்கமாட்டாயா ? நானிருக்கச்சே எப்பவும் வெளெயாட்டும் சிரிப்பும் என்னு சொன்னுயே...அப்பா ! ஏதாவது மறுபடியும் வயத்து நோவாயிருக்கா என்ன ?

**ராம :**—இல்லெ...இல்லெ...அம்மா ! நோவில்லே...

**பத் :**—டாக்டருக்கு சொல்லியனுப்பட்டுமா ?

**ராம :**—வாணும் வாணும்—டாட்டர் (மகள்) இருக்கச்சே டாக்டர் ஏதுக்கு ?...9 மணிக்கு அவரே வருவார்.

**பத் :**—யாரு ? டாக்டர் நாயுடுவா ? ரொம்ப நல்லவரப்பா அவர். நம்ப குடும்பத்துக்கு ரொம்ப வேண்டியவர். ஒனக்கு என்ன வியாதியிருந்தும் அடியோடே தீர்த்துடுவார்.

**ராம :**—அப்பிடித்தான் செய்யப் பார்த்தார்...அவராலே தப்பில்லெ. நான் அவருக்கு சான்ஸ் (சந்தர்ப்பம்) குடுக்கலெ. தப்பிச்சுண்டுட்டேன்.

**பத் :**—என்னப்பா இது ? எனக்கு ஒண்ணும் புரியலயே!

**ராம :**—க்ஷேமம் ! புரிஞ்சுக்காத இருக்கறதே நலம்...... இப்பொ நான் நிஜமாகவே பிழைச்சுட்டேன்னு ஏற்பட்டா, ஒவ்வொத்தருக்கும் அதைக் கேட்க எப்படியிருக்குமோ ?

**பத் :**—ஒரே ஆனந்த பரவசமாயிருக்கும்.

**ராம :**—அது நீ போட்டுண்டு இருக்கிற கண்ணாடியின் கலர் !

**பத் :**—என்னப்பா இது ? ஒனக்குக்கூட சத்ரு இருக்காளா அப்பா ?

**ராம :**—அது எனக்குத் தெரியாது. நானென்னமோ இல்லேன்னு தான் நெனச்சுண்டிருக்கேன்...யாருக்குந்

தெரியும்—ஆனு பத்மா! என்னைப் பிரயாணப்படுத்தி அனுப்ப எவ்வளவு பலமான ஏற்பாடுகள் நடந்தது தெரியுமா ஒனக்கு?

பத் :—எங்கே அப்பா?

ராம :—திரும்பி வர முடியாத எடத்துக்கு.

பத் :—போப்பா! அப்படி யெல்லாம் பேசாதேன்னு!—என்ன ஏற்பாடுகள்? யார் செய்தா?

ராம :—வாயிங்கே! ஒக்காரு! சுத்திமுத்தி நடக்கறதெ நன்னு கவனிச்சுப் பாரு. எல்லாம் புரியும்.

பத் :—நீ தான் சொல்லேம்பா!

ராம :—ஒண்ணுமில்லேம்மா! ரொம்பப் பேர் நான் பொழெக்கமாட்டேன்னு நெனச்சா. அவாளுக்கு எல்லாம் இப்பொ மனசு அதிருப்தியாயிருக்கலாம்.

பத் :—அந்த மாதிரி மனுஷா யிருந்தா அவா கடக்கரு—அவாளுக்கு அது நன்னு வேணும்—என்னப்பான்னு?

ராம :—ஒனக்குச் சொல்லணுமா?.....இரு இரு.....நல்ல ஐடியா! (ஆலோசனை) இதோ பாரு. ஒரு சின்ன வேடிக்கை பண்ணலாம்...டாக்டரும் லாயரும் என்னைப் பாக்க வரப்போரு....அவா வரச்சே நான் இந்த சோபாவிலே படுத்துண்டு அன்கான்ஷியஸா (மயக்கமாய்) இருக்காப்பலெ பாசாங்கு பண்ணறேன்—அவா வந்ததும் நீ கொஞ்சம் ஆக்ட் பண்ணனும்—நீ வந்த சந்தோஷத்துலே திடீர்னு ஏதோ ஷாக் (அதிர்ச்சி) வந்ததாயும், மாரும் தலையும் நோவெடுக்கரூப்போலே பிடிச்சுண்டு, சோபாவுக்குத் தடுமாறிப் போயி விழுந்துட்டேன்னு சொல்லு.... அதோ, அதோ! வரா! ஜாக்ரதை!

பத் :—இது என்ன விளையாட்டுப்பா! வாண்டாம்பா!

ராம :—சீக்கிரம்! சீக்கிரம்! உஷார்!...

[சோபாவில் போய்ப் படுத்துக்கொள்கிறர்.]

பத் :—ஐயோ ! ஐயையோ ! சுப்பா ! சுபபா !!

[ஓடிவந்து]

சுப் :—வந்தேன்... ஏனம்மா ?

பத் :—என்னடா செய்வேன் சுப்பா ! நான் வந்த சந்தோஷத்துலே அப்பா ரொம்ப அதிகமா பேசி அலட்டிண்டுட்டார். திடீரெனு மாரையும் தலையும் பிடிச்சுண்டு நோவு பொறுக்க முடியாதெபோயி தட மாறிண்டு அந்த சோபாவிலெ விழுந்துட்டாரெ.... டாக்டர் வந்தாரா ? ஐயையோ ! இதுக்கென்ன செய்யறது தெரியலயே!

சுப் :—பயப்படாதெம்மா ! (அருகில் சென்று யஜமானரைப் பார்த்து) ஒண்ணும் பயமில்லே ! சாதாரணமா மூச்சு வருது....இதோ போயி டாக்டருக்கும், பெரியம்மாங் களுக்கும் சொல்லிட்டு வரேன்.

[போகிறன்.]

பத் :—அப்பா ! இந்தச் சுப்பன் எவ்வளவு கெட்டிக்காரன் பார்த்தாயா ?....நீ இன்னும் கொஞ்சம் விபரீதமா மூச்சு விடணும்....

ராம :—ஸ்...ஸ் ! யாரோ வராப்போலிருக்கு !

[சுந்தரிபாய் வருகிறள்.]

சுந் :—என்னடி இது பத்மா !....என்ன செய்தே அவனெ ? நீ வரவரைக்கும் ராமு நன்னாத்தான் இருந்தான். இப்போ என்ன திடீர்னு....ஐயோ ! ச்வாசம் வாங்க ருப்பலே இருக்கே !...ஐயையோ ! கையும் காலும் கட்டையா போச்சே...அடெ ராமா ! மோசம் வந்துட்டதேடீ !....நான் பயந்தாப்பலெயே ஆய்ப் போச்சே ! ...ஒண்ணெயும் ஏற்பாடு செய்யாதெ பூட்டானேடீ !......அடிச்சுண்டேனே ! ஒரு தத்து எடுத்துக்கோடா எடுத்துக்கோடான்னு ! அதுக்கு வேண்டிய ஏற்பாட்டெ எல்லாம் நேத்து சேசு முடிச் சேனே !...கடசிலே மோசம்பண்ணிட்டு பூட்டானே !...

நம்ம குடும்பத்தெ குட்டிச் சொவரா அடிச்சுட்டு பூட்டானே...:என்னடி பண்ரது இப்போ!......ஐயை யோ!....அதிருக்கட்டும்! நீ வந்ததும் ஏண்டி அவனுக்கு இப்படியாகணும்?......என்னடி சேசே அவனெ?....ஊம்? ஒன்னாலே தான்....

பத் :—ஆமாம், பாட்டி! அப்பா இப்பொ இப்படி யிருக் கறத்துக்குக் காரணம் நான் தான்....எனக்கும் அது தான் தோணறது!

சுந் :—ஆஹா! அப்படியா? ஒத்துக்கறயா? ஆனு இரு! இரு! சொல்றேன்.

[கிரிஜா பாய் வருகிறள்.]

கிரி :—ஐயோ, தெய்வமே! இதென்ன இது! லாயர் பீதாம்பரய்யர் எங்கே! இன்னும் வரலயா?..... யாராவது டாக்டருக்குச் சொல்லியனுப்பிச்சாளா?

பத் :—எல்லாம் தெய்வத்தின் லீலே அம்மா!...

[லாயர் பீதாம்பர ஐயரும் டாக்டர் நாயுடுவும் வருகிறர்கள்.]

நாயுடு :—என்ன? என்ன? என்ன நடந்தது?....அய்யாக்கு என்னமா இருக்குது—அடடே! உளுந்துட்டாரே....; கான்ஷியஸ்னெஸ் (ஞாபகம்) பூட்டுதே.....(ஜமீந்தாரை நன்றய்ச் சோதிக்கிறர்) நெனச்சேன் நெனச்சேன்! நானு அப்பவே சந்தேகப்பட்டது......சொன்னே.......டிலே இஸ் டேஞ்சரஸ் (தாமதித்தால் அபாயம்) டிலே (தாமதம்) செய்யாதிங்கோ செய்யாதிங்கோ இண்ணு அடிச்சுக்கினே....நேத்திக்கே அவரு மூளெலெ பட்டுப் போச்சு....எனக்கு நல்ல ஸ்பஷ்டமா தெரிஞ்சுச்சு..... ஆபரேஷனெ தாமதம் பண்ணவாண வாணுன்னு அதுக்குத் தான் அடிச்சுக்கினேன்...:சே! சே! சே! சே! என்ன டிஸ்அப்பாயிண்ட்மெண்ட் (ஏமாற்றம்)! எப்பேர்க் கொத்த ஆபரேஷன் யோசனெ சேஞ்சு வச்சிருந்தேன்!....அது ஒண்ணாலேயே எம்பேரு இந்தியா மூச்சூடும் பரவியிருக்குமே!....அவ்வளவு

பேரும் வந்தா பணத்தெ ஒரே வாரு வாரியிருப்பேனே! சே! சே! அல்லாமே கெட்டுப் போச்சே...த்சு! த்சு! த்சு! த்சு!

பீதா:—அது என்ன ஆபரேஷன் டாக்டர்?

நாயுடு:—அது வந்து ஒரு பெரிய இது ஸார்!

பீதா:—சரிதான் க்லியரா (ஸ்பஷ்டமா) தெரிஞ்சு போச்சு...அதை இப்பத்தான் செய்யக்கூடாதா?

நாயுடு:—போச்சு! போச்சு! டூ லேட்! (ரொம்ப தாமதம்)

பீதா:—இல்லே ஸார்! ஹி இஸ் ஸ்டில் அலைவ் (இன்னும் உயிர் இருக்கு) உயிர் போகலே, ஸார்!

நாயுடு:—அது போகட்டும் ஸார்! இப்போ உயிரைப்பத்திக் கவலே இல்லே.........பஸ்ட் க்லாஸ் ஆப்பர்ச்சூனிடி (முதல் தரமான சந்தர்ப்பம்) போச்சு...என்ன ஆப்ரேஷன் தெரியுங்களா நானு யோசனெ செஞ்சு வச்சுது? அடாடா! ஸ்பெஷல் அண்டு (ஸ்பெஷல், தவிர) இது வரெக்கும் ஒத்தரும் செய்யாதது...... மொத்த தேகம் முழுதும் அறுத்துப் பாத்து அங்கங்கே ஓவரால் பண்ணிடுறது...இப்போ—மோட்டார் கார் இல்லிங்க? அதுக்கு ஓவரால் செய்யரதில்லே?—அது மாதிரி. டூ லேட், டூ லேட் (இப்போ ரொம்ப தாமதம்) இப்போ செய்யக்கூடாது ஸார்! பேஷண்ட் கைப்பட எழுத்துலே கன்ஸெண்ட் (சம்மதி) வாங்கிக்கினு தான் செய்யணும் ...... சே! சே!...

பீதா:—ஒரு 5 நிமிஷம் அவருக்கு ப்ரக்ஞை வரும்படி செய்யமுடியாதா ஸார்? நீங்க டாக்டர் ஆச்சே. 5 நிமிஷம் ஸார்.

கிரி:—ஐயோ! டாக்டர்! சேஞ்சு பாருங்களேன்.

பீதா:—ஒரே ஒரு கையெழுத்து போட்றவரெக்கும் இருந்தாப் போரும்!

நாயுடு:—நீங்க என்ன ஸார் பெரிய இதுவா இருக்கிறீங்க!.. 5 நிமிஷம் கான்ஷ்யஸ்னெஸ் (ஞாபகம்) வந்தா அப்பறம்

ஏன் மறுபடியும் சிக்காப் போறுரு?.... அந்த டயத்துக் குள்ளே ஆபரேஷனுக்கு சம்மதி எழுதி வாங்கிக்கினு ஆரம்பிச்சுட்டா, நிமிஷத்துல்லே தீந்து பூடுது!....

பீதா:—இல்லே ஸார்! அவர் உயிலே ரெடியா எழுதிக் கொண்டு வந்திருக்கிறே........அடாடாடாடாடாடா டா! என்ன உயில், என்னு உயில் தெரியுமா? நூதன மானது! இதுவரெக்கும் எந்த கண்ட்ரி (தேசத்தி) லேயும், யாரும் எழுதினதில்லெ! அடாடா...,அதுலே எத்தனெ விதமான கோஸ்டியன்ஸ் (பிரச்னைகள்) கிளம்பி யிருக்கும் தெரியுங்களா? ஒரு உயில் 10 ஜட்ஜுகளுக்கு சரியா வேலே வெச்கிருக்குமே! எம் பேரு ஓர்ல்ட் ஃபேமஸ் (உலகப் பிரசித்தம்) ஆய்ப் போயிருக்குமே...ஐயா டாக்டர்! 5 நிமிஷம் அவரெ சும்மா உக்கார வைக்க முடியாதாய்யா......ஓங்க மெடிகல் சர்விஸ் ஆலெ? சேச்சே, என்ன அநியாயம்!

பத்:—ஆனாலும் அப்பாவுக்குக் கொஞ்சமாவது முன் யோசனே இல்லே எத்தனே பேருக்கு அவராலே டிஸ்அப்பாய்ண்ட்மெண்ட் (ஏமாற்றம்)...

சுந்:—என்ன அஜாக்ரதை!

கிரி:—என்ன துரதிர்ஷ்டம்!

பீதா:—போச்சு! நல்ல சான்ஸ் (சமயம்)...

நாயுடு:—ஒழிஞ்சுது.........பஸ்ட் க்லாஸ் ஆப்பர்ச்சூனிட்டி (முதல்தர சந்தர்ப்பம்) பேரெடுக்க!

ராம:—(எழுந்து) கனவான்களே! சீமாட்டிகளே! உங்கள் யாவருக்கும் இவ்வளவு மனக் கஷ்டம் உண்டாகும் படி நான் செய்தது ரொம்ப வருந்தத் தக்கது....சரி, என்ன செய்யலாம்? இன்னும் ஒரு 20, 30 வருஷத் திற்கு உங்களுக்கு சான்ஸ் (சமயம்) கிடைக்கா தென்று தோன்றுகிறது. அப்புறம் வேண்டுமானால் யோசிக்கலாம்....போய் வருகிறீர்களா?

வந்தனம்.

# நாடக பாத்திரங்கள்

நாதமுனி : ஆத்மாராமராவின் வேலையாள் (நாத)

ஸாம்வேல் : டெலிபோன் ஆபீசில் வேலை செய்பவன் (ஸாம்)

ஆத்மாராமராவ் : வக்கீல் (ஆத்மா)

பாலா : ஆத்மா ராமராவின் மனைவி (பாலா)

வரதாசாரி : வக்கீல் குமஸ்தா (வரதா)

சுப்பையா செட்டியார் : கக்ஷிக்காரன் (சுப்)

தையல்நாயகி அம்மாள் : } காங்கிரஸ் தொண்டர்கள் { (தையல்)
பங்கஜம்மாள் : (பங்க)

பாக்மல் ஸாவுகார் : வக்கீலுக்கு வாச் இரவல் கொடுத்தவன் (பாக்)

ஜகன்மோகன் நாயுடு : ஒரு எத்தன் (ஜக)

குஞ்சிதபாதம் : இன்கம் டாக்ஸ் அதிகாரி (குஞ்)

# காட்சி 1.

## காலை

### வக்கீல் ஆத்மாராமராவின் ஆபீஸ் அறை

[ராயருடைய வேலையாளான நாதமுனி என்னும் வைஷ்ணவ நாயுடு ஸ்நானம் செய்துவிட்டுப் பட்டை நாமம் பாக்கச் சாத்தி மேஜை, நாற்காலிகளைத் துடைத்துக்கொண்டும், புத்தகம் காகிதங்களை அடுக்கிக்கொண்டும் இருக்கிறன்.]

*நாத* :—அப்பாப்பாப்பா! என்ன தும்பு! என்ன தூசு! ஆளையே முழுக்கிடும்போல இருக்குதே! சீ! சீ! இவ்வளவும் ரோட்லேந்தா வந்திருக்கும்? பாதிக்கு மேலே இந்த அய்யரு போட்ர ஆர்ப்பாட்டத்துலேயே அக்கம் பக்கத்துலேந்து கிளம்பிக்கினு இங்கே வந்து படிஞ்சு போவும்!! ஆனாலும் என்ன? ஒரே காயிதக் கட்டு...அதே கடதாசிங்க!...ஸரிதான்... அதே பழங்கதைதான்!...

[ஸாம்வேல் வருகிறன்.]

*நாத* :—என்னுங்க? யாரு நீங்க?

*ஸாம்* :—டெலிபோன் கம்பெனி. எங்கே மாஸ்டர்?

*நாத* :—இன்னும் எயிந்து வர்லே. அந்த நாக்காலிலே குந்திக்குங்க! எதானு கேஸா?

*ஸாம்* :—கேஸூம் இல்லே; எளவு மில்லே...ஸரி...நம்ப வேலெயெப் பாக்கலாம்!...எங்கேய்யா டெலிபோன் இருக்குது?

*நாத* :—அதொ! மெஜெ மேலெ தெரியலே?...எதானு கெட்டுப் போச்சா?

*ஸாம்* :—சும்மா இரு; ஆபீஸ் ஆர்டர் டிஸ்கனெக்ட் செய்துடச் சொல்லி.........(கம்பியைக் குறடாவினுல் வளைத்துக் கத்தரித்துக் கொண்டே) என்னுத்துக்கு கம்பெனி பாக்கி குடுக்கலே ஓங்க மாஸ்டர்? அந்த

எயவெத் தொலச்சுப் புட்டா நம்பிளுக்கு இந்த எயவு வேலே என்னுத்துக்கு வரும்?

நாத :—ஆனு, அது இனிமேலிக்கிப் பேசாதுங்களா?

ஸாம் :—'கட்' பண்ணிட்டா எப்படிய்யா பேசும்?... ஸரி! நானு போவணும்...இந்த வாரத்துக்குள்ளா பாக்கி கட்டாக் காட்டி...இன்ஸ்ட்ருமெண்டையே எடுத்துக்குனு பூடுவாங்க.....பாக்கிக்குத் தாவா போடுவாங்கண்ணு சொல்லு!...இதுக்கு இரண்டு மாச 'ரெண்ட்' கூட குடுக்க முடியாதவங்களுக்கு இது ஒரு ஜம்பம் என்னுத்துக்கு?...(பேசிக் கொண்டே போகிறான்.)

நாத :—ஸரிதான்...போது நல்லாத்தான் விடியுது! இந்தச் சமாசாரத்தெ யாரு சொல்லறது?...... நம்புளுக்கு என்ன வந்திச்சு? அத்தெ சொல்லுவானேன்! தொரெவூட்டு நாயாட்டம் அந்த ஆளு நம்ப மேலே விழுவானேன்!...தானே தெரிஞ்சுக்கிட்டும். ...அதெ...தொ...எறங்கி வர்ராப்பலேக்குது ...தும்பு தட்டலாம்...

[தூக்கக் கண் தெளியாமல் ஆத்மாராம ராவ் அலங்கோலமாய் வருகிறார்.]

ஆத்மா :—என்னடா இது, டர்ட்டி கைட்? இன்னுமா தும்பு தட்டிண்டிருக்கே?...ஒனக்கு மூளேயில்லே! நா எறங்கி வரத்துக்குள்ளே இதெல்லாம் ஃபினிஷ் (பூர்த்தி) பண்ணியிருக்கணும்னு எத்தனே வாட்டி சொல்றது?

நாத :—ஐயா எண்ணிக்கி எப்பொ எறங்கி வராருண்ணு யாருக்குத் தெரியும்?...மணி இப்பொத்தான் 6 ஆவுது! இதுக்கு முன்னே என்னுலே வரமுடியாதுங்க...

ஆத்மா :—ஓ, அப்படியா ஸமாசாரம்? இம்பர்டினென்ஸ் (அதிகப்பிரசங்கம்) ஜாஸ்தியாப் போச்சு, கழுதே! 2 ரூபா ஃபைன் (அபராதம்) உனக்கு; போ!

நாத :—கொறச்சலேல்லே. மூனு மாஸத்துச் சம்பளம் பாக்கியிருக்குதாம்—இந்த 2 ரூபா 'பைன்லே' முழுகிப்போச்சு — சம்பளப் பாக்கி ஏற ஏற பைனும் ஏறும்போலிருக்குதே!

ஆத்மா :—ஹா, ஹா, வாட் நான்ஸென்ஸ் (என்ன அபத்தம்)? என்னடா ரொம்ப எதிர எதிர வாயாடறே—அயோக்கியப் பயலே! ஒன் பிஹேவியர் (நடத்தை) ரொம்ப இண்டாலரபில் (சகிக்க முடியாதது) ஆய்ப்போச்சு. ஐ ஹாவ் ஹாஃப் எ மைன்டு டு டிஸ்மிஸ் யூ (உன்னை வேலையிலிருந்து விலக்க எனக்குப் பாதி மனஸு.)

நாத :—ஒங்களுக்கு ஏன் அவ்வளவு கஷ்டம்? எனக்குச் சேரவேண்டிய பாக்கியே குடுத்துட்டா நானே பூட்ரேனுங்க.

ஆத்மா :—ஹூம், என்னெ என்னடா மடயனென்னு பாத்தியா? தெரியாதெயா ஒன் சம்பளத்தே பாக்கியிலே வச்சிருக்கேன். நாயே! வேணுமான இப்பவே பூடு வெளியிலே.

நாத :—என் ஸர்டிபிக்கேட்டுங்களெயான கொடுங்க—நான் பூட்ரேன்.

ஆத்மா :—அதெல்லாம் ஒண்ணும் குடுக்க மாட்டேன். ராஸ்கல்!

நாத :—வாண! வாண! வாயே ரொம்ப ஜாஸ்தி ஓட்டாதிங்கோ!

ஆத்மா :—டாம் யூ! இங்கே நின்னு - முன்னே - ஒன்னே - ஓட்ரேன் பாரு.

நாத :—அட பொய்யா! என்னமோ நீ படிச்ச அரெ எயுத்தே எங்கிட்டெக் காட்ரே. ஓம் வெக்கீல் வேலேப் பவுசு எனக்குத் தெரியாதா? நீ கையே வெக்கற கேஸ் எதான பொயக்குதா? எந்த மடயன் ஒனக்கு...

ஆத்மா :—(அவனை அடித்து) ஷட் அப் யூ ஸ்கவுன்ட்ரல்! கெட் அவுட் (வாயை மூடு, அயோக்கியா! வெளியே

போ)! (உதைத்துக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுகிறர்.) ஸ்காம்ப்! ரோக்!

நாத :—(அழுதுகொண்டே போய்க் கொண்டு) வா - வா ஒனக்குச் சரியான வயி வெக்கறெ. நீ எந்தக் கோர்ட்லே குப்பே கொட்ரயோ அந்தக் கோர்ட் லேயே ஒம்மேலே வயக்குப் போட்டு, ஒம் மானத்தே வாங்காக் காட்டி எம் பேரு நாதமுனி இல்லே. அப்படியா ஸமாசாரம்?

ஆத்மா :—சீ, போ—ராஸ்கல், ஒன் பேச்சை எவண்டா நம்புவான்?

நாத :—மேலே ஒத்தன் இருக்கான்-பாத்துக்குவாம்போ ஒன்னே. என் வவுத்தெரிச்சல் வீணுவா பூடும்?

[போகிறன்.]

ஆத்மா :—சீ! சீ! சீ! சீ! சீ! ஷால் ஐ கால் ஹிம் பாக்? (அவனைத் திரும்பிக் கூப்பிடட்டுமா?) அடே! (நாதமுனி வந்து பார்க்க) வரதாச்சாரி! தட் ராப் இஸ் நாட் எட் கம் (அந்தப் பயல் இன்னும் வரலே). (நாதமுனியைப் பாராதது போலிருக்க அவன் திரும்பிப் போகிறன்.)

வாட் எ பர்ட் பிகினிங் ஃபார் தி டே! (இன்று பொழுது ஏன்தான் இப்படி விடிந்தது!)—எழுந்த வேளே! இல்லேயே ... எழுந்தோடனே - கண்ணாடிலே... என் ஃபேஸையே (முகம்) தானே பாத்துண்டேன் (உள்ளே தம் மனைவி குரல் கேட்டு) ஹூ இஸ் தெயர்? (யாரங்கே)?

[பாலா வருகிறள்.]

பாலா :—என்ன, கூப்பிட்டீர்களா?

ஆத்மா :—ஆமாம்; யாரோடே பேசிண்டிருந்தே அங்கே?

பாலா :—யாரோடேன்னு? நம்ம நாதமுனியோடே.

ஆத்மா :—ஐ ஹாவ் டிஸ்மிஸ்ட் தாட் ஃபெலோ! (அந்தப் பயலே டிஸ்மிஸ் பண்ணிட்டேனே!) சொல்லலே அவன்?

பாலா :—அந்தக் கதையெத்தான் சொல்லிண்டிருந்தான்.

ஆத்மா :—காரணத்தைச் சொன்னுை ராஸ்கல்?

பாலா :—யாரு?

ஆத்மா :—இல்லெ......இல்லெ...அவனைச் சொன்னேன். அதுதான். காரணத்தை சொன்னுனேன்னேன்.

பாலா :—ஆஹா, சொன்னுன்.

ஆத்மா :—என்ன சொன்னுன்?

பாலா :—என்னுத்தே சொல்றது? வாஸ்தவத்தெ சொன்னுன்.

ஆத்மா :—வாஸ்தவத்தெயா?

பாலா :—ஆமா, ஸர்வ வாஸ்தவத்தெ.

ஆத்மா :—ஐ டோண்ட் அண்டர்ஸ்டாண்டு யூ (நீ சொல்றது எனக்குப் புரியலையே!) நீ என்ன சொல்றே?

பாலா :—என்னத்தே சொல்றது? அவன் சம்பளத்தெ வாயிலெ போட்டுக்கறத்துக்காக அவனே வெரட்டி யடிச்சு வேலெயிலிருந்து தள்ளி யாச்சு.

ஆத்மா :—அசடு! என்ன பொய்யெல்லாம் சொல்லி யிருக்கான், பாத்தயோ? நீ அதெ நம்பினையா என்ன? அந்த அல்பக் கழுதெ சம்பளத்தே நான் அபகரிக்கப் பாத்தேன்னு நம்பினெ? இருக்கட்டும். அந்தக் கழுதெ எவ்வளவு இம்பர்டினென்டா (அதிகப் பிர சங்கித்தனமா) நடந்துண்டான் தெரியுமா ஒனக்கு?

பாலா :—இருக்கலாம். அதுக்குத்தான் டிஸ்மிஸ் பண்ணி யாச்சே. அவனுக்குச் சேர வேண்டியத்தே குடுத் தனுப்பறது தானே?

ஆத்மா :—அந்த மாதிரி துன்மார்க்கப் பசங்களுக்கு சரியான தண்டனெ வேணும். இதோ பாரு-பாலா! நீ ரொம்ப சின்னவள். ஒனக்கு ஒண்ணும் தெரியாது. மனுஷாளுடைய தாரதம்யம் சுத்தமா... (பாலா கோபிக்க) சரிதான்! சரிதான்!.. கடசிலே அந்தப் பயலுடைய பணத்தைக் குடுக்காதேயா

போயிடுவேன்? இருந்தாலும், இதோ பாரு......
இப்பொ கையிலே சுத்தமா பணமே இல்லெ...

பாலா :—என்னிக்கி இருந்து வாழ்ந்துது! எப்பொப் பாத்தாலும் இல்லே இல்லேன்னு, இல்லே பாட்டுத் தான். ஆனு, போது விடிஞ்சா, காலமே எல்லாம் இந்த ஆபீஸில் நடக்கிற தடபுடலும் கோஷ்டமுமே பிரமாதமாயிருக்கு. ஓசைக்கும் ஒலிக்கும் கொறச்சலே காணும்.

ஆத்மா :—ஆமாண்டீ, ஆமா! ஓசையை என்னமோ பண்றேனே தவிர காசை எண்ணலேடி. என்னத்தைச் செய்யறது?

பாலா :—எந்த வேளையிலே, அந்தப் பாழாய்ப் போன ஜோஸ்யன் பேச்சைக் கேட்டுப் படுகுழியிலே விழறாப் போலே முன்சீப் வேலையை ராஜினாமா கொடுத்தீளோ? எவ்வளவு கௌரவம்! எத்தனை பில்லைச் சேவகன்! பார்த்தவாளெல்லாம் பதுங்கிக் கைகட்டி நிக்கறதும், எல்லாத்தையும், தொலச்சுண்டு இங்கே இந்த வக்கீல் வேலையை, பாஷ்யமையங்காருக்கு அப்புறம் நான் தான் என்று நெனச்சுண்டு வந்துட்டேளே! என்ன வாழ்றது இப்போ!

ஆத்மா :—ஐயோ, அசடே! ஒனக்கு ஒன்னும் தெரியலயே. பாலா, இதோ பாரு, நீ சொல்றது சுத்தத் தப்பு!

பாலா :—தப்புமில்லே, கிப்புமில்லே. மாசம் பொறந்தா முள்ளங்கிப் பத்தையாட்டமா முந்நூறு ரூபா கைலே வந்துவிடும். போகப் போகச் சம்பளமும் ஒசந்து ஆயிரம் ரூபா வரைக்கும் வந்திருக்குமாமே... அது போச்சு. வாயையும் கையையும் மூடிண்டு வாசல்லே ஒக்காந்துண்டிருந்தாக் கூட வாதியும் பிரதிவாதியும் சண்டை போட்டுண்டு நான் முன்னே, நீ முன்னேன்னு ஓடிவந்து பணத்தெ வாரிக் குடுப்பா. ஒரு பத்து வருஷத்திலே லக்ஷாதிப் பிரபுவாப் போயிருக்கலாம். வேலையெ அப்போ ராஜீநாமா

பண்ணியிருந்தா கெட்டிதான். அது வாயிலேயும் மண்ணு விழுந்தது.

ஆத்மா :—என்ன ஔர்ரயேகடந்து ?

பாலா :—கொஞ்சம் இருங்கோ ! அடேன்னு கூப்பிடறத்துக்குள்ளே அம்பது ஆள் அடிச்சிண்டு ஓடிவந்துண்டிருந்தான். இப்பொ உள்ளதும் போச்சுடா நொன்ளக் கண்ணுன்னு இருந்த அந்த ஒத்த வேலைக்காரனும் ஒதறிப்போட்டுட்டு ஒழிஞ்சு போயிட்டான். இங்கே என்னமோ கொட்டி அளந்து குபேரனுய்ப் போகப் போருேம்னு வந்தேள்.

ஆத்மா :—பாலா ! பாலா ! பொறு, பொறு. என்ன அவசரம் ? பாத்துண்டே இரேன். இன்னும் கொஞ்ச காலம் — மாசக்கணக்கோ, இல்லே, வாரக் கணக்கோ, என்னமோ மணிக் கணக்கோ ?

பாலா :—ஆஹா ! பொறுத்துக்காமல் என்ன செய்யப் போறேன் ? வரப்போறது தான் என்னமோ தெரியலே !

ஆத்மா :—யோகம்...சனிதசை... தன லாபம்.

பாலா :—சனிதசையா ? பின்னே, இப்போ இருக்கறது என்ன ?

ஆத்மா :—பைத்யமே ! சனி எனக்கு ரொம்ப நல்லவண்டி. தனுதிபதி 11–லே உச்சனுயிருக்கான். அவன் தசை யிலே வரப் போரதுன்னு ஜோசியர் சொன்னுரே.

பாலா :—நல்ல ஜோசியர்.....சரி.....போரும் காவங் காத்தாலே பல்லைக்கூட தேக்காதே பாராயணம் பண்றது. பல்லைத் தேய்ச்சுக் காப்பி சாப்பிட வாங்கோ ; போகலாம்.

ஆத்மா :—காப்பியெ நீ தானே போட்டே...காப்பி எப்படி இருக்கனும் தெரியுமா ? காப்பின்னு கூப்பிட்டா என்னுன்னு சொல்லணும்.

பாலா :—சரிதான். அதுதான் சொல்லணும். இருந்த ஆளைக்கூட அனுப்பிச்சுட்டயளே. வேறெ யாரு என்னு என்னு கேக்கறது ?

*ஆத்மா* :—யூ மிஸ்ச்சிவஸ் இம்ப் (ரொம்ப வாயாடி நீ)! தாட் வாஸ் எ குடு ஜோக் (அது நல்ல தமாஷ்) ஹா! ஹா!! (பாலாவை அழைத்துக்கொண்டு உள்ளே போகிறர்.)

# காட்சி 2

## காலே

### வக்கீல் ஆத்மா ராம ராவின் ஆபீஸ் அறை

[குமாஸ்தா வரதாச்சாரி வருகிறர்.]

*வரதா* :—இதிலெல்லாம் கொறச்சலில்லே! இந்த எழவை உட்டா நமக்குங் கதியில்லே...அடே நாதமுனி!... சம்பளத்தைக் கண்ணுலே பாத்து மூணு மாசமாறது ...எங்கடாவன் நாதமுனி! ஊர்லே மத்த வக்கீல் குமாஸ்தாக்களும் இல்லாதையா போயுட்டா...அடே நாதமுனி! இன்னுமா வர்லே அந்தக் கழுதை?

[சுப்பையா செட்டியார் வருகிறர். அவரைப் பார்க்காமல்]

சோம்பேறிக் கழுதை! குட்டிச் சுவரே...... காதடைச்சா...வாங்கோ.

*சுப்* :—(தயங்கி) நேனு அவதலே ஒஸ்தானு...சகுனம் காலேது......

*வரதா* :—(அவர் கையைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு) மன்னிக்கணும், மன்னிக்கணும்! அடடா செட்டியார் வாளா? நானு பாக்கலே. காலோசையைக் கேட்டு அந்தப் பயல் நாதமுனிதான்னு நெனச்சேன். பாருங்க. மாசம் 25 ரூபா சம்பளம் குடுக்கறர் எஜமானர் அந்தப் பயலுக்கு ... மஹாதாதா! ஏழைகள் மேலே ரொம்ப தயை ... வேளையிலே வரப்படாதோ? ...சகுனம் கிடக்கிறது. நாம் அத்தைக் கவனிக்க வாண்டாம்... ஒக்காருங்கோ... இப்போதான் எறங்கி வந்தார். எஜமானர் உள்ளே காப்பியும் லேட் டிபனும்

பண்ணிண்டிருக்கார். வர சமயந்தான்...இத்தனெ நாளாச்சு நம்ப மேலே தயவு பிறக்க. என்ன விசேஷம். ஏதோ பெரிய வியாஜ்யம் போலிருக்கு... இல்லாட்டா இங்கே வருவேளா ?-

சுப் :—(இருமலுடன்) லேதண்டி ! பெத்த பாகுபத்தமில கூடண்டி. மீகு தெலுகு தெலிசுனு ?...நேனு இப்புடு பணி சேசுதே லேது...வியாபாரமுலு அந்த நிலுப்பி யுன்னுனு...தேவுடா ! நீ இன்டிலோன்னே உண்டேப் புடு சூஸ்திரா ? போயின சம்வத்ஸரம்தா கொத்த பெண்ட்லி சேஸ்கொன்னுனு. அதி இன்ட்லோ தனிகா எட்லே உண்டேதி...

வரதா :—வாஸ்தவம்தான். முதல் ஸம்ஸாரம் தவறிப் பூட்டாப் போலிருக்கு ! ஐயோ பாவம்! த்சு! த்சு! த்சு!

சுப் :—லேதண்டி ! லேதண்டி ! ராமானுஜா ! தப்புபனி ஏமி செயலேதண்டி ! ராம ! ராம ! சனி போயிந்தி.

வரதா :—அட கஷ்டமே! சனி பிடிச்சுதா ? பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பக்கூடாதோ ? என்ன இருந் தாலும் அப்படி பட்டவாளெ வீட்லே வைச்சுண்டா குணமாரதில்லே.

சுப் :—ராம! ராம! ஏமிரா கஷ்டம் ? அதிகாதண்டி. மீகு தெலுகு பாக பட்டலேதே. சச்சிபோயிந்தி.

வரதா :—செத்துப் போயிட்டாளா ? ஐயோ பாவம் ! அட கிரஹசாரமே...உமக்கு இந்தத் தள்ளாத வயசுலே...

சுப் :—சுவாமி ! நாகு நின்னதான் யாபை எனிமிது ஏள்ளாயின்தி...அந்த முசிலி வாடுகா நன்னு அனுக ஒத்தண்டி. ஆயிதே சூஸ்திரா. நானபன ஏமி காரணமுலேக தொங்க முண்டா கொடுகு தாவா சேசி உன்னுடு.

வரதா :—எவ்வளவுக்கு ? உம்ம இரண்டாவது பெண் டாட்டி ரொம்ப சின்னவளாக்கும் ?

சுப் :—நலபை எனிமிதி.

வரதா :—சரிதான் ! ஓமக்குச் சரியான ஜோடிதான் !

சுப் :—அதேமி ? ஏமி ஜோடி ?

வரதா :—ஓமக்கு 58 வயசு ; ஓம்ம ஸம்ஸாரத்துக்கு 48ன்னு நல்ல ஈடுதானே பாருங்கோ. எங்கேனு ஒரு 15 வயசு பெண்ணைக் கலியாணம் பண்ணிண்டிருந்தா எத்தனெ விதத் திண்டாட்டம் பாருங்க.

சுப் :—ராம! ராம! நலபை எனுமிதி ஏள்ளு காதண்டி. மீகு தெலுகே அர்த்தம் காலேது. நலப எனுமிதி ருபாயிலுகானி தாவானு செப்தினி.

வரதா :—அட கண்ருவியே! நான் தப்பர்த்தம் பண்ணிண்டு தடமாடரேன். கோவிச்சுக்காதேங்கோ. செட்டியார்வாள்! நீங்க தமிழ்லே பேசுங்களேன். மெட்ராஸ்லே ஓங்களவாளுக்கெல்லாம் தமிழ்தான் நன்னு தெரியுமாமே!

சுப் :—நாக்கு அரவமு பாக தெலியதண்டி. மீ மாதிரிகா மஞ்சி பிராமணுலுதோ மாட்லாடப்புடு தப்புமாட ஏமியு செப்பகுடுதெனி நா இஷ்டம் அந்துக்கானே.

வரதா :—சரிதான்! சரிதான்! நான் புரிஞ்சுக்கறேன்... அப்பறம் கேஸ் 48,000 ருபாய்க்கா ?

சுப் :—லேதண்டி. நலபை எனிமிதே. நேனு ஏமோ தன இண்ட்லோ காபுரம் உண்டிந்தி வல்ல பலகியேமி செப்தாடு—நேனு ஒச்சி அப்புடே காலி சேஸ்தினி... மீரு செப்புனண்டி நா பெண்டலாமுனு சூஸி நவ்விடு ஒகதூரி...ஆரோஜே இங்கொக்க இண்டிக மார்ச்சி வச்சினுமு...

வரதா :—சரி, அந்தக் கண்ருவி இருக்கட்டும். கேஸ் என்னிக்கி ?

சுப் :—மங்கள வாரமு...வாரெக்கடா ? மீரு செப்பின கொத்த முனிசிப்பு வக்கீலு வீரே காதா ?

வரதா :—ஆமாம். வந்துடுவார் இப்போ.

சுப் :—ஏமண்டி பீஸ் ஜாஸ்தி அடுகுதாரா ? மீகே தெல்சுனு இப்புடு வியாபாரமுலந்த நிலுப்பி யுன்னனு. முசிலிவாடுகா.

வரதா :—அதெச் சொல்லாதங்கோய்யா! வீட்லே தெரியப்போரது. நான் எல்லாத்தேயும் சரியா ஏற்பாடு சேஞ்சு தறேன். என்னை மாத்திரம் மறந்துடப் போரேங்க.

சுப் :—நன்னு நம்மர மீரு ?

வரதா :—நன்னுருக்கு! நம்பாதெ என்ன! ஆனு பாருங்கோ...காலங்கார்த்தாலே மொதல்லே போணீ பண்றேங்கோ...எதோ பளிச்சுன்னு கையிலே யிருந்தா...

சுப் :—சரி! நாபைய நம்மக அந்ததா...கானி பெட்டு கொண்டி (மடியிலிருந்து நுபாயை எடுத்துச் சுற்று முற்றும் பார்த்து வரதாசாரிக்குக் கொடுக்கிறர்.)

வரதா :—(மறுத்து) இது என்ன இது?......கொத்தவால் சாவடியா இது?...

சுப் :—தோயே ஒத்து, லக்ஷிமினதோயே ஒத்து, தீயண்டி. இங்க சூஸ்தானு.

[வரதாச்சாரியின் கையில் வைத்துவிடுகிறர்.
ஆத்மா ராம ராவ் வருகிறர்]

ஆத்மா :—வரதாச்சாரி, வாட் இஸ் தி மாட்டர் வித் யூ? யூ ஆர் எ கேன் லேட்!...(உனக்கு என்ன வந்தது? மறுபடியும் ஏன் தாமதம்?) ஹல்லோ யாரிந்தச் செட்டியார்?

வரதா :—இவர் தான்......அந்தப் பேர்போன சுப்பய்யா செட்டியார்...மூலேவீட்டே விடமாட்டேன்னு முனிசிபாலிட்டியோடெ சண்டை போட்டு 30,000 செலவு பண்ணின்வர். பழைய நாளெ மனுஷர்...குமாரசாமி சாஸ்திரியார் ப்ராக்டிஸ் பண்ணச்சே அவர் க்ளேயண்ட். அப்புறம்...அவருக்குப் பெரிய வேலேக ளெல்லாம் ஆனவுடனே நிலேயா யாரண்டையும் குடுக்கறதில்லே... 45 வருஷமா தெரியும்...இங்கேயே ஸ்டாண்டிங் க்ளேயண்டா யிருக்கணும்னு ஆசை. யாரோ இவர் மேலே ஒரு சின்ன கேஸ் பண்ணி யிருக்காளாம்.

ஆத்மா :—எந்தக் கோர்ட்லே ?...

வரதா :ஸ்மால்காஸ் கோர்ட்டிலே.

ஆத்மா :—என்னய்யா எத்தனே தரம் நான் சொல்றது ஒனக்கு...ஸ்மால்காஸ் கோர்ட்டுக்கு வரமுடியாதுன்னு...நான்ஸென்ஸ்

வரதா :—செட்டியாரே பார்த்தேளா ? நான் சொன்னேனேன்னே...இருந்தாலும்...செட்டியார் விஷயத்திலே மாத்திரம் நாம் அப்படி நிர்தாக்ஷணியமாயிருக்க முடியாது...ரொம்ப யோக்யர்...எனக்கு 45 வருஷமா பரிச்சயம். எனக்காக எஜமானர் இந்தக் கேஸை எடுத்துக்கணும்.

ஆத்மா :—இம்பாஸிபில் (முடியாது). என்னமா முடியும்... எனக்கு டயம் எங்கே இருக்கய்யா இதுக்கெல்லாம் ?

வரதா :—அதெல்லாம் இப்பொ சொல்லி லாபமில்லே... மேலும் செட்டியார் பாருங்கோ, ரொம்ப பலத்த புள்ளி...அவா மூலமா இன்னும் இதர கேஸ்கள் ரொம்ப நமக்கு வரும். போது விடிஞ்சா, போது போனு, இவருக்குக் கோர்ட்டே கதி ! இவர் கேஸ்களே ரொம்ப இருந்திண்டிருக்கு !

ஆத்மா :—த்ஸு, த்ஸு, த்ஸு ! யூ ஆர் எ நியூஸென்ஸ் வராதாச்சாரி ! ஒவ்வொரு கேஸும் ஸ்பெஷல்தான் ஒனக்கு !

வரதா :—அது அப்படி இல்லே ! செட்டியாரே ஸ்பெஷல் தான் !—செட்டியார் ஒத்தரே ஒத்தர்தான் ஒங்களுக்கு க்ளேயண்ட்டுன்னு வைச்சுக்குங்கோ. அப்பொ எப்படி நடத்துவீளோ அப்படி நடத்தணும் அவர் விஷயத்தே !

ஆத்மா :—ஆல் ரைட் (சரிதான்), என்ன பீஸ் கொடுப்பார் ? கேஸ் தொகை என்ன ?

வரதா :—இது பிள்ளேயார் குட்டு. அதாம் மொதல் கேஸ். ஆகையினலே......

ஆத்மா :—நான் சும்மா ஆஜர் ஆகணும் ?......

வரதா :—செட்டியாரே! நான் என்ன சொன்னேன் பார்த்தீளா? (செட்டியார் காதில் ஏதோ 'கிசு கிசு' என்று சொல்ல, சுப்பையா செட்டியார் மெள்ள இரண்டு ரூபாய்களை எடுத்து வந்து மேஜை மேல் வைக்கிறர்.)

ஆத்மா :—என்னப்பா இது! இது என்ன? ரெண்டு ரூபாயை கொண்டு வைக்கிறீளே! (ரூபாயை எடுத்து ஜோபியில் போட்டுக்கொள்கிறர்.)

சுப் :—தானிகேமண்டி! மீரு ஏமிசெப்பலேத்து! மொட்ட மொதட மீகு இஸ்தானுகாதா! ஒக்கரூபாய் ஜாஸ்தி இச்சிதினி!

வரதா :—அட கர்மமே! வாயெ மூடுமையா?...... செட்டியார் சிலவேளெலே அப்படித்தான் வேடிக்கையா பேசுவார். அது ஒரு குணம் அவருக்கு! ஏன்? [சிரிக்கிறர். மறைவாய் செட்டியாரை 'நீரும் சிரியுமய்யா' என்று சொல்ல, செட்டியார் நாய் ஊளையிடுவது போலச் சிரிக்கிருர்.) பின்னுலே எல்லாம் சரிவர நடக்கும்.

சுப் :—அவுனு! மீரு ஈ 2 ரூபாயலுனு ரெண்டு வேலுகா பெட்டுக்கொனி பனி சேயவல. மா கேஸுனு பாக கவனின்சவலண்டி.

[தையல்நாயகி அம்மாள் பங்கஜம்மாள் முதலிய காங்கிரஸில் சேர்ந்த ஸ்திரீகள் கதர் உடுத்திக்கொண்டு வருகிறர்கள்.]

ஆத்மா :—ஹலோ! ஹலோ! வாருங்கோ! வாருங்கோ! வரதாச்சாரி! நாற்காலி போடு. ஒக்காருங்கோ!

தையல் :—நமஸ்காரம்! ரொம்ப பிஸியா இருக்காப் போல்ருக்கு நாச்சரல் (சகஜம்) தான்!

பங்க :—நாங்க வெயிட் பண்ரோம்! கக்ஷிக்காரர் கிட்ட பேசிண்டிருக்கச்சே டிஸ்டர்ப் (தொந்தரவு) பண்ணப் படாது.

ஆத்மா :—ஓ! இட் இஸ் நத்திங் (அது ஒண்ணுமில்லே!) ஐ ஷால் ஃபினிஷ் இட் இன் நோ டைம் (சீக்கிரம்

முடிச்சுவிடுவேன்). ஜஸ்ட் ஸிட் டவுன் (கொஞ்சம் உட்காருங்கள்).

தையல் :—இருக்கட்டும்! பாதகமில்லெ!!

[வரதாச்சாரி ஒடிந்துபோன நாற்காலிகளைக் கொண்டு வந்து போடுகிறன்.]

ஆத்மா:—ப்லீஸ் ஸிட் டவுன் (தயவு செய்து உட்காருங்கள்)! ஹல்லோ! வாட் இஸ் திஸ் (என்ன இது)? வரதாச்சாரி, வோயர் ஆர் ஆல் தி குட் சேயர்ஸ் (நல்ல நாற்காலிகள் எல்லாம் எங்கே போச்சு)? என்ன சுத்தமா யோசனை பண்ணுதே இவாளுக்கு இந்த மாதிரியா கொண்டு போட்றது?

வரதா :—இல்லெ! அந்த மஹோகனி சேர்கள் எல்லாம் வார்னிஷுக்குப் போயிருக்கு! ஒயிட் ஸெடான் சேர் ஆபீஸ் ரூமுக்கு ஒதவாதுண்ணுட்டு மேலே டிராயிங் ரூம்லே போடச் சொல்லிட்டுது...ரோஸ் வுட்சேர்கள்..

பங்க :—இது ஏன் இப்படி ஒரி (உபத்ரவம்) பண்ணிக்கணும் மிஸ்டர் ராவ்? எங்களுக்கு இந்தச் சேர்கள் போரும்! பாருங்கோ! வி ஆர் காங்க்ரஸைட்ஸ் (நாங்கள் காங்கிரஸ்காரர்கள்). ஜெயிலுக்கு போயி கட்டாந் தரையிலே படுத்துண்டு, கஞ்சியே கூழெ குடிச்சுட்டு, கட்டையடி கூட பட்டவா ... ஏதேது! இந்தச் சேர்கள் எங்களுக்கு ஹெவன் (ஸ்வர்க்கம்) போலெ.

சுப் :—ஏமண்டி! மீரு ஒச்சி மன வீதிலோ அதேமோ செப்தாரே! அதி சேயலேது?

ஆத்மா :—ஓய்! என்னய்யா உளறுகிறீர்?

சுப் :—லேதண்டி! வீள்ளந்த ஒச்சி அக்கட அதேமி...... பாக்கட்டா!...லேதே......பாக்கட் அவுனு...பாக்கட் சேசினரே...அதெ செப்தானு!...

[தையல், பங்கஜம் கலகலவென்று சிரிக்கின்றனர்.]

இருவரும் :—பேஷ் பேஷ்!! செட்டியாரே...ரொம்ப சரி!

தையல் :—பாக்கட் செய்யத்தான் தெரியணும் இந்தக் காலத்திலே!—

**ஆத்மா** :—ஐ டோண்ட் அண்டர்ஸ்டாண்டு (எனக்குப் புரியலே).

**பங்க** :—ஓங்களுக்குத் தெரியல்லேயா ? நாங்க ஃபாரின் ஷாப் (விதேசிக் கடை) ஐ பிக்கட் (மறியல்) செஞ்சோமோல்லியோ ! அத்தெச் சொல்றூர் செட்டியார் !......

**சுப்** :—அவுனு ! அவுனு ! நாகு கூட ஸால நஷ்டம். மீரு இப்புடு ஏமி ...

**ஆத்மா** :—ஷட் அப் (வாயை மூடும்) செட்டியார் ! சும்மா இருங்கோய்யா !

**தையல்** :—இருக்கட்டும், இருக்கட்டும். பெரியவர், டோண்டு ஸ்கோல்டு ஹிம் (அவரை வையாதீர்கள்), பாவம். செட்டியார்வாள் ! நாங்க இப்பவும் காங்கரஸுக்காக வேலெ செய்கிறோம். ஓங்க கடையிலே வந்து பாக்கறோம் !...

**சுப்** :—ராம ! ராம ! மீக்கு எந்துகு ஆ கஷ்டம் ? மீரு ரா ஒத்து ! மீகு காவலசின ரகாலந்த ராசிடப்புதோ, ஒக்க பில்லகாய தக்கிர இச்சி பம்புதே, நேனு மஞ்சிதிகா இச்சி பம்புதானு ! நேனு போவல இப்புடு...ஏமண்டி, மீரு மரசி போவகொண்ட வஸ்தாருகா தா.

**ஆத்மா** :—கேஸ் எப்போய்யா ?

**சுப்** :—ஒச்சே மங்கள வாரமு !

**ஆத்மா** :—வரதாச்சாரி ! அன்னிக்கி நான் ஃப்ரீ தானு ?

**வரதா** :—ஆஹா !...முன்னியே பாத்துட்டேன் !......

**சுப்** :—சாக்ஷிலன்னி எப்புடு பிலிசி வச்சேதி......

**ஆத்மா** :—கோர்ட்டுக்கு ! கோர்ட்டுக்கு !! தாட் வில் டு (அது போரும்).

**சுப்** :—அயிதே, மீரு கேஸ் காயிதாலு ஏமி சதுவலேதே. கேஸ்விஷயாலி குறிஞ்சி மீரேமி தெலிய லேதே......

**ஆத்மா** :—தாட் இஸ் ஆல் ரைட் (அதெல்லாம் சரி) ! பேப்பர் எல்லாம் குமாஸ்தாவண்டெ குடுத்துட்டு போங்கோ ; நீங்க திங்கள்கிழமை மார்னிங் வந்துபாருங்கோ.

சுப் :— ஸாக்ஷிவாள்னுதோ வஸ்துனு ?

ஆத்ம :—நோ நோ (இல்லே, இல்லே), எனக்கு ஸாக்ஷி சொல்ல கத்துக்குடுக்கற வாடிக்கை கிடையாது! அது வேறே வக்கீல்ஸ் இருக்கா, டஜன் கணக்கா !!

சுப் :—இதேமண்டி! மீரு செப்பக போதே வாள்னு எட்ல வாக்குமூலமிச்சேதி ? மரி வக்கீல்னு எந்து குண்டானு...ஏமி ?

ஆத்மா :—சரி சரி, மண்டே (திங்கள்) வாங்கோய்யா! ஐ ஆம் வேரி பிஸி (எனக்கு ரொம்ப வேலேயிருக்கு).

சுப் :—ஸோமவாரம் வஸ்தானு! ஸாக்ஷிலு அந்த ருனி தோ 6 கண்டலுகே வஸ்தானு. வஸ்தானண்டி! அம்மலாரா! வஸ்தானண்டி! நேடு மஞ்சிதினமே! மீ தரிசனமு தொரகினதி.

வரதா :—(கூட வழிவிட்டு) செட்டியார்! மறக்கக் கூடாது.

செட்டி :—நேனு! மிம்மினு! மறிசேதறி!...ராம......ராம ......ர...

[போகிறர்.]

தையல் :—வாட் எ ஃபன்னி மேன்? (என்ன விநோத மனிதர்?) எவ்வளவு கெட்டிக்காரர் பாத்தேகளா?

பங்க :—செட்டியார் சும்மா தானு? இல்லாப்போனு இங்கே வருவாரா ?...

ஆத்மா :—வாட் கான் ஐ டு ஃபார் யூ (உங்களுக்கு நான் என்ன செய்யணும்)? என்னெ காங்கிரஸ் மெம்பரா என்ரோல் பண்ண வந்தேளா ?

தையல் :—பங்கஜம்! செட்டியார் மாத்தரம் தானு கெட்டிக்காரர்? மிஸ்டர் ராவ் கொறச்சலா ? இதோ பாரு! பலத்த செட்டியார் க்ளேயண்ட் வந்து இப்பத் தான் ரூபாயை கொட்டி அளந்தூட்டு போனுர். ...வெறுமென ஃபோர் அனுஸ் (நாலு அணு) கொடுத்து காங்கிரஸ் மெம்பர்ஷிப் அப்ளிகேஷன்லே கையெழுத்துப் போட்டுட்டு நம்மை அனுப்பிச்சுட்ப் பாக்கறுர், பாத்தையா ?

பங்க :—நன்னுருக்கு. நாமென்ன? ஐகோர்ட்லே அந்த ஜட்ஜெல்லாம் கண்ணெ மூடி திறக்கறதுக்குள்ளே ஏமாத்தற வாளுக்கு நாம் எவ்வளவு?

ஆத்மா :—ஹல்லோ! ஹல்லோ! வாட் இஸ் ஆல் தீஸ் (இதெல்லாம் என்ன)? அதென்ன அப்படி சொல்றேளே? ஐ ஜஸ்ட் ட்ரைட் டு கெஸ். நீங்க வந்த காரியத்தைச் சும்மா கெஸ் (ஊகம்) பண்ணிப் பார்த்தேன்.

தையல் :—நேவர் மைண்டு (பரவாயில்லே). நாங்களும் சும்மா பேசினேம். உண்மை இதுதான். காங்கிரஸ் பிரஸிடெண்ட் மதராஸுக்கு வரப் போருர்.

ஆத்மா :—பாருங்கோ, ஐ ஆம் நாட் எ பாலிடிஷன் (நான் ராஜீய வாதியில்லே). நான் ஒரு தண்டாவுக்கும் போறதில்லே. எனக்கு எல்லோரும் சிநேகிதம். ஒரு கக்ஷியும் எனக்குக் கிடையாது. அதனாலே......

பங்க :—வாட் இஸ் திஸ் மிஸ்டர் ராவ் (இதென்ன மிஸ்டர் ராவ்)? நீங்க இந்தியர் இல்லேயோ? இப்படி இருக்கலாமோ? ஒங்களெப்போலெ லீடிங் லாயர்ஸ் (பெரிய வக்கீல்கள்) தான் பாலிடிக்ஸ்லே என்டர் (பிரவேசம்) பண்ணி கண்ட்ரிக்கு (தேசம்) ஸர்விஸ் செய்யணும்.

தையல் :—நாங்க வந்த விஷயம் ஆக்ஷேபகரமானதல்ல. ஒங்க கான்ஷியன்ஸ் (மனச்சாக்ஷி) கூட விரோதமாய் இருக்காது. ராஜன் பாபு—பாருங்கோ—ஸோஷியல் ஸோர்விஸ் (சமூக சேவை) கூட ரொம்பச் செய்திருக்கிருர். அவருக்குத் தகுந்த பப்லிக் வெல்கம் (பொது ஜன வரவேற்பு) கொடுத்து ஒரு பர்ஸ் ப்ரேஸென்ட் (பணப்பை அளிப்பு) பண்ண வேண்டியதுன்னு....

வரதா :—நேத்து மார்னிங் (காலே) பத்மநாப முதலியார் வந்து பேசிண்டிருந்தார். ஏதோ இந்த ஸப்ஸ்கிரிப்ஷன் லிஸ்ட் (நன்கொடை ஜாப்தா)களை எல்லாம் வாட்ச் (கவனம்) பண்றதா சொன்னுர்.

ஆத்மா :—ஓ! அப்படியா? யூ ஸீ மை டியர் ஃப்ரெண்ட்ஸ் (பாருங்கோ) நான் நோ பார்டி மேன் (ஒரு கக்ஷியும் இல்லே). ஐ ஹாவ் டு திங்க் ஆஃப் மை ப்ராஸ்பெக்ட்ஸ்

(என் நன்மையை நான் நினைக்க வேண்டியிருக்கிறது). அதிலேயும், 'பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன்' எனக்குப் பிடிக்காது. யூ அண்டர்ஸ்டாண்டு வாட் ஐ மீன் (நான் சொல்ரது புரியறதா)?

தையல் :—யூ ஸீ மிஸ்டர் ராவ் (பாருங்கோ, மிஸ்டர் ராவ்)! நீங்க இதெல்லாம் சொல்லக் கூடாது. நம்மப் பத்தி நாமே இழிவா பேசப்படாது. பாருங்கோ பாலிடிக்ஸ்னு பலவிதமாகத் தானிருக்கும்.

பங்க :—மேலும், டு கம் டு தி பாயிண்டு....(விஷயத்தைச் சொல்கிறேன்) ஒங்க கிட்டேருந்து எங்களுக்கு காஷ் (ரொக்கம்) வேண்டியதேயில்லை......இன் ஃபாக்ட் மகாத்மாஜி (உண்மையில் மகாத்மாஜி) முன்னமேயே ஸ்ட்ரிக்ட் ஆர்டர்ஸ் இஷ்யூ (கண்டிப்பான உத்தரவு) பண்ணியிருக்கார்......யாரையும் காஷ் (ரொக்கம்) ஆ ஸப்ஸ்க்ரைப் பண்ணும்படி தொந்தரவு செய்யக் கூடாதுன்னு......

வரதா :—அவர் தான் க்ரேட் மேன் (பெரிய மனுஷ்யர்). தேசத்திலே இருக்கிற கஷ்டத்தைத் தெரிஞ்சவர்.

ஆத்மா :—டோண்ட் இன்டரப்ட் வரதாச்சாரி...மைண்டு யுவர் பிஸினெஸ் (நடுவில் குறிக்கிடாதே வரதாச்சாரி, உன் வேலையைப் பார்).

தையல் :—ஐயோ பாவம்! அவரெ கோவிச்சுக்காதேங்கோ! பெரியவர்......நியாயமாகத்தான் பேசுவார்.

வரதா :—தாங்க் யூ (வந்தனம்)! தாங்க் யூ (வந்தனம்)!

தையல் :—ஆகையினாலே தான் நாங்க பேரா எடத்திலெல்லாம் யார் யாராலே எந்த வஸ்துவோ நகையோ கொடுக்க முடியுமோ அதைக் கேட்டு வாங்கிண்டு போயி, ஆக்ஷன் (ஏலம்) செய்து பணமாக்கறது.

ஆத்மா :—இது ரொம்ப ஓல்டு ஐடியா...எங்க சபாவிலே சம்பந்த முதலியார் இதை ஃபிஃப்டீன், ட்வென்டி யீயர்ஸ் (15, 20 வருஷங்களுக்கு) முன்னயே ஸ்டார்ட் (ஆரம்பம்) பண்ணி ஒரு பில்டிங் ஃபண்டு (கட்டட நிதி)

சேத்துட்டார். ப்ராபபிலி யூ டோன்ட் நோ (அது ஒரு வேளை உங்களுக்குத் தெரிஞ்சிருக்காது).

பங்க :—ஓ! ஆனா அவர் ரொம்ப வொண்டர்ஃபுல் மேன் (ஆச்சர்ய புருஷர்) தான். வி ஷல் ஆல்ஸோ விஸிட் ஹிம் (அவரையும் நாங்கள் போய்ப் பார்க்கிறோம்).

வரதா :—(தனக்குள்) போங்கோ போங்கோ! அவர் தான் ஒங்களுக்கு நல்ல குரு... இன்னும் ரொம்ப ரொம்ப நல்ல ஐடியாஸ் வச்சிருக்கார்!

ஆத்மா :—வெரி வெல், இட் இஸ் கெட்டிங் லேட் (சரிதான் நாழியாகிறது). ஐ ஆம் அஃப்ரேய்டு எங்கிட்டெ ஒன்னும் ஆர்டிகில்ஸ் (சாமான்) கொடுக்கும்படியா இல்லே. யூ மஸ்ட் எக்ஸ்யூஸ் மி (என்னை மன்னிக்கணும்)... யூ நோ இட் இஸ் ஆல்வேஸ் ஹார்டு டு ஸே "நோ" டு லேடீஸ் (ஸ்திரீகளுக்கு 'இல்லை' என்று சொல்லுவது கஷ்டம்).

இருவரும் :—தென் டோன்ட்...,(அப்போ சொல்லாதீர்கள்).

ஆத்மா :—உண்மையில் இது ரொம்ப அஸந்தர்ப்ப காலம்.

பங்க :—ஒங்க கையிலே இருக்கிறது கோல்டு வாச் (தங்கக் கடிகாரம்) தானே.

தையல் :—ஃபாரின் மேக் (விதேச வஸ்து).

பங்க :—ரொம்ப காடியா (பகட்டாய்) கூட இருக்கு.

தையல் :—ஜெண்டில் மென்னுக்கு (பெரிய மனுஷ்யருக்கு) சுத்தமா அன்ஃபிட் (தகாது).

ஆத்மா :—இல்லே! இல்லே. பாருங்க இது ரொம்ப... இது ஒரு க்ளையண்ட் கொடுத்தது.

தைய :—ஐ ஸீ (அப்படியா)! காசு கொடுத்து வாங்காததா? சுலபமாப் போச்சு!

ஆத்மா :—நோ! நோ! (இல்லை இல்லை) தாட் இஸ் நாட் இட் (அது இல்லை). மணி வால்யூ (பண மதிப்பு) கூட அவ்வளவாயில்லே......பாருங்கோ! அவர் ரொம்ப சந்தோஷமா குடுத்தார்...அடிக்கடி வரும்போதுகூட

அதைப் பாத்துட்டு விசாரிச்சுட்டு சந்தோஷப்பட்டுட்டுப் போவார். ஈவன் டு டே (இன்னிக்கும்)....

வரதா :—நீங்க வரத்துக்கு முன்னே என்னே "எங்கே, ஐயா கையிலே கெடியாரத்தைக் கொஞ்ச நாளா காணுமே? கெட்டுக் கிட்டுப் போச்சா"ன்னு கேட்டார். "இல்லே, உள்ளே கயட்டி வச்சிருக்கார்"னு சொன்னேன்..... (பங்கஜத்தையும் தையல் நாயகியையும் பார்த்து) நீங்க வரும்போது இருந்தாரே அந்த செட்டியார் தான்...ஒரு நாள் யஜமானர் கையிலே அதைப் பார்க்காபோளு கண்ணுலே ஜலம்விட்டு அழுதுடுவார்!

ஆத்மா :—யூ ஸீ! பாருங்கோ, அதான் விஷயம்...... அவ்வளவு ஆசையா ஒத்தர் கொடுத்தத்தை எப்படி நான் கொடுக்கறது?...அதர்வைஸ் (இல்லா விட்டால்) எனக்கு ஒரு அப்ஜக்ஷன் (ஆக்ஷேபம்) கூட கிடையாது. ஐ டோண்ட் மைன்டு தி மணி வால்யூ (பெறுமானம் பற்றிச் சிந்தையில்லை). நல்லதுக்காகத்தான் நீங்களும் கேக்கறேள்.

[சுப்பைய்யா செட்டியார் மறுபடியும் வருகிறர்.]

சுப் :—மன்னிஞ்சவல! கொடுகு இக்கட பெட்டேசி மறசி போதினி. (குடையை ஒரு மூலையிலிருந்து எடுத்துக் கொண்டு) மஞ்சி வேள! தொருகின்தி...... கஷ்டபடின ஸொம்மு நேனு; வஸ்தானு.

தையல் :—ஐயா செட்டியாரே! ஒரு நிமிஷம்!

[ஆத்மாராமராவும் வரதாச்சாரியும் ஒருவரை யொருவர் பார்த்து விழிக்கிறர்கள்.]

சுப் :—ஏனம்மா? ஏமி அடுகவலா...அடுகுமி! அடுகுமி!

வரதா :—என்னய்யா இது! ஒம்முது மொதல் கேஸ் ஆச்சே, சீக்கிரம் போய் கோர்ட்டுக்கு வர வேண்டாமா?

சுப் :—ஏமண்டி! மறசிபோகிதிரே! நேடு எக்கடண்டி, நா கேசு...மங்களவாரம் காது?...அம்மா ஏமோ அடு

கேடப்புடு பதுலு செப்பகொண்ட. வெள்ளே தா... ஏமம்மா? எந்தகு பிலிஸ்திரி?

தையல் :—செட்டியாரே! ஒங்களே ஒரே வார்த்தை கேக்கப் போரேம்! எங்க மனஸுக்கு திருப்தியா உடனே பதில் சொல்லணும், தெரியுமா? ஆ . ஊ ...ன்னு இருக்கக்கூடாது...வழக்கப்படி.

சுப் :—அப்பே...அதேமியதி?

[ஆத்மா ராமராவ், வரதாச்சாரியை மறைவாகக் கண்டிக்கிறர்.]

தையல் :—செட்டியாரே! நாங்க காங்கிரஸ். தெரியுமோ இல்லேயோ?

சுப் :—அவனு? பாக தெலிசுனே.

பங்க :—நல்ல விஷயங்களுக்காகத் தான் நாங்க பாடு படுவோம்...அதுவும் தெரியுமோ இல்லேயோ?......

சுப் :—ராமானுஜ...மூடு ஸம்வத்ஸரங்கா நேனு வியாபாரமு நிலுபி யுன்னுனு.

தையல் :—ஒங்களெ ஒண்ணும் கொடுக்கச் சொல்லி கேழ்க்கலேயப்பா! எங்களுக்குத் தெரியாதா?

சுப் :—ராம! ராம! மீரு மஞ்சிவாள்ளாயிந்தே...மீகு தெலியதா?.....அவுனு, அவுனு! மீரந்த மஞ்சி மஞ்சி பனிலோ தா ப்ரவேசிஞ்சுரு... செட்டபனி சேயரே.

பங்க :—ஒங்க வக்கீல் கையிலே போட்டுண்டிருக்காரே அந்த கோல்ட் ரிஸ்ட்வாச்...அதே நீங்க......

தையல் :—அதெ அவர் காங்கிரசுக்குக் கொடுக்கிறது ஒங்களுக்கு ஆக்ஷேபணே யில்லேயே?

[வரதாச்சாரி, ஆத்மா ராம ராவ் மறைவாக நின்று கொண்டு பலவிதமாய்ச் செட்டியாருக்குச் சைகை செய்கிறர்கள். ஆனல், அவர் அதைக் கவனிக்காததுபோல் பாசாங்கு செய்கிறர்.]

சுப் :—ராம! ராம! வாரு இஸ்தே நாகேமி அப்யந்தம்?

பங்க :—ஒங்க மனஸுக்கு ஒன்னும் கஷ்டமிராதே?

சுப் :—இதேமி? வாரு சாமனு வாரு இஸ்தே நாகேமி கஷ்டமு?...நாகுனு ஸந்தோஷமே.

பங்க :—பேஷ்! பேஷ்! செட்டியார்,...நீங்கதான் சரியான பேட்ரியட் (தேசபக்தர்). ரொம்ப தாங்க்ஸ் (வந்தனம்) ...ரொம்ப தாங்க்ஸ் (வந்தனம்).

தையல்:—ரொம்ப சந்தோஷம்! நீங்க போய் வாருங்கோ... ஒங்களெ டிலே (தாமதம்) செய்ததுக்காக எக்ஸ்க்யூஸ் (மன்னிப்பு) பண்ணிடுங்கோ... அதெ அவர் கொடுக்கறது நீங்க கொடுத்தாப் போலெ...

சுப் :—அட்டலனு நிண்ட சந்தோஷமு அட்லனே பெட்டுகுண்டி...நாகு இப்புடு வியாபாரமு ஜரிகிதே நேனுகூட ஏமினே இச்சி உண்டனு.....நேனு ஒஸ்தானு...ஒஸ்தானுண்டி.

[எல்லோருக்கும் கும்பிடு போட்டு விட்டுச் செட்டியார் போகிறார்.]

தையல் :—இன்னமே யூ காண்ட் அப்ஜக்ட் (நீங்கள் ஆட்சேபிக்க முடியாது). வாட் எ ஃபையன் நோபில் ஜெண்டில் மேன் தாட் செட்டியார் இஸ் (அந்தச் செட்டியார் எவ்வளவு உதார புருஷர்)!

பங்க :—மிஸ்டர் ராவ், நீங்க சரியான ஸ்போர்ட்ஸ்மனு இருந்தா, இன்னமே அப்ஜக்ஷன் (ஆட்சேபம்) பண்ணுதே வாச்சைக் கழட்டி கொடுத்துடணும்....வேறெ ஒரு அப்ஜெக்ஷனும் இல்லேன்னு சொல்லி இருக்கேங்க.

ஆத்மா :—யூ ஸீ (நீங்க பாருங்கோ) அதுலெ...ஆஸ் எ மட்டர் ஆஃப் ஃபாக்ட் (உண்மையாகவே)...

இருவரும் :—நோ! நோ! நோ! நோ! (இல்லே, இல்லே, இல்லே, இல்லே) அதெல்லாம் ஒதவாது. வி வோண்டு அக்ஸெப்ட் எனி எக்ஸ்யூஸ் (எங்களுக்குச் சமாதானம் வேண்டாம்). மின்னே கழட்டிடுங்கோ. எங்கே? ஆகட்டும்! லேடீஸ் கிட்ட ப்ராமிஸ் பண்ணிட்டு மாறக் கூடாது.

[ஆத்மாராமராவ் அசடு வழிந்து கொண்டே கடிகாரத்தைக் கழற்றிக் கொடுக்கிறார்.]

தையல் :—(வாங்கிக் கொண்டு) ரொம்ப தாங்க்ஸ் (வந்தனம்)! ரொம்ப ரொம்ப தாங்க்ஸ் (வந்தனம்)! இன்னிக்கு நல்ல பிகினிங் (ஆரம்பம்)! ஒங்க கைராசி ஏப்படி இருக்கோ பாக்கலாம்.

பங்க :—குட்மார்னிங் மிஸ்டர் ராவ்! நீங்கதான் ரீயல் ஜெண்டில்மன் (உண்மையிலேயே பெரிய மனுஷ்யர்). ஒங்க ஒய்ஃப் (மனைவி) இருக்காளா?, வீ வுட் லைக் டு ஸீ ஹர் (அவளையும் நாங்கள் பார்க்கணும்).

ஆத்மா :—(அவசரமாய்) இல்லை. ஷி இஸ் டெடு......டயர்டு (அவள் ரொம்ப...இது) ஐ ஆம் வெரி ஸாரி (எனக்கு வருத்தமாயிருக்கு) குட்பை! குட்பை! (போய் வாருங்கோ.)

இருவரும் :—போய் வருகிறோம்! செட்டியாருக்கு ரொம்ப தாங்க்ஸ் (வந்தனம்)!

[போகின்றனர்.]

ஆத்மா :—டாம் இட்! டாம் இட்! டாம் இட்! (சே, சே, சே)

வரதா :—கிணறு வெட்டப் பூதம்......

ஆத்மா :—ஷட் அப் யூ ஃபூல்! இடியட்! ப்ரெயின்லெஸ் ஆஸ்! டாம் இட்! (வாயை மூடு முட்டாள். மண்டு. மூளையில்லாத கழுதை. சே, சே)! அந்தச் செட்டி குடுத்தான்னு யாரய்யா ஒன்னெ நடுவிலே பூந்து ஒளறச் சொன்னது? அந்த எழுவெ கொடுத்துங் கூட தாங்க்ஸ் (வந்தனம்) எல்லாம் செட்டியாருக்கு.

வரதா :—ஐ ஆம் வெரி ஸாரி! (எனக்கு ரொம்ப வருத்தமாயிருக்கு). நல்ல இன்டன்ஷன் (எண்ணம்) கொண்டுதான் சொன்னேன் நான்....அந்த மடையன் கொடையை வெச்சூட்டு போவன்னு நான் பாத்தேன்!

ஆத்மா :—ஐயா! டோண்ட் டாக் டு மி (பேச்சு வேண்டாமே!) சீ! சீ! சீ! சீ! வாட் ஆம் ஐ டுடு (நான் என்ன செய்யறது)? அந்த பாக்மல் ஸாவுகார் இப்ப வந்து கேப்பானே, அவனுக்கு என்ன சொல்றது? நேத்து

ராத்திரி அந்த குலாப்ஜான் தாஸ் வீட்டுக் கலியாணத்துக்குப் போரத்துக்கு அவன் கிட்ட எரவல் வாங்கின வாட்ச் ஆச்சே. அது எங்கேயான 150 ரூபா இருக்குமே. காலங்கார்த்தாலே எழுந்ததும் எழவும் பேரெழவுமாத்தானே வரது.

**வரதா** :—நல்ல வேளே, செட்டியார் குடுத்த ஃபீஸை மேஜை மேலே வெக்காதே பாக்கட்டிலே போட்டுண்டுட்டேளே.

**ஆத்மா** :—டோன் டாக் நான்ஸென்ஸ் (வெறுமனே உளருதே), அந்த ஃபீஸ் போனல் சனி விட்டது! மஹா ஃபீஸ்! காலே அரைக்கால் ரூபா. டை தி வே லுக் ஹியர் வரதாச்சாரி! யூ ஆர் ஆன் ஆஸ்—(அது இருக்கட்டும், வரதாச்சாரி! இங்கே பார். நீ ஒரு கழுதை). எனக்கு இந்த சுண்டக்காய் கேஸ்கள் எடுக்கறதும், இந்தமாதிரி அரையே அரைக்கால் ஃபீஸ் வாங்கரதும் சுத்தமா பிடிக்கவேயில்லே. அதெச் சொல்ல வாயெடுத்தா நீ பெரிய லெக்சர் (பிரசங்கம்) ஆரம்பிச்சுடறே...லாயரா இருக்கிறவன், தன்னேத் தானே கொறச்சு மதிச்சிண்டா லோகம் எப்படி அதிகமா மதிக்கும்? தர்மத்துக்குப் பேசர லாயரை ஊர்லே என்னுன்னு கூப்பிடுவா தெரியுமா—தண்ணீர்ப் பந்தல் லாயர்ன்னு.........இது ஒனக்குத் தானுகவும் தெரியலே, சொன்னுலும் தெரியலே.

**வரதா** :—படிப்படியா ஓடினுத்தான் பல்லு ஒடையாதுன்னு சொல்றது. ஒரே குதியா குதிக்கப் பாத்தா குட்டிக்கரணம் போட்டுக் குப்பற விழ வேண்டியது தான்...ரக்கை மொளேக்கிறதுக்கு மின்னே சூரியனேப் பிடிக்கப் பார்த்தானே ஸம்பாதி அவன் கதிதான் அப்பரம்.

**ஆத்மா** :—அடே...டே...டே...டே ஓடு. அந்த ஜன்னல் வழியா சீக்கிரம் பாத்து, வரவன் பாக்மல் சவுகாரா, சொல்லு...

**வரதா** :—ஆமாம், அவன்தான்.

**ஆத்மா** :—(உள்ளே ஓடிக்கொண்டே) ஏதாவது போக்கு சொல்லி அனுப்பிச்சுடு...நானில்லேன்னு, பூட்டேன்னு, சொல்லித்தொலே.

[உள்ளே போகிறர்.]

**வரதா** :—ஹூம்...இன்னும் எத்தனே நாளைக்கு!...அடே, கிரஹசாரமே. (பாக்மல் சவுகார் வருகிறன். அவனேப் பார்க்காதவர்போல்) எழுவெடுத்த தந்தி ப்யூனேப் பார்க்கச்சேயே நெனச்சேன்........காலங்காத்தாலே மொதல் ட்ரெயின்லேயே ..அடேடே! ஸாவ்கார் வாள்! வாங்கோ. என்ன சமாசாரம்?

**பாக்** :—(தலையை அசைத்துக்கொண்டே) வொக்கீல் ஐயா எங்கே?

**வரதா** :—ஏன்? இங்கேயில்லேயே...

**பாக்** :—இங்கே, இந்த ரூம்லே...நம்பளுக்குகூட தெரியும் ஊட்லே இல்லே.

**வரதா** :—இல்லியே...மதராஸ்லேயே இல்லியே.

**பாக்**:—நம்ப நேத்தி ராவ்கி பாத்தாம் ..நம்ப வரக்கள்ளோ உள்ளே ஓடிப்போனுங்க, யாரது?

**வரதா** :—திடீருன்னு தந்தி வந்து காலமேதான் போனுர். எதானு அர்ஜண்ட் வொர்க் இருக்கா?

**பாக்** :—ஆமா......ஸ்மால் காஸ் கோர்ட்மேலே கேஸ் இருக்கா. அவனுக்கு கொடுத்துப் போவலாம்னு நாம்ப நெனச்சோம். பீஸ்கி ஜமாவானு வெச்சு கடன் பாக்கி தீக்கலாம். கெடியாரம் கீ குடுத்தா போனு?

**வரதா** :—ஒரு வேளே 10 மணிக்கு வந்துடலாம்.

**பாக்** :—அரே! எப்படி சாமி வரான்...எந்த ஊர்கீ போனுன். கோர்ட் வேலே மேலே போனு இல்லேனு நெனக்கிறேன்.

**வரதா** :—கோர்ட் ஸம்பந்தம்தான்... அடே, ஒருவேளே அது வாய்தா ஆகலாம்...

**பாக்** :—அடே, அந்த எயவெல்லாம் நமக்கென்னுத்துக்கு? நம்ம பலே வக்கீல் ஈக்கிரான். அவன் கிட்டெ கொடுக்

கிறுன். இப்படீல்லாம் ஊரைவுட்டுட்டுத் திடீல்னு போரான் யில்லே...கெடியாரம் கீ குடுத்து போணு?

வரதா :—எனக்கு ரொம்ப வருத்தமா யிருக்கு.

ப்ராக் :—அடே, நீ என்ன பண்ணுவே? நாம்ப என்ன பண்ணுவான்? கெடியாரம் கீ...?

வரதா :—வாஸ்தவம்தான்.

பாக் :—இது நல்லாயில்லே...நீ பாத்துக்கோ. வொக்கீல்கி அதலாம் சொல்லு. அவன்கீ மதராஸ் உட்டு இப்படி போரான் நல்லாயிருக்கானில்லே. அவன்கீ ரொம்ப கஷ்டம் வருவான் சொல்லு...கெடியாரம்கீ குடுத்துப் போணு?

வரதா :--இல்லே. கைலே போட்டுண்டு போனுர். ரயிலுக்கு அவசரமா போனுரோல்லியோ? மணி தெரிய வேண்டாமா...?

பாக் :—என்ன அவஷரம்? நம்ப கெடியாரம் இன்னிக்கி குடுக்குரான் சொன்ணு...ஊராமூட்டு கெடியாரம்... 500 ரூபாக்கி நம்பகிட்டே வேறெ ஆள் வச்சிருக்கான். நம்ப ராவ்கி வரோம். கெடியாரம் பணம் அல்லாம் தையாராயிருக்கணும்...தெரியும்?

வரதா :—சரிதான்.

பாக் :—நம்ப பொறேம்...ஊம்...

[சுற்றிச் சுற்றிச் சந்தேகத்துடன் பார்த்தவாறே போகிறன்.]

வரதா :—எமப்பசங்கையா இந்த மார்வாடிப் பசங்க...! இல்லாததையா பணத்தே குட்டிபோட வைக்கிறுங்க?

[சுற்றிச் சுற்றி நோக்கியவாறு ஆத்மா ராமாராவ் வருகிறர்.]

ஆத்மா :—போனுனு?

வரதா :—ஆஹ! ஆனு ஒரு கேஸ் கொடுக்க வந்தான்.

ஆத்மா :—கேஸா! சுத்தப் பொய். நானு நம்புவேன்? திருட்டுப் பசங்கள்!

வரதா :—கையிலே ஏதோ காயிதங்கள் கூட இருந்தது.

ஆத்மா :—புரோநோட்டும் பாண்டுமா இருக்கும்!

வரதா :—முகத்திலேர்ந்து வாஸ்தவமாகத்தான் பட்டுது.

ஆத்மா :—என்னது? இந்தப் பூனையும் பாலைக்குடிக்கு மான்னுட்டா?

வரதா :—ஏன்? நேரா உள்ளத்தை சொல்லிக் கொஞ்சம் பொறுத்துக்கோடான்னு சொல்லக்கூடாதா?

ஆத்மா :—அந்த ஸ்திதி எல்லாம் தாண்டி ரொம்ப நாளாச்சு.

வரதா :—அவன் சந்தேகப்பட ஆரம்பிச்சா?

ஆத்மா :—ரொம்ப புத்திசாலி..... இப்போ படாதது போல. ஆனா என்ன பிரயோஜனம்? நான் என்ன பண்றது. ஒன்னாலே ஒரு உபயோகமும் இல்லை. அங்கங்கே வக்கீல் க்ளார்க் எல்லாம் தங்க மாஸ்டருக்கு ஏகபட்ட கேஸ் கொண்டு கொடுக்கரா. அவாள்ளாரும் கஷ்டப்படரா; அலையரா; ஓடி ஆட்ரா; ரயில்வே ஸ்டேஷனுக்குப் போரா. டிராம் டெர்மினஸுக்குப் போரா; செட்டி கடைக்கும் சேட்டு கடைக்கும் போய்ப் பழியாக் கடக்கரா... ஒனக்கு அதெல்லாம் எங்கெ? தலையிலேருந்து கால் வரைக்கும் சோம்பல்; இல்லாப்போனா ரயில்வே ஆபீஸ்லே அவ்வளவு வருஷம் உழைச்சூட்டு டிஸ்மிஸ் ஆவையா?

வரதா :—ஸார்! நீங்க கோச்சுகாதிங்க. ஒங்க மனஸு திருப்தி இல்லாட்டா எனக்கு என்ன வேலை இங்கே? ப்லீஸ் அக்ஸப்ட் மை ரேஸிக்னேஷன் அண்டு ரிலீவ் மி (இந்தாங்கோ ராஜிநாமா. என்னை விட்டுவிடுங்கோ) நான் போக இதோ தயார். என் அரியர்ஸ் ஆஃப் ஸாலரி (சம்பள பாக்கி) எல்லாம் குடுத்துடுங்கோ. ஒங்குளுக்கென்ன? க்ளார்க் எவ்வளவோ பேர் ஆப்புடுவா.

ஆத்மா :—சீ! சீ! வரதாச்சாரி, என்ன ஃபூல்ஆ (முட்டாள்) இருக்கயே! யூ மிஸ்ஸண்டர்ஸ்டாண்டு மி (தப்பர்த்தம்

பண்ரையே) மனஸுலே அதிருப்தி தட்டாப்போனு ஒத்தனை எப்படி இம்ப்ரூவ் (சரி) பண்ணிக்கிறது.

வரதா :—அது சரிதான். அது அவாவா மனஸுலேன்னு தட்டணும். நான் இம்ப்ரூவ் (சரி) பண்ணிக் காததுக்காக நீங்க ஏன் அதிருப்தி அடையணும்?

ஆத்மா :—சரி, சரி. அதோ யாரோ வரு பாரு.

வரதா :—(பார்த்துக்கொண்டே) யாரோ புது ஆசாமி. வக்கீல் வீடுகளுக்கு அடிக்கடி போகச்சே பார்த்திருக்கேன். பேர் தெரியாது.

[ஜகன்மோகன் நாயுடு வருகிறார்.]

ஜக :—குட் மார்னிங்! ஹவ் ஆர் யூ (எப்படி இருக்கிறீங்க)? வாட் (என்ன)? தெரியலே?

[நாற்காலியை இழுத்துக் கொண்டே உட்காருகிறார்.]

ஆத்மா :—அஃப்கோர்ஸ்! ஆம்! வொய் நாட்...(தெரியாதென்ன)? ஹி! ஹி!! எங்கேருந்து இப்போ?...

ஜக :—ஸ்டேஷன்லேருந்து நேரா...டிரெயின் அரை மணி முன்னெதான் வந்தது......இல்லை, நீங்க என்னை மறந்துட்டீங்க. சொன்னு தெரியும். பொய்யூர் ஜமீன் தார் ஏஜண்ட் இல்லையா நான்? நீங்க அங்கே டிஸ்டிரிக்ட் முன்ஸீபா இருக்கச்சே டிஸ்ரிக்ட் ஜட்ஜ் சர்வோத்தமராவ் கோர்ட்டிலே அந்த பெரிய அடாப்ஷன் கேஸ் (ஸ்விகார வழக்கு) நான் நடத்திண்டு இருந்தேனே.

ஆத்மா :—ஆமாமாம்: அதான் ரிமெம்பர் (ஞாபகம்) பண்ண ட்ரை (முயற்சி) பண்ணிண்டிருந்தேன். அந்த கேஸ் ஃபினிஷ் (முடிவு) ஆச்சா இல்லையா இன்னும்?

ஜக :—ஆச்சு! ஆச்சு! கடைசி வரைக்கும் அனுகூலமாய் இருந்தார் ஜட்ஜ்...ஜெட்ஜ்மெண்ட் ரிஸர்வ் (தீர்ப்பு ரிஸர்வ்) பண்ணிட்டுப் போய் அடுத்த நாளே 1500 பக்கம் டைப் அடிச்சு ஜெட்ஜ்மெண்ட் (தீர்ப்பு) படிச்சாரு. 6-மாசம் நடந்த கேஸு. 112 விட்னெஸ் எவிடென்ஸ்...(சாக்ஷி வாக்கு மூலம்) பிக் பிக் லீடேர்ஸ்

ஃப்ராம் மட்ராஸ் ஆர்துயூடு ஃபார் த்ரீ வீக்ஸ் (சென்னையி லிருந்து பெரிய பெரியவர் வந்து 3 வாரம் பேசி ஞர்கள்)! அதென்னுங்க! எப்படி பாஸிபில் (முடியும்)? போவட்டும்...அப்பீல் கோர்ட் இருக்குது...அதெப் பத்தி ஒரு கதைகூட உண்டு. அதை இப்பவாணும். அப்பரம் சொல்றேன். நேத்து இராவுக்குத் தான் நானும் ஜமீந்தாரும் பேசிக்கிட்டு இருக்கக் கொள்ள, நம்ப ஓல்ட் (பழைய) நாஜிர் சுந்தரபரிபூர்ணம் பிள்ளை சொல்லிச்சி. நீங்க மதராஸ்லே ப்ராக்டிஸ் பண்ணிக் கிட்டுருக்கிறீங்கோன்னு. அட்ரஸ் குடுடா பாவீன்னு, அப்பவே எழுதி வாங்கிக்கினு அடிச்சுக் கட்டிக்கினு அவசரம் அவசரமா ஓடிவந்து ஜங்ஷன்லே டிரெயி னைப் பிடிச்சேன். அப்பீலுக்கு ஓங்களைத்தான் எங்கேஜ் பண்ணனும்னு ஜமீந்தார் சொல்லீட்டாரு. அதுவும் நீங்க அங்கே இருக்கச்சே அந்த ஊர் வக்கில் களெல்லாம் கதறவடிச்சீங்களே. மறக்குமா எங்க ளுக்கு? ஒரு வேளை எதிர்க் கட்சிக்காரர் வந்து ரிட்டேயினர் (முன் பணம்) கொடுத்தூடு வாங்க ளோன்னு பயந்தார் ஜமீந்தாரு...நல்ல வேளையா.....

ஆத்மா :—வரதாச்சாரி, டைரியைப் பாரு...யாரஞ நமக்கு ரிட்டேயினர் (முன் பணம்) அனுப்பிச்சிருக்காளான்னு.

வரதா :—(பார்ப்பதுபோல் செய்து) ஆமாம். நேத்து சாயங்காலம்தான் ரிஜிஸ்டர்ட் போஸ்ட்லே 5000 ரூபா நோட்டா வந்து இருக்குது! நாம் இன்னும் அக்ஸெப்ட் (சம்மதம்) பண்ணிக்கலே.

ஜக :—அதைத் திருப்பி அனுப்பிச் சூடுங்க. நான் இதோ வோயர் (தந்தி) அனுப்பி விடரேன்...10,000 ரிட்டேயினர் (முன் பணம்) கொடுக்கணும்னு. பை தி வே (அதிருக்கட்டும்) ஒரு ஆக்ஸிடேண்ட் (விபத்து) ஆப் போச்சி. டிரெயின்லேந்து எறங்கி வந்தேனு... ஒரு டாக்ஸி வெச்சுண்டு நேரே இங்கே ஓட்டச் சொன்னேன். வழியிலே மாடர்ன் ஹோட்டல்லே ஒரு நிமிஷம் எறங்கி பல் வெளிக்கிக்கிண்டு சோட்டா சாப்ட்டுட்டு வந்து பாத்தா டாக்ஸி காணேம். கேஸ்

பேப்பர்ஸ் (கேஸ் கட்டுகள்) காஷ் பாக்ஸ் (பணப் பெட்டி) வண்டியிலேயே இருக்குது. சாப்ட்ட டிப னுக்குக் கொடுக்ககூட சில்லரை இல்லே

ஆத்மா :—பெட்டிலே ரொம்ப மணி (பணம்) இருந்துதோ?

ஜக :—ஓ நோ (இல்லே). நாட் வெரி மச் (ரொம்ப ஜாஸ்தி யில்லே). இன்னிக்கெல்லாம் இருந்தா ஒரு தௌஸண்டு சிப்ஸ் (ஆயிரம் ரூபா) இருக்கும். ஐ டோண்டு மைண்டு தி மணி (எனக்கு பணத்தைப்பற்றி அக்கரையில்லே). போனு போவுது...பேப்பர்ஸ் (கட்டுகள்) பத்திதான் ஐ ஆம் ஒரீ டு (எனக்கு விசாரம்)!

ஆத்மா :—டிரைவர் நிச்சயமா ஆப்பிடுவான், கார் நம்பர் என்ன தெரியுமா?

ஜக :—அது தெரிந்தா என்ன கஷ்டம்?

ஆத்மா :-தென் வாட் டு டு (அப்புறம் என்ன பண்ணரது)?

ஜக :—மணி (பணம்) பத்தி ட்ரபில் (உபத்திரவம்) இல்லே. ஒரு வொயர் (தந்தி) கொடுத்தா ஜமீந்தார் கிட்டேந்து எவ்வளவோன்னு வந்தூடும். இன்னொரு செட்டு பேப்பேர்ஸ் (கட்டு) வரத்துக்கு ஏற்பாடு பண்ணணுமே. அதான் கஷ்டம்.

ஆத்மா :—அது பெரிய டிஃபிகல்டி (கஷ்டம்) ஆச்சே.

ஜக :—சரி. இதோ ஒடனே பணத்துக்கு வொயர் (தந்தி) சேஞ்சுடரேன். போலீஸ் ஹெல்ப்பிலே (போலீஸ் உதவி) பேப்பர்ஸ் (கட்டுக்கள்) இரண்டு நாளைக் குள்ளே ஆம்படாமல் போரதா! ஆனு பேப்பர்ஸ் (கட்டு) விஷயமா தந்தி அடிக்கறதுலே எனக்கு இஷ்ட மில்லே. ஜமீந்தார் காப்ரா ஆய்ப்பூடுவார். வேணும்னு நானே நேரா போய் ஒரு வாரத்துலே கம்ப்லீட் ஸெட் (புதுக்கட்டுகள் பூராவும்) புதுசா கொணுந்துடலாம்.

ஆத்மா :—அதுக்கு டைம் (அவகாசம்) இருக்குதா?

ஜக :—வேண்டிய டைம் (அவகாசம்). ஜட்ஜ்மெண்டு காபி (தீர்ப்புப்பிரதி) வந்து 2 நாள் தானே ஆச்சு!

ஆத்மா :—என்ன டேயரிங் (தைர்யம்)! ஸார் ரொம்ப டேயரிங் (துணிச்சல்)! அந்த டிரைவராவது அடை யாளம் தெரியுமா ?...

ஜக :—சொல்லரத்துக்கில்லே. ஆனா, ஒடனே போலீஸுக்கு கம்ப்ளேண்ட் பண்ணி வைச்சூடணும்.

ஆத்மா :—ஆமாம். இது உடனே செய்துடணும்.

ஜக :—மறுபடியும் ராத்திரி வந்து பார்க்கறேன் ஒங்களே. எப்ப வருவீங்க? ஒன்பதுக்கா? சரி. (திரும்பிவந்து) பை தி பை (ஒரு விஷயம்) அட எழவே, மறந்தூட் டேனே......ஒரு பத்து ரூபா இருந்தா கொடுங்கோ... டேலக்ராம் (தந்தி) அடிக்கக் கூட மணி (பணம்) இல்லே...கையிலே காலணு காசுகூட இல்லாமே திண் டாட்டமா போச்சுபாருங்க! ஹி! ஹி!! ஹி!!!

ஆத்மா :—ஆடே டே. ஹொவ் அன்ஃபார்சுனேட் (என்ன துரதிருஷ்டம்)! என் கையிலே இந்தச் சமயத்திலே லூஸ் சேஞ்ச் (சில்லரை), கொஞ்சம்கூட இல்லேயே! நான் சாதாரணமாக எல்லாத்துக்கும் செக்கு கொடுக்கறது வழக்கம். செக்கு வேணும்னு கொடுக் கறேன்.

ஜக :—செக்கா? ஆ...அது ஏக டிலே (தாமதம்) ஆகும் ஸார். எனக்கு அந்த பாதர் (தொந்தரவு) வாணும். வீட்டில் ஏதாவது 4, 5, ரூபாயாவது இருக்கும், பாருங்கோ!

ஆத்மா :—(மேஜையைத் திறந்து தடவி, அங்குமிங்கும் தேடுவது போல் பாசாங்கு செய்து, கடைசியில் ஜோபியிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்து) இருக்கறதெல்லாம் இந்த இரண்டு ரூபாய்தான்...இது எந்த மூலேக்கு ஒங்களுக்கு.....,

ஜக .—வாட் எ பிட்டி (என்ன கஷ்டம்)? (ரூபாயை அவர் கையிலிருந்து பிடுங்கிக்கொண்டு)...ஸரி...ஸரி...இதிலே பாதியை ஏவிஞ ஒரு மணிக்குள் 1000 ரூபா கொண்டு வந்துடாதா?...நானும் வரேன்...நைட் (ராத்திரி) வந்து பார்க்கரேன். குட் பை (போய் வரேன்)!

[போகிறன்.]

ஆத்மா :—ஓங்க ஜாகை எங்கே?.......இங்கயே சாப்பாட்டுக்கு வாங்களேன்...ஓங்களோடு போலீஸ் ஸ்டேஷனுக்கு க்ளார்க்கை வாணு அனுப்பட்டுமா?... என்ன அவசரக்காரர்? பறக்கருரே...!

வரதா :—காலங்கார்த்தாலே 1000 ரூபாயைப் பறி கொடுத்தவன் பறக்காதெ ஊருவாணு?

ஆத்மா :—இவரெ எங்கேயோ பாத்தமாதிரி இருக்கே!...

வரதா :—ஆணு ஆள் தெரியாதையா இத்தனைநாழி பேசினீர்? ஆணு, சேலம் ஜில்லா பேர்வழியா எனக்குத் தோனலே?

ஆத்மா :—இந்த ஃபெலோவை (ஆசாமியை) எங்கெ வேணு மாளுலும் பார்க்கலாம்.

வரதா :—சொல்ல மறந்து பூட்டேனே...நேத்து சாயங் காலம் திவான்பஹதூர் கணபதி அய்யர் வீட்டிலேந்து உங்களைக் கூப்பிட ஆள் வந்தான். டான்ஜஓர் மர்டர் கேஸ் அப்பீல் (தஞ்சாவூர் கொலை வழக்கில் அப்பீல்) பண்றதுக்கு உங்களை ஐயர் வரச்சொன்னுர். நீங்க ளப்லேந்து வரலே. நான் போய்ச் சொன்னதும் ரொம்ப கோவமா பேசினுர். ஏகத்தாரா. வாய்க்கு வந்த மாதிரியெல்லாம் வார்த்தையே விட்டுட்டார்...

ஆத்மா :—வாட் டிட் ஹி ஸே (என்ன சொன்னுர் அவர்)? என்ன ஸார்...சொல்லுங்கோ.

வரதா :—ரொம்ப விகாரமான வார்த்தை யெல்லாம் வந்துடுத்து. ஜுனியர்கள் அஜாக்ரதை. மரியாதை தெரியறதில்லே, பணத்துக்கு மட்டும் ஆசை. வேலை தெரியாது; அப்படி இப்படி...

ஆத்மா :—ஆஹா! அப்படியா?......அந்தக் கிழவருக்கு அவ்வளவு இறுமாப்பா? இருக்கட்டும். காண்பிக் கிறேன் ஒரு நாளைக்கு. இவரை காக்காய் பிடிச்சுண்டு இவரண்டை தொங்கறத்துக்கு நான் என்ன இவர் பிள்ளையா? மாப்பிள்ளையா? அல்லது சம்பளக்காரனு? இல்லே, இல்லே, இவர் மாத்திர மில்லே, எல்லா ஸீனியரும் அப்படித்தான்...வர

பீஸெல்லாம் வாங்கி பை நிறைய போட்டுண்டு வேலையெ எல்லாம் ஜூனியர் மேலே போடறது...... இந்த நான்ஸென்ஸ் (அபத்தம்) எல்லாம் என்னண்டை முடியாது. ஒரு நாள் இல்லாப்போனு ஒருநாள் ஒரே உதை ஒதச்சு எல்லாத்தையும் ஒழிச்சுத் தொலைச்சுடரேன் பாத்துக்கோ.

வரதா :—சரிதான்...அப்பீல்லே க்லயன்ட் (கக்ஷிக்காரன்) கதி என்னுவாரது? அவன் கம்ப்லெயிண்ட் (புகார்) பண்ணினு ?

ஆத்மா :—அவன் கிடக்கிருன்! ஹிபி ஹாங்க்டு (அவன் தொங்கித் தொலையட்டும்)!

வரதா :—அதுக்குச் சந்தேகமில்லே......அதுவும் இங்கே வந்தா வேறென்ன கிடைக்கப்போறது அவனுக்கு?...

[மெள்ளக் குஞ்சிதபாதம் ஐயர் வருகிறர்.]

குஞ் :—ஸார்! நீங்கதானே ஆத்மாராம ராவ் ?

ஆத்மா :—ஆமாம்? நான்தான். என்ன விசேஷம்?

குஞ்:—கொஞ்சம் ப்ரைவேட் பிஸினெஸ் (ரகஸ்ய ஜோலி) ஆ வந்திருக்கேன்.

ஆத்மா :—அப்படி ரொம்ப அர்ஜெண்ட் (அவசரம்) ஆனு இப்பவே வந்துட்டேன்...கொஞ்சம் பொறுக்கலாம்னு இதோ என் கிளார்க்கோடே கொஞ்சம் சில்லரை பிஸினெஸ் ஃபினிஷ் (வேலையை முடிவு) பண்ணிண்டு வந்துடரேன்! என்ன ?

குஞ் :—மெதுவா ஆகட்டும்! டோண்ட் ஹரி ஆன் மை அக்கவுண்ட் (எனக்காக அவசரம் வேண்டாம்). நான் வெயிட் பண்ணறேன். இன்னிக்கி இதான் கடைசி ஹவுஸ் (வீடு) நான் போகப்போரது.

ஆத்மா:—தாங்க்யூ (ரொம்ப வந்தனம்)! இதோ ஆய்ப் போச்சு. அந்த பண்டிலே (கட்டு) இந்த டீபாய் மேலே வெச்சுடுங்கோ.

குஞ் :—பாதகமில்லே! எங்கிட்டவே இருக்கட்டும். இது ஒரு பளுவா ?...மோரோவர் தே ஆர் கான்ஃபிடன்ஷியல் பேப்பேர்ஸ் (தவிரவும் அவை ரகஸ்யக் கட்டுக்கள்).

ஆத்மா :—வேரிகுட் (ரொம்ப நல்லது). லுக் ஹியர் க்லர்க்! (க்ளார்க், இங்கே பார்!) ஜல்தி! அவர் வெயிட் பண்ராரே தெரியலே!

வரதா :—எஸ் ஸர் (ஆமாம், ஸார்); இதோ வந்தேன்.

ஆத்மா :—ஷார்ட்-ஹாண்டு-க்லார்க் (ஷார்ட் ஹாண்ட் குமாஸ்தா) எங்கே ஸார்? அவன் ஏன் இன்னம் வரலே?

வரதா :—தெரியலையே......அடே நாதமுனி! அந்த பெஃலோவும் (பயல்) லீவில் போயிருக்கான். இப்ப வந்துடுவானென்னு நெனைக்கிறேன்.

ஆத்மா :—நான்ஸென்ஸ் (அபத்தம்). அதுவரைக்கும் என்னாலே வெயிட் பண்ணமுடியுமா? சரி, சரி. நீதான் எழுதிக்கணும் கூடியவரைக்கும்.......எங்கே?...... ஆகட்டும்! லுக் ஷார்ப் (சீக்கிரம் நடக்கட்டும்).

வரதா :—(கையில் நோட் புஸ்தகமும் பென்ஸிலும் எடுத்து) ரெடி ஸார்!

ஆத்மா :—அதிருக்கட்டும்! அந்த நகரி ஜமீன்தார் கிட்டேந்து ரிப்லே டெலக்ராம் (பதில் தந்தி) வந்துதா?

வரதா :—இன்னும் ஒண்ணும் காணோம்.

ஆத்மா :—ஆனா இந்த வோயர் (தந்தி) இப்பவே எக்ஸ்பிரஸ் —எக்ஸ்பிரஸ்லே அனுப்பு: டேக் டவுன் (எழுதிக்கோ)! அதர் ஸைடு ப்ரஸ்ஸிங் ஆஃபரிங் ரிட்டெயினர் 5000. இஃப் யுவர் ரிட்டெயினர் நாட் ரிஸீவ்டு பிஃபோர் ஸிக்ஸ், வில் அக்ஸெப்ட் எங்கேஜ்மெண்டு ஆப்போஸிட் ஸைட். வோயர் இம்மிடியேட்லி. (எதிர்க்கக்ஷியார் தொந்தரவு செய்கிறார்கள். முன் பணம் 5000 ரூபா. உங்கள் முன் பணம் 6-மணிக்குள் வராவிட்டால் எதிர்க்கக்ஷிக்கு ஒப்புக்கொள்வேன்: உடனே தந்தி) ஆச்சா! அந்த ஃபெலோ (பயல்)க்கு புரியுமோல்லியோ இது?

வரதா :—இதிலென்ன கஷ்டம்? எதிர் ஸைடிலே 5000 ரூபாய் ரிட்டெயினர் (முன் பணம்) கொடுக்கறேங்கரா. ஒங்க தொகையே உடனே தந்தி மூலம் அனுப்பாப்

போனு எதிர் ஸைடுக்கு அப்பியர் (ஆஜர்) ஆவோம்னு அடிக்கிறேம் !

ஆத்மா :—ஒனக்கே புரிஞ்சு போச்சே. இன்னமே பய மில்லே. ஹா ஹா ஹா; மேலே எழுது.

வரதா :—ரேடி ஸார் (தயார் ஸார் !)

ஆத்மா :—அதிருக்கட்டும்! அந்த போடிநாய்க்கனூர் ஜமீந்தாரி பார்ட்டிஷன் மாட்டர்லே (போடிநாயகனூர் ஜெமீன் தாரி பாக விஷயத்தில்) நான் ஓபினியன் (அபிப் பிராயம்) கொடுத்தேனே ; அதை அனுப்பிட்டியா என்ன ?

வரதா :—இல்லே. இப்பதான் ஃபேர் டைப் (நன்னு டைப்) ஆச்சு.

ஆத்மா :—நான் சொல்ற வரைக்கும் அனுப்பாதே. அந்த ஃபெலோஸ் (பயல்கள்) ஏதோ ஃபீஸ் (பீஸ்) விஷ யத்திலே தகரார் பண்ணுவா போலிருக்கு !

வரதா :—ஆல் ரைட் ஸார் (சரிதான், ஸார்).

ஆத்மா :—நோட் (குறிப்பு) பண்ணிக்கோ, அதர் வைஸ் யூ வில் ஃபர்கெட் (இல்லாவிட்டால் நீ மறந்துடுவே) !

வரதா ;—இதோ நோட் (குறிப்பு) பண்ணிண்டுட்டேன்.

ஆத்மா :—காஸ் லிஸ்ட் (வழக்கு ஜாபிதா) வந்தூட்டுதா ?

வரதா :—ஆஹா......

ஆத்மா :—வேங்கடகிரி அப்பீல் (வெங்கடகிரி அப்பீல்) போட்டிருக்கா இன்னிக்கி ?

வரதா :—இல்லே ; இந்த வாரமே போடமாட்டான்னு தோன்றது.

ஆத்மா :—நாம் யாருக்கு ? ரெஸ்பாண்டெண்ட் (பிரதிவாதி) க்கு தானே அப்பியர் (ஆஜர்) ஆரோம்...? ஸரி...என்ன ஸார், அவன் ஃபீஸ் பாலென்ஸ் (பீஸ் பாக்கி) குடுத் துட்டானு ?

வரதா :—இல்லே.

ஆத்மா :—என்ன இல்லே? ஹௌ மச் இஸ் இட் ஸர்? (அது எவ்வளவு ஸார்?) 2,500 என்னமோ இல்லே? ஒங்களுக்கு எப்பவும் கேயர்லெஸ்நெஸ் (அஜாக்ரதை) தானே, எத்தனே தரம் சொல்றது ஒங்களுக்கு? சே, சே, சே, சே!

வரதா :—ஃபீஸ் பத்தி பயமில்லே.

ஆத்மா :—ஐ டோண்ட்கேயர் (எனக்கு லக்ஷ்யமில்லே): பயமென்னு ஸார் பயம்? நான்ஸென்ஸ் (அபத்தம்)! அது எவனுயிருந்தா எனக்கு என்ன ஸார்? எந்த மஹாராஜாவா இருந்தாலும் ஃபுல் ஃபீஸ் (முழுப் பீஸ்) கைக்கு வந்து சேராப்போனு நான் அப்பியர் (ஆஜர்) ஆகமாட்டேன். ஒரே நூல் (விதி) தெரியுமா? ஸெண்டு வோயர் அட் ஒன்ஸ்...(உடனே தந்தி அனுப்பு). அப்பீல் ஹீரிங் ஸேர்ட்டன் நெக்ஸ்ட் வீக், பாலென்ஸ் ஃபீஸ் நாட் ரிஸீவ்டு. வில் நாட் அப்பியர் அன்லெஸ் ஹோல் பாலென்ஸ் பெய்டு ஃபோர்த்வித். வோயர் ரிப்லே (அப்பீல் அடுத்த வாரம் வருவது நிச்சயம். பாக்கி பீஸ் வரவில்லே. உடனே பாக்கி வந்தால்தான் ஆஜர் ஆவேன். பதில் தந்தி யனுப்பவும்).

வரதா :—ஃபினிஷ்ட் ஸார் (முடிஞ்சு போச்சு, ஸார்)!

ஆத்மா :—எந்த பெஞ்ச்லே வரும் அது?

வரதா :—ஜஸ்டிஸ் க்ரீனே, ஜஸ்டிஸ் வளவளா அய்யர்.

ஆத்மா :—வெரி குட் (ரொம்ப நல்லது). நல்ல சரியான பெஞ்ச் (ஜட்ஜ்கள்). எதிர் ஸைட்லே ஏதாவது ட்ரிக் (சூழ்ச்சி) பண்ணி மாத்திடப் போரா... போஸ்டிங் க்லர்க்கைப் (போஸ்டிங் க்ளார்க்) பாத்துச் சரிப்படுத்திக்கோ, தெரியுமா?

வரதா :—ஸேர்டென்லி (நிச்சயமா)! அதுக்கென்ன?

ஆத்மா :—அடேடேடே! தாங்க் காடு! ஐ ஜஸ்ட் நௌ ரிமெம்பேர்டு (அடாடா, நல்ல வேளையாய் இப்போ தான் ஞாபகம் வந்தது)! (டெலிபோனில்) ஹல்லோ, ஹல்லோ! யாரது? ஜஸ்டிஸ் குண்டுராவ் வீடா?... யாரது பேசரது?... ஓ! ஐ ஸீ! ...தட் மார்னிங் (ஓ,

அப்படியா ? குட்மார்னிங்)! ஆமாம் ... ஆத்மாராம் தான்...என்ன ? ஆமாம் ... ஐ ஹாடு டு கோ டு தி கவர்ன்மெண்டு ஹவுஸ் (நான் கவர்ன்மெண்ட் ஹவுஸுக்குப் போகவேண்டி யிருந்தது). அதான், அந்த ட்ராவென்கூர் ரப்பர் எஸ்டேட்ஸ் ஓனர்ஸ் ஹாவ் ஆல் எங்கேஜ்டு மீ டு இண்டர்வ்யூ தி கவர்னர்... (அந்தத் திருவாங்கூர் ரப்பர் எஸ்டேட்களுக்காக கவர்னரிடம் போனேன்). பெக் யுவர் பார்டன் (கொஞ்சம் மன்னிக்கணும்). ஃபாட் ஃபீஸ் (ரொம்ப பீஸ்). ஆ ..வெல் (நல்லது)...ஸோ...ஸோ...நாட் பாட் (அப்படி...அப்படி ... மோசமில்லே) ... ஓங்களெப் போலேயா மாஸம் பொறந்தா 4000...ஐ ஸே பை தி வே (அதிருக்கட்டும்). அந்த ஸக்ஸேஷன் ஸெர்ட்டிஃபிகேட் மாட்டர் (வார்சு மனு வழக்கு)லே சந்தேகமாயிருக்குன்னு சொன்னேயே... எஸ், எஸ்...(ஆமாம், ஆமாம்)! ஐ ஹாவ் லுக்தடு இட் அப் (அதைப் பார்த்தூட்டேன்). யூ மே ஸேஃப்லி டிஸைடு இன் ஃபேவர் ஆஃப் தி அப்லிகண்ட்...(மனுதார் பக்கமே தீர்ப்புச் சொல்லி விடலாம்). என்ன ? என்ன? ஓ ! ஓ ! யூ லேஸி (என்ன சோம்பேறித்தனம்) ! ஆகட்டும்...... டோண்டு வொரி. மண்டே யூ வில் ஹாவ் இட் (விசாரம் வேண்டாம். திங்கட்கிழமை கிடைக்கும்)...சரி ! வரதாச்சாரி ! இது ஒரு நியூஸென்ஸ் (உபத்திரவம்). ராத்திரி எயிட் (எட்டு)க்கு வந்தூடு...அந்த ஜட்ஜ்மெண்டு டிக்டேட் (தீர்ப்பு) பண்ணிடரேன்...இப்ப கூட ரிமயிண்டு (ஞாபகம்) பண்ணினான். மண்டே டெலிவர் (திங்கட்கிழமை தீர்ப்பு) பண்ண ணுமாம்.

வரதா :—ஆஹா, அப்படியே.

ஆத்மா :—கம் ஆன் ! (வா சீக்கிரம்), லுக் ஷார்ப் ! அவர் காத்துண்டிருக்கார். பை தி வே (அதிருக்கட்டும்), அந்தப் புஸ்தகம் எங்கே... ?

வரதா :—எது ?

ஆத்மா :—அதாம், போலாக்கு (போலாக்) எழுதிய மிஸ்ரேப்ரெஸென்டேஷன் அண்டு ஃப்ராடு (மாறுாட்டமும் ஏமாற்றமும்)...இன்னும் ரிட்டர்ன் பண்ணலே ?

வரதா :—எங்கே போயிருக்கு?

ஆத்மா:—என்னெ கேளு. மே ஐ நோ வாட் யூ ஆர் ஸப்போஸ்டு டு பி டுயிங்? (நீ என்னதான் பண்ணரெ, சொல்லு.) என்னய்யா முழிக்கரையே ஆந்தை யாட்டமா? போன வாரம் ஜஸ்டிஸ் ராமன் நாயர், வீட்லேந்து வாங்கிண்டு போனுனே. கெட் இட் அட் ஒன்ஸ் (உடனே அதை வரவழை). பெரிய எழவாப் போச்சு...இந்த, ஜட்ஜஸ் (ஜட்ஜ்கள்) உபத்ரவம்...சே!...தே ஆர் ரெகுலர் நியூஸென்ஸ்! லுக் ஹியர் (ரொம்ப உபத்திரவ மய்யா அவாள்)! இன்னமே என் பேர்மிஷன் (அனுமதி) இல்லாதே எந்த ஜட்ஜி கேட்டாலும் புஸ்தகம் குடுக்காதே......

வரதா :—இல்லே!

ஆத்மா :—இதோ பாரு...அந்த சிங்காரச் செட்டியார் வந்திருந்தாரே...அதாம் அந்த ஒரிஜினல் ஸயிடு மாட்டர் (ஒரிஜனல் ஸைடு கேஸ்), ஜஸ்டிஸ் ஸத்குணராவ் கோர்ட்லே. அதுலே அவர் கிராண்ட் நார்ட்டனெப் பேச வச்சிருக்காராம். அவன் தனக்கு ரொம்ப ஹிந்துலா தெரியாதுன்னு என்னேயும்கூட வைக்கச் சொன்னும். லஞ்ச் டைம் (இடை வேளே)லே ரிமயிண்டு (ஞாபகம்) பண்ணு. கிராண்ட் நார்ட்டனெப் பார்த்து அவன் கிட்டே பேசி எல்லாத்தையும் முடிச்சுடரேன். அவ்வளவுதான். சரி, இனிமேல் நீ போகலாம்.

வரதா :—நான் வரேன்...! சீக்கிரம் கோர்ட்டுக்கு வந்துடுங்கோ. ஃபர்ஸ்ட் கேஸ் (முதல் கேஸ்) நம்ம இன்ஸால்வன்ஸி மாட்டர் (விஷயம்) தான். (போகிறுன்)

ஆத்மா:—வெல், ஸாரி டு ஹாவ் கெப்ட் யூ வெய்ட்டிங் (நல்லது இவ்வளவு நாழி காக்கவைத்ததற்கு மன்னிக்கணும்). என்ன விசேஷம்? வந்த காரியமென்ன?

குஞ் :—ரொம்ப சந்தோஷம்! கண்ணுரப் பார்த்துண்டு காதாரக் கேட்டுண்டிருந்தேன். இவ்வளவு சின்ன வயசிலேயே இவ்வளவு ப்ராக்டிஸ் இருக்கிறது ரொம்ப விசேஷம்... பேஷ்... பேஷ், குப்புசாமீ

அய்யருக்குக்கூட இவ்வளவு இராது போலிருக்கே. அவர் இத்தனைக்கும் பெரிய ஸீனியர்.

ஆத்மா :—ஸீனியராவது ஜூனியராவது! அதுலெல்லாம் என்ன இருக்குது ஸார்? நாற்பது வருஷம் வக்கீலா இருந்துட்ட தனாலே ஸீனியரா?

குஞ் :—ரொம்ப ரைட் (சரி), பேஷ்! பேஷ்! மதராஸ்லே எனக்கு தெரிஞ்சவரைக்கும் ஒங்களெப்போலெ ஏழெட்டுப் பேருக்கு நல்ல தசை! மாசம் கொறஞ்சது 2,000 ரூபா வரும்.

ஆத்மா :—வெல் (நல்லது) 2,000 ரூபா அப்படி பிர மாதம்னு சொல்லமாட்டேன். நீங்க இன்னும் தாராளமாவே மதிப்புப் போடலாம்.

குஞ் :—ஆமா! ஆமா! போடவேண்டியது தான். இந்த நாள்லே வக்கீல் பாடு தான் யோகம்...நல்ல வரும்படி.

ஆத்மா :—அது இருக்கலாம். பணம் வந்துடறது ஸார்! நம்ம வேண்டாமின்னாலும் தேடிண்டு வந்து கொட்டிக் கொடுக்கறா. ஆனா என்ன ப்ரொஃபெஷன் (தொழில்) ஸார்! சுத்த ஹோப்லெஸ்! ரேச்செட் (மோசம்)! இப்ப வர ஜட்ஜிகளைக் கட்டிண்டு மாரடிச்சிக்க யாராலே முடியறது ஸார்?

குஞ் :—அது என்னமோ வாஸ்தவம்தான்! ரொம்ப சந் தோஷம்! இன்னிக்கி நல்ல ஸுதினம். ஜட்ஜ்கள்ளே முக்காவாசிப் பேருக்கும் இந்த இடத்திலே ஸ்பெஷல் ரிகார்டு (அலாதி மதிப்பு) இருக்காப்போலெ தெரிய வரது, ஏன்?

ஆத்மா :—வெல்! வெல்! வெல்! (நல்லது! நல்லது! நல்லது!) அதனாலே என்ன? அந்த மாதிரி வார்த்தையே எனக்கு சுத்தமா பிடிக்கிறதில்லே. அதுக்கென்ன? மோஸ்ட் ஆஃப் தி ஜட்ஜஸ் (ஜட்ஜ் களில் பலர்) என்னெ நன்னா பேர்ஸனல் (நேரில்) ஆ தெரிஞ்சுண்டிருப்பா! தே ஆல் லைக் மீ (என் கிட்ட அவாளுக்கு இஷ்டம்). இருந்தாலும் இதையெல்லாம் ஒரு பெரிய சமாசாரமா தமுக்கடிச்சுண்டு ப்ராக்டிஸ்

சம்பாதிக்கிறது ரொம்பப் பெசகு. அந்த மாதிரி வழிகள்ளே சம்பாதிக்கிறவாளும் ரொம்பப் பேர் இருக்கா...பேர் சொல்லக்கூடாது.

குஞ் :—பேஷ் ! பேஷ் ! வெரி குட் (ரொம்ப நல்லது) ! ஐ ஆம் வெரி க்லாடு ஸர் (எனக்கு ரொம்ப சந்தோஷம் ஸார்) ! நீங்க இவ்வளவு ஸக்ஸேஸ்ஃபுல் (பிராபல்யம்) ஆ இருக்கரதுமில்லாதெ ஒங்க ஹை பிரின்ஸிபில்ஸ் (உத்தமக் கொள்கைகள்) லோகத்துக்கெல்லாம் தெரியும்படி நடக்கிறது உண்டே, அது இன்னும் ரொம்ப விசேஷம் !

ஆத்மா !—மிஸ்டர் அய்யர்வாள் ! பை தி வே (அதிருக்கட்டும்), ஒங்க பேரை சொல்லலியே !

குஞ் :—குஞ்சிதபாதம் அய்யர்.

ஆத்மா :—மிஸ்டர் குஞ்சிதபாதம் அய்யர் ! எங்க ப்ரொஃபெஷன் (தொழில்) ஸீஸர்ஸ் ஒய்ஃப் (ஸீஸர் பெண்டாட்டி) ஆ இருக்கணும். காரெக்டர் (நன்னடத்தை) இருந்தா ஸக்ஸேஸ் (ஜயம்). ஸக்ஸேஸ் (ஜயம்) இருந்தா காரெக்டர் (நல்ல நடத்தை) இருந்தே தீரணும்.

குஞ் :—தீரணும் ! அது ஒத்துக்கறேன். ஆனு இருக்கோ ? பேஷ் ! பேஷ் ! இன்னிக்கி ரொம்ப இண்டெரெஸ்டிங் மார்னிங் (ரசமான பொழுது).

ஆத்மா :—ஓ எஸ் ! ஐ ஃபர்கெட் (ஆம், நான் மறந்துட்டேன்) ! வந்த காரியத்தைக் கவனிக்கலாம். என்ன விசேஷம் ? ஏதானு கேஸா, கன்ஸல்டேஷனு (ஆலோசனையா) ? ஒரிஜினல் ஸூட்டா ? (ஒரிஜனல் வழக்கா ?) அப்பீலா ?......

குஞ் :—அதெல்லாம் ஒன்னுமில்லே ! டோண்ட் ட்ரபில் யுவர்ஸெல்ஃப் (தொந்தரவு பண்ணிக்காதிங்கோ !)

ஆத்மா :— என்ன ஸார் ! வாட் இஸ் தி மாற்றர் ? (விஷயம் என்ன ?) மனஸ்தாபம் ஒண்ணுமில்லையே.....ரொம்ப வெயிட் பண்ண வெச்சுட்டேன்னு ?

குஞ் :—நோ நோ (இல்லே, இல்லே). நாட் அட் ஆல் (அதெல்லாம் இல்லே)! என்ன அப்படிச் சொல் றேளே? ஐ ஆம் வெரி கிளாடு டு ஹாவ் வெயிட்டேடு (காத்திருந்தது எனக்கு ரொம்ப சந்தோஷம்).

ஆத்மா :—நீங்க சொல்றது புரியலேயே!

குஞ் :—டஸேண்ட் மாட்டர் (பாதகமில்லே).

ஆத்மா :—அப்பறம், கேஸ் விஷயம்?

குஞ் :—என் கேஸுக்கு வேண்டிய விசாரணை நடந்து முடிஞ்சும் போச்சு!

ஆத்மா :—வாட் இஸ் ஆல் திஸ்? என்ன அர்த்தம் ஸார்? எதுக்காக இங்கே வந்து என் டைம் (காலம்) வேஸ்ட் (வீண்) பண்ணினீக? வொய் டிட் யூ கம் ஹியர்...(நீங்க ஏன் இங்கே வந்திக)?

குஞ் :—நான் இங்கே ஏதோ கொஞ்சம் இன்ஃபர்மேஷன் (சமாசாரம்) சம்பாதிக்க வந்தேன்......வந்த வேலே ஆச்சு...போறேன். செத்தெ வழி விடுங்க...தாங்க்ஸ் (வந்தனம்).

ஆத்மா :— என்னய்யா இது? ரொம்ப பெரிய பேர்வழியா இருக்கேளே! ஹு ஆர் யூ?...யாரையா நீ?

குஞ் :—ஒங்களுக்கு ரொம்ப அவசியமா தெரியணும்னு, நான் தான் இந்த ஸர்க்கிளுக்கு இன்கம் டாக்ஸ் இன்ஸ்பெக்டர்...

ஆத்மா :—என்ன? என்ன? யாரு?

குஞ் :—குட் மார்னிங் (குட் மார்னிங்)! நான் போய் வரேன்.

[போகிறர்.]

ஆத்மா :—அட கிரகசாரமே!

[இடி விழுந்தவர் போல் விழிக்கிறர். பாலா உள்ளிருந்து வந்து அவரைப் பார்த்து ஒன்றும் தோன்றமல் நிற்கிருள்.]

தினமணி வெளியீடு : 7 பதிப்பாசிரியர் : பி. ஸ்ரீ.

# தில்லைக் கோவிந்தன்

எழுதியவர் : திரு. அ. மாதவையா

தமிழ் நாவல் எழுதுவோர்க்கு வழிகாட்டிகள் என விளங்கியவர்கள் ஸ்ரீ ராஜம் ஐயரும், அ. மாதவையாவும். குசிகர் குட்டிக் கதைகளையும் பத்மாவதி சரித்திரத்தையும் படித்தவர்கள் ஸ்ரீ மாதவையாவை மறக்கமுடியுமா? அவர் பெரும்பாலும் தமிழிலே எழுதினவராயினும் தில்லைக் கோவிந்தன் என்னும் நாவல் ஆங்கிலத்திலே மட்டும் வெளி வந்து தமிழில் மொழி பெயர்க்கப்பெறுது நின்றுவிட்டது. இந்தப் பொருள் பொதிந்த நாவலை ஸ்ரீ வி. நாராயணன், எம்.ஏ., எம்.எல்., நல்ல தமிழ் நடையில் மொழி பெயர்த்திருக்கிருர். பிரதிகள் தேவையானவர்கள் சீக்கிரம் பெயரைப் பதிவு செய்து கொள்ளத் தினமணி காரியாலயத்திற்கு எழுதவும்.

# நாடக பாத்திரங்கள்

பாலாபிஷேகம் ஐயர்: (பாலா)

ஆஷாடபூதி ஐயங்கார்: புத்துயிர்ப் பதிப்பக ஸ்தாபகர் (ஆஷா)

வீராசாமி: வேலைக்காரன் (வீரா)

நச்சுப்பிச்சுப் பிள்ளையவாள்: (நச்சு)

அட்டையப்ப நாவலர்: (அட்)

தடபுடல் ராவ்: (தடபுட)

கங்கா பவானி அம்மாள்: பாலாபிஷேகம் ஐயரது ஸம்ஸாரம் (கங்கா)

# காட்சி 1

[பாலாபிஷேகம் ஐயர் மத்தியானம் டிபன் செய்து விட்டு வெற்றிலை போட்டுக்கொண்டு, சாய்வு நாற்காலியில் சாய்ந்து படுத்திருக்கிறார். அவருடைய ஸம்ஸாரம் கங்காபவானியம்மாள் ஒரு பக்கமாய் நின்றுகொண்டிருக்கிறாள்.]

பாலா :—ஆமாம்! இந்த ரேஷனிலே இப்போ அரிசி கொடுக்கிறாளே, அதனாலே உனக்கு ஏதாவது குத்தம் கொறை ஏற்பட்டு இருக்கோ?

கங்கா :—என்ன ரேஷனிங்? என்ன அரிசி வேண்டிருக்கு? கொழ கொழன்னு தவிடும் கல்லுமா......

பாலா :—இதோ பாரு, அதானே வேண்டாங்கிறது! திருப்திங்கிறதே உனக்குக் கிடையாது. வங்காளம் படற பாட்டிலே நமக்கு இவ்வளவாவது சர்க்கார் சேஞ்சிருக்காளேன்னு சந்தோஷப் படாமே......

கங்கா :—ஆமாம்...ரேஷனரிசியாம் அரிசி! அந்தச் சாத்துலே எதைப் போட்டுக் கலந்தாலும் ருசி எடுக்கறதில்லே! சப் சப்பின்னு கொழந்தை வாயை முத்தங் கொடுக்கறப்பலே!

[ஐயர் பக்கத்திலே மேஜைமேலிருந்த ஒரு பொம்மை கீழே விழுந்து துண்டு துண்டாய் உடைந்து போகிறது.]

பாலா :—போரும், மூடு வாயை! எத்தனை முறை சொன்னாலும் ஒனக்குத் தெரியாது. போ உள்ளே! வாயிலே வந்தபடி ஒளறிண்டு....

கங்கா :—ஏதுக்கிப்படி கோவிச்சுக்கறீகளே. கொழந்தெ வாயே முத்தமிட்டாப்பலே......

பாலா :—நீ கொழந்த வாயெ வேணும்னா முத்தமிட்டுக்கோ. கொரங்கு வாயை வேணும்னா முத்தமிட்டுக்கோ. அதைப் பத்தி எனக்கு ஒன்னுமில்லே...ஆனா இந்தக் கந்தரகூளப் பழமொழிகளை என் காது கேக்கச் சொல்லாதேன்னு எத்தனை தரம் சொல்லியிருக்கேன்?

கங்கா :—பழமொழியைச் சொன்னு ஒங்களுக்கென்ன வந்தது ?

பாலா :—என்னையும் அறியாமே எங்கிருந்தோ கன கோபம் வந்துடறது ! அந்தச் சமயத்திலே பக்கத்திலே யாரிருந்தாலும் அடிச்சுடுவேன் ; எது இருந்தாலும் ஒடச்சுடுவேன் !...ஆமா, பழமொழிகளாம் பழமொழிகள்! சனிகள் ! வெறும் பேத்தல்கள் !

கங்கா :—அதுக்குத்தான் அந்தப் பொம்மையை ஒடைச்சேளோ ? ரொம்ப நன்னாருக்கு. அது என்ன பண்ணித்து ஒங்களே ? (போய்க்கொண்டு) "அம்மையார் அவசேரிபோறு, கிழவனைக்கட்டி அடிச்சாளாம்" ஊம் ! ஊம் !

பாலா :—(கோபத்துடன் எழுந்து குதித்துப் பக்கத்து மேஜை மேலிருக்கும் புஸ்தகத்தை எடுத்துப் பலமாய்த் தரையில் போடுகிறர்.) டாம் நான்சென்ஸ் ! நம்ப பாஷை கெட்டுப் போனதெல்லாம் இந்த மாதிரி ஸ்டுபிட் பழமொழிகளாலேதான் !! சே! சே! சே!...அதுகளை யெல்லாம் முன்னே தொலைக்கணும் !......யாரது ?...வாங்கோ ! என்ன சமாசாரம் ? (ஆஷாடபூதி ஐயங்கார் பல்லை இளித்துக்கொண்டும், பெரிய கட்டு ஒன்றை எடுத்துக் கொண்டும், உள்ளே வந்து நமஸ்காரம் செய்கிறர்.)

பாலா :—நமஸ்காரம் ! ஒக்காருங்கோ, (ஐயங்கார் உட்காருகிறர்.) என்ன விசேஷம் ?

ஆஷா :—ஒன்னுமில்லே ! ரொம்ப நாளா இங்கே வந்து பார்க்கணும்னு உத்தேசம். நான்தான் புத்துயிர்க் காரியாலயத்தை நடத்திண்டு வரேன். பேப்பர்களிலே பாத்திருக்கலாம். நம்ப தேசத்துப் புராதன நூல்களை யெல்லாம் ஆராய்ச்சி செய்து அழகாய் அச்சடித்துப் பிரசுரம் பண்ணிண்டு வரேன். (மூட்டையை அவிழ்த்துக் காட்டி) பாருங்கோ ! ! இதெல்லாம் நம்ம காரியாலயத்திலே அச்சிட்டு வெளி வந்தவை...ராமாயணம், வால்மீகத்தைத் தழுவியது, ஸப்தகாண்டமும். மனு தர்ம சாஸ்திரம்—ஸாமவேத ஸாரம்.

தமிழ் நூல்கள் :—தொல்காப்பியம்! ஜீவக சிந்தா மணி! பெரிய புராணம்!

பாலா :—ரொம்ப சந்தோஷம்! ஒங்களெப்பத்திக் கேள்விப் பட்டிருக்கேன். உபயோக மில்லா தவாளுக்கெல்லாம் இந்த நாளிலே பட்டம் கொடுக்கிறு...ஒங்களுக்கு ஒரு மகா மகோபாத்யாயா கொடுக்கப்படாதோ?...... ஆஞ, இந்த நாளுலே பட்டங்களுக்குக் கௌரவமே தான் போயுட்டுதே! பணம்தானே பெரிசு. ஸரி! நீங்க செய்யற தொண்டு எனக்கு ரொம்பப் பிடிச் சிருக்கு...அந்தப் புஸ்தகங்களை யெல்லாம் நான் எடுத்துக்கறேன்...என்ன விலை யாறது?

ஆஷா :—ரொம்ப சந்தோஷம்; அதிகமில்லே முப்பத்து ரெண்டு ரூபா.

பாலா :—அவ்வளவுதானு? இந்தாருங்கோ முப்பத்தஞ்சா வெச்சுக்குங்கோ.

[நாலு நோட்டுகளைக் கொடுக்கிறர்.]

ஆஷா :—கம்பராமாயணம் முக்கால் வேலையாய்விட்டது.

பாலா :—இதோ அதுக்கு 30 ரூபாய் முன்பணமா வெச் சுக்குங்கோ! அப்புறம்?

[கொடுக்கிறர்.]

ஆஷா :—காளிதாஸனுடைய சாகுந்தலம் பாதிவேலை யாயிருக்கு.

பாலா :—பேஷ்! பேஷ்! இதோ அதுக்கு இந்த 25 ரூபா வாங்கிண்டு வரவு வெச்சுக்கோங்கோ......மேலே?

[கொடுக்கிறர்.]

ஆஷா :—இன்னுமொரு ரஸமான புஸ்தகம் தயாராகிறது.

பாலா :—அதென்ன? பலே! பலே! ஒம்மெப்போலே பொது நன்மைக்கு ஒழெக்கறவாளுக்கு, தங்கத்தாலே சிலை வைக்கணம்!

ஆஷா :—இது என்னுன்னு கேட்டா, இப்போ ஸாதா ரணமா, நித்யப்படி பேச்சிலேயும், நூல்களிலேயும், கணக்கில்லாமே நம்ம தமிழ்ப் பழமொழிகள் சம்ப விக்கிறதோன்னே....

பாலா :—(எழுந்து) என்ன ?

ஆஷா :—அதுகளை யெல்லாம் ஆராய்ஞ்சு, பரிசோதிச்சு, அங்கங்கே கொஞ்சம் அர்த்த வியாக்கியானங்க ளோடே ஒரே புஸ்தகமாப் போட்டு விட்டா...... பாருங்கோ ... "ஆயிரத்துக்கு அடி தெரியும், நூறுக்கு நுனி தெரியும்" இன்னமே...

[பாலாபிஷேகம் ஐயர், ஆஷாடபூதி ஐயங்காருக்கும் கதவுக்கும் நடுவில் நின்றுகொண்டு]

பாலா :—ஓய்! போதும், நிறுத்தும்! மரியாதையாய் நான் கொடுத்த ரூபாய் 90ஐயும் கீழே வையும். (ஐயங்கார் பேந்தப் பேந்த விழிக்கிறர்.) பழமொழிகளாம், பழமொழிகள்! அந்த வார்த்தையைக்கூட என் காதிலே போடக்கூடாது, தெரியுமா? எடுமையா ரூபாயை; அயோக்கியத்தனம்!

[ஐயங்கார் மெல்ல ரூபாயை எடுத்துக் கையில் வைத்திருக்க, பாலாபிஷேகம் ஐயர் வெடுக்கென்று அதைப் பிடுங்கிக்கொண்டு].

ஸரிதான், போங்கோ வெளியிலே! பழமொழிகள்! பழமொழிகள்!!

ஆஷா :—என் புஸ்தகங்களை யெல்லாம் எடுத்துப் போக லாமோ? இல்லாவிட்டா "உள்ளதும் போச்சுடா நொள்ளைக்கண்ணு!" இங்கற மாதிரி......

பாலா :—(அதிகமாய்க் கோபித்துக்கொண்டு) ஸ்டாப் இட், நான்ஸென்ஸ்! நிறுத்துங்கோய்யா! ஓங்க ராட்டன் புஸ்தகங்கள் இந்தாங்கோ!

[புஸ்தகங்களை ஒன்று ஒன்றய் எடுத்து வெளியே வீசி எறிகிறர்.]

ஆஷா :—(வெளியே போய்க்கொண்டே.) அட கிரஹசாரமே! "கைக்கு எட்டினது வாய்க்கெட்டலையே!" இவ்வளவு படிச்சவாள் இப்படி நடந்துக்கப்படாது. "படிக்கிறது திருவாசகம், இடிக்கிறது சிவன் கோவில்" இங்கற மாதிரி!

[போகிறர்.]

பாலா :—சீ! சீ! சீ! சீ! என்ன படிச்சு, என்ன புத்தி இருந்தாலும் பிரயோஜனமில்லே போலேருக்கே! ஸில்லி ஓல்டு மேன்! பழமொழிகளை என்ன புஸ்தகமாப் பண்ண வேண்டிருக்கு, வேலையில்லாத அம்பட்டனுட்டமா ?

[ஒரு புஸ்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டு படிக்க ஆரம்பிக்கிறர். வேலைக்கார வீராஸாமீ வந்து பேசாமல் நிற்கிறன்.]

பாலா :—என்னடா இது ? எங்கெ வந்தே ?

வீரா :—இல்லிங்கோ எசமான் ! ஒண்ணுமில்லிங்கோ.

பாலா :—இதோ, பாரு! நான் படிக்கணும். எதுக்காக வந்து இங்கே பல்லெ இளிச்சுண்டு நிக்கரே ?

வீரா :—நாளைக்கி லீவு வேணுங்க, வூட்டிலே விசேசங்க.

பாலா :—என்னடா விசேஷம் ?

வீரா :—எம் பொண்ணுக்குக் கண்ணலம் நிச்சயமாச்சுங்க. நாளைக்குப் பிள்ளை வூட்டுக்காரருக்கு வெத்தலெ பாக்கு வெக்கணுங்க.

பாலா :—ஆஹா ! அப்படியா ? ரொம்ப சந்தோஷம். (கையில் 10 நுபாய் நோட்டை எடுத்து) இந்தா, இதைக் கூட வச்சுக்கோ. கண்டபடி திண்ணு அஜீரணம் பண்ணிக்காதே. பொண்ணுக்கு என்ன வயசுடா ?

வீரா :—12 ஆவுதுங்க.

பாலா :—அதுக்குள்ளெ என்னடா அவசரம், இந்தச் சண்டெக் காலத்திலே ரேஷனும் வெளக்கணைப்புமா இருக்கச்சே ? வர வருஷம் செய்யேண்டா !

வீரா :—இல்லிங்க ! அதுக்குள்ளே பையன் வேறே கண்ணலம் சேஞ்சுக்கிறு, என்ன செய்யறதுங்கோ ? "ஐயரு வாரமட்டும் அம்மாசே காத்திருக்குதுங்களா ?"

பாலா :—(எடுத்த நோட்டைத் திரும்பிப் பையில் போட்டுவிட்டு) கழுதை ! போ வெளியே ; உனக்கு லீவு கிடையாது, அயோக்யா !

வீரா :—(விழிக்கிறான்.) நான் ஒண்ணும் தப்புச் செய்லீங்களே எசமான்!

பாலா :—ராஸ்கல்! ரொம்பக் கரை காணப் படிச்சவன். ஐயரும் அமாவாசையும் கண்டுட்டான்!...எதைக் கண்டுட்டேடா?

வீரா :—நான் எதைக் கண்டேனுங்க? "கயுதைக்கு என்ன தெரியும் கருப்பூர வாசனை?"

பாலா :—(எழுந்து அவனை அடித்து) போ வெளியே, நாயே! நாளை வேலைக்கு வராம மாத்திரம் இரு... தொலச்சுப் புட்ரேன், பாரு!

வீரா :—(போய்க் கொண்டே) இதென்னடா இது? திடீர்னு கோவம் பண்ணிக்கிணு குடுத்த லீவையும், எடுத்த ரூபாயையும் எட்ட ஒட்டாமச் சேஞ்சுட்டாரே! நான் சொன்னதுலே ஏதானு தப்பா இருக்கும்? "நோணலும் தன் வாயாலேயே கெடும்!" அட்,கடவுளே!

[போகிறான்.]

பாலா :—இந்தப் பயலுக்கு என்ன கேடு! படிப்புக் கிடையாது; ஒண்ணும் கிடையாது. வாயெத் திறந்தா விநாடிக் கொரு பழமொழி!

[மறுபடியும் புஸ்தகத்தைப் படிக்க ஆரம்பிக்கிறார். திடீரென்று 'படீர்! படீர்!' என்று குழந்தையை அடிக்கும் சப்தமும், அது 'ஓ!' வென்று அலறி அழும் சப்தமும் கேட்கின்றன. புஸ்தகத்தைப் போட்டு விட்டு]

இதென்னடா பெரிய எழவாப் போச்சு? ந்யூஸென்ஸ்! ஹியர், ஒன்னத்தானே, ஹியர்!

கங்கா :—(பிரவேசித்து) ஏன்? என்ன வந்துடுத்து இப்போ ஹியருக்கு? எனக்குப் பேரோ, ஊரோ ஒண்ணும் கிடையாதா?

பாலா :—அதெல்லாம் இருக்கட்டும். இப்போ 'படீர்! படீர்!' என்னு ஓசை கேட்டுதே, என்ன அது?

கங்கா :—என்னுதுன்னு? அதான்—அந்த அடங்காப் பிடாரி ஒண்ணு வந்து பொறந்திருக்கே—நன்னு அப்பனெ உரிச்சிண்டு வந்து! அது பண்ற ரூட்டி பொறுக்க முடியலே—முதுகிலே ரெண்டு வெச்சேன்!

பாலா :—என்ன? நம்ம அம்பிப் பயலேயா? ரெண்டு வயசுக் கொழந்தையைப் போட்டுப் பேயறையறாப் போலெ அறைஞ்சயே. ரொம்ப நன்னாருக்கு!

கங்கா :–சொல்ல மாட்டேளா பின்னே? எல்லாம் நீங்க குடுக்கற செல்லம்தான். "வர வர மாமியார் கழுதே போலே ஆனாளாம்."

பாலா :—போரும், போரும் பழமொழி-உபதேசம்...ரெண்டு வயசுக் கொழந்தெயெ அடிச்சா, அதுக்கென்ன தெரியும்?

கங்கா :—ஸரிதான். கொழந்தெயெ வளக்கறது ஓங்களுக்கு என்ன தெரியும்? "அடி ஒதவராப்பலே அண்ணன் தம்பிகூட ஒதவ மாட்டான்" தெரியுமா?...இல்லாமயா பெரியவா அப்படிச் சொல்லியிருக்கா?

பாலா :—(கோபம் பொங்க) சீ! சீ!! ஒளறாதே மறுபடியும் ஏதாவது பேத்தினா, பல்லெ ஒடச்சுடுவேன்!

[பக்கத்திலிருந்த ஒரு புஷ்பக் கோத்தை எடுத்துக் கோபத்துடன் எறிகிறார். நாற்காலியை 'டுர்ர்ர்ர்!' என்று இழுத்து மறுபடியும் படிக்க ஆரம்பிக்கிறார். உள்ளே பெருத்த சப்தம்: அம்மா, அம்மா, ஓடிவா! ஓடிவா! தம்பி விழுந்துட்டான்! தம்பி அழ ஆரம்பித்து அழுதவாறே யிருக்கிறான்.]

கங்கா :—என்னடா! என்னடா! எங்கே விழுந்தே?

[இங்கே கிணத்துப் பக்கத்திலே அம்மா!]

கங்கா :—பிரம்மஹத்தி! பீடை! இன்னமே கெணத்தண்டைவர மாட்டாயே! (அறைகிறாள்.) வரமாட்டாயே! (அறைகிறாள். தம்பி ஜாஸ்தியாய் அழுகிறான்.)

பாலா :—என்ன எழவு அது? யாரடா அங்கே? (வீராசாமி வந்து நிற்கிறான்.) என்னடா தட புடல்? என்ன?

வீரா :—இல்லிங்க? கொயந்தே கெணத்தாண்டே உயுந்து அயுதுக்கிட்டு இருந்துதுங்கோ. அம்மா அதட்டி அடிச்சாங்க.

பாலா :—ரொம்ப அழகாயிருக்கு. கூப்பிடு அம்மாவெ இங்கே!

[வீராசாமி போகிறன்.]

இதைவிட நரகத்துலே போய் நாலு நாள் ஹாய்யா இருந்து விட்டு வரலாம்...சீ! சீ! சீ!......

கங்கா :—என்ன? ஏதுக்கு? வரச்சொன்னௌளாமே?

பாலா :—இதென்ன? வீடா? நீங்களெல்லாம் மனுஷாளா? பேய்களா? இப்படிக் கூக்குரல் போட்டா மனுஷன் எப்படிப் படிக்கிறது?

கங்கா :—ஐயோடியம்மா!! வீடுன்னு பின்னே எப்படி இருக்குமோ? "நானும் நீயும்டீ, எதிரும் புதுரும்டீ" என்னு இருக்கணும்னு இருந்தா, பிள்ளையும் குட்டியும் ஏன்? தனிக்காட்டுப் பிடாரி யாட்டமா, கட்டைப் பிரம்மசாரி யாட்டமா, கல்யாணம் கில்யாணம் இல்லாதே ஊரோச் சுத்தி வந்துண்டிருக்கிறதுதானே? வாசிப்பாம், வேலையாம். வாசிக்கறத்துக்கும் வேலே செய்யறத்துக்கும் எடம், வேளே, சமயம், ஒண்ணு மில்லேயா?..." சந்தை எரிச்ச லிலே குடியிருந்து கெட்டேனே" இன்னும். அந்த மாதிரி இருக்கு.

பாலா :—ஸரி, அது எம்மேலே தப்பு! இதை வீடுன்னு நெனச்சுண்டு இங்கே இருக்கப் பார்த்தேன். இதை விட பீபிள்ஸ்பார்க்கிலே, அந்த மிருகக் காட்சியிலே, கொரங்குக் கூண்டிலே குடித்தனம் இருக்கலாம்!

கங்கா :—ஸரியா அமைஞ்சிருக்கும்! போறதுதானே எங்கே யாவது வெளியிலே? சாயங்கால வேளேயிலே வெளி யிலே போகாமல் "குண்டு சட்டியிலே குதிரை ஓட்டிண்டு" இருப்பானேன்.

[விருச்சென்று பாலாபிஷேகம் ஐயர் எழுந்து உள்ளே போய் ஒரு அங்க வஸ்திரத்தை மேலே போட்டுக் கொண்டு வெளியே போகப் புறப்படுகிறர்.]

எம்மேலே கோவிச்சுண்டு நீங்க ஒண்ணும் வீட்டை விட்டுப் போகவேண்டாம்! ஊ ஊம்! "ஒண்ட வந்த பிடாரி ஊர்ப் பிடாரியை ஓட்டித்தாம்"ன்னு எம்மேலே பழியா? வேலே செய்யணுமான இவ்வளவு பெரிய வீட்டிலே எடமா இல்லே? "ஆட மாட்டாத தேவடியா கூடம் போராது இன்னளாம்." அந்த மாதிரி இருக்கு நீங்க செய்யறது.

[பாலாபிஷேகம் ஐயர் பதில் ஒன்றும் சொல்லாமல் வாசற்கதவைப் படாரென்று அறைந்து விட்டுப் போகிறர்.]

கங்கா:—ஆனலும் என்ன கோவண்டி இந்த பிராம்மணனுக்கு? எங்கேருந்துதான் வரதோ? "தும்மினு மூக்கறந்து போறதே!" ஏதைச் சொல்லி என்ன பிரயோஜனம்?—"பேய்க்கு வாழ்க்கைப் பட்டா, புளிய மரத்திலேயும் ஏறத்தான் வேணும்!"

[போகிறள்.]

## காட்சி 2

[பாலாபிஷேகம் ஐயர் கடலோரத்தில் போய்க்கொண்டிருக்கிறர்.]

பாலா:—(தனக்குள்ளே) எங்கே போய்த் தொலேஞ்சா என்ன பிரயோஜனம்? "ராமேச்வரம் போனலும் சனீச்வரன் விடப் போறதில்லே!" சே! சே! சே! சே! "எல்லாரையும் சொல்லுமாம் பல்லி, தான் போய் விழுமாம் காடிப் பானேயிலே" இங்கராப்பிலே, நானே ரெண்டு நிமிஷத்துக்குள்ளே ரெண்டு பழமொழிகளே உபயோகிச்சுட்டேனே. மத்தவாளெச் சொல்லி என்ன பிரயோஜனம்? இனிமே ஜாக்கிரதையா இருக்கணம்!

[நச்சுப்பிச்சுப் பிள்ளே வருகிறர்.]

(வெளிப்படையாக) வாருங்கோ!! நச்சுப் பிச்சுப் பிள்ளேயவாள்! எங்கே இவ்வளவு தூரம்?

நச்சு :—இல்லே ஸார்! சும்மா ஊட்டுக்குப் போகக் கொள்ள வழியிலே, காத்து வாட்டமா இப்படி போவேனுங்க. நீங்க ரொம்ப சாவகாசமா இருக் கறாப்பலே இருக்குதே.

பாலா :—ஆமாம், போது போகல்லே. இந்த மணல்லெ வந்து சுகமா கொஞ்ச நாழி ஒக்காரலாமென்னு வந்தேன்.

நச்சு :—இல்லாதெயா சொல்லி யிருக்குதுங்க—"ஆத்து மணலே எண்ணினலும் எண்ணலாம், அர்ஜுனன் பொண் ஜாதிங்களே எண்ண முடியாது"ன்னுட்டு!

பாலா :—என்னய்யா? சம்பந்தமில்லாதெ திடீரென்னு என்னமோ பேத்தரீரே. அர்ஜுனன் பெண்டாட்டி களுக்கும் நான் சொன்னத்துக்கும் என்ன சம்பந்தம்?

நச்சு :—"மொட்டத்தலேக்கும் மொழங்காலுக்கும் இருக்கற சம் பந்தந்"தானுங்க. நீங்க மணலேப்பத்தி சொன்னீங்களா? உடனே ஆத்து மணலெப் பத்திப் பெரியவங்க சொல்லி யிருக்கிறது கவனம் வந்திச்சுங்க!

பாலா :—ரொம்ப சரி! வாங்கோ. அலே ஓரத்துலே போயி ஒக்காந்துக்கலாம்.

நச்சு :—வாணுங்க. நானு ஊட்டுக்குப் போரேனுங்க. அங்கே வந்தா அந்த அலேகளெப் பார்க்கச்செ இன் னெரு பழமொழி கவனம் வரும். "அலே எப்போ ஓழியும், தலே யெப்போ முழுவலாம்?" இன்னுட்டு அத்தெ சொல்ல வேண்டி இருக்கும். இதுக்கே நீங்க ரொம்பக் கோவம் பண்ணிக்கினு இருக்றீங்க. என்னுத்துக்கு நம்புளுக்குள்ளே வீண் மனஸ்தாபம்? நானு வரே னுங்க! நானு ரொம்ப சின்னவனுங்க. வீணு என் னுத்துக்கு "ஊர்க்குருவி மேலே ராம பாணம் தொடுக்கற" மாதிரி எம்மேலே நீங்க கோவிக்கறது?

[போகிறார்.]

பாலா :—இது ஒரு அவதாரம்! இந்த மாதிரிக் கண்ருவிகள் தான் கணக்கில்லாதெ இருக்குதுகள். படிப்புக் கிடை யாது; யோசனேயே கிடையாது; தனக்காகவும் தெரி

யாது; சொன்னாலும் தெரியாது. இதுகளைக் கட்டிண் மாரடிச்சுக்கறத்தெவிட இந்தச் சமுத்திரத்திலே விழுந்து சாகலாம்.

[அட்டையப்ப நாவலர் பிரவேசம்.]

அட் :—மன்னிக்க வேண்டும்! உங்களைப் பார்க்கவில்லை! நீங்கள் ஏகாந்தமாய் இருக்க வேண்டுமானால் நான் போய் விடுகிறேன்.

பாலா :—அதெல்லாம் ஒண்ணுமில்லே! நீங்க தினம் இங்கேதான் வறதா? இது வரைக்கும் நான் ஒங்களைப் பார்த்ததில்லையே...

அட் :—அதைத் தள்ளுங்கள்! அதனாலே என்ன? ஆமாம், தினம் இங்கே தான் வந்து போவேன். "கழுதை கெட்டால் குட்டிச்சுவர்." வேறெங்கே போகிறது? "சாக் கடைக்கு போக்கிடமெங்கே?" என்று சொல்லி இருக்கோ இல்லையோ?—எங்கே எழுந்துட்டிங்க? போகலாம் குந்துங்க! பாருங்க! இந்தப் பொழப்பை விட நாய்ப் பொழைப்பு ரொம்பத் தேவலைங்க. நானிருக்கிறது ஒரு பெரிய ஆபீஸு தான். பெரிய தொரை ரொம்ப நல்லவர், தர்ம ஸாது. ஆனா எனக்கு மேலே இருக்கிற அதிகாரி புது ஆளு. "அம்மையார் வரம் கொடுத்தாலும் பூசாரி கொடுக்க வாணுமா?" பாருங்கோ, அந்த ஆஸாமிக்கு மூக்கு மேலே ஸதா கோவந் தானுங்க! எப்போ பாத்தாலும் "தோரை வீட்டு நாயாட்டமா வள்ளு வள்ளுன்னு விழறது"தான் வேலைங்க!

பாலா :—(எழுந்து) நான் போய் வறேன்...

அட் :—(இழுத்து உட்காரவைத்து) போவலாம், இருங்க! கோவம் மாத்திரம் தானுங்களா? மஹா அல்பனுங்க! ஆ! ஊ! ண்ணு தன் அதிகாரத்தைக் காம்பிக்கிற வேலைதான். "அஷ்ட தரித்திரனுக்கு ஐச்வர்யம் வந்தால் அர்த்த ராத்திரியிலே கொடை பிடிப்பான்" இண்ணு சொல்றது அவனுக்குத்தான் தகும். "நேனுக்கு அதிகாரம் கொடுத்தா நிமிஷத்துக்கு நிமிஷம் கொட்டும்"

இன்றமாதிரி எப்பப் பாத்தாலும் எங்களைத் தொந் தரவு பண்றது!

பாலா :—(எழுந்து) நான் அவசரமாப் போகணும்......

அட் :—(மறுபடியும் உட்காரவைத்து) போவலாம், இருங்க காத்து நல்லா சுகமா இருக்குது. எனக்கு என்ன சம்பளமுன்னு கேட்டிங்களா ?...65 ரூபாயுங்க! 10 தேதிக்குள்ளே பறந்து பூடுதுங்க...பாருங்க, "எண்ணிச் சுட்ட பணியாரம் மாதிரி" வரதுங்க, "கடல்லே காச்சு பெருங்காயம்" மாதிரி பூடுதுங்க!

பாலா :—(எழுந்து) நான் அவசியம் போகணம்; வீட்டிலே பெண்டு பிள்ளைகள்...

அட் :—(வலுவாய் இழுத்து உட்காரவைத்து) இருக்கட்டும்! கொஞ்சம் குந்துங்க!...வீட்டிலே என்ன ஏற்பாடு சேஞ்சிருக்கேண்ணு கேட்டீங்களா ?–ஒண்ணும் செய் யல்லே—செய்ய முடியலே. "மரம் வச்சவன் தண்ணி வாக்க மாட்டானு ?" இண்ணு சும்மா இருக்கேன். எம் பொழப்பு இருக்குதே, "நித்யகண்டம் பூர்ணயசா" இருக்குது. என்னிக்கிச் சீட்டு எடுத்துடுவாங்களோ சொல்ல முடியாது!

பாலா :—நான் எப்படியும் போகணும். விட்டிலே சில பந்துக்கள் வந்திருக்கா...

அட் :—(இழுத்து வந்து பலாத்காரமாய் உட்காரவைத்து) நல்லா சொன்னீங்க! அந்தத் தொந்தரவை ஏன் கேக்கறீங்க? நாள் தவருதெ யாராவது பந்துவுங்க ஊட்லே "திண்டி போத்து ராமா, துண்டு போட்டு வாடா" இண்ணு சாப்பாட்டுக்கு வந்துட்ருங்க! அவுங்க மாத்ரம் வந்தா தேவலையே! கூட ரெண்டு விருந் தாளிங்களெ இட்டுக்கிணு வந்துட்ராங்க. "ஆத்துலே தண்ணி போவுது, அப்பா குடி அய்யா குடி இன்னு" அவங்க இட்டுக்கினு வந்தா நாம்ப என்ன செய்ய முடியும்? "எருது நோவு காக்காய்க்கு தெரியுங்களா ?"

[பாலாபிஷேகம் ஒன்றும் சொல்லாமல் மெள்ள எழுந்து நடக்க ஆரம்பிக்கிறர்.]

அட் :—என்ன ஸார்? "நல்லவனுக்கடையாளம் சொல்லாமல் போறது" இன்னு சொல்லாமெயே கிளம்பிட்டீங்களே?

பாலா :—இல்லே; மன்னிக்கணம்; நான் அவசரமாப் போகணம்.

அட் :—செய்யுங்க! செய்யுங்க! "தப்பிப் பிழைச்சது தம்பிரான் புண்ணியம்" இங்கற மாதிரி இருக்கு, நீங்க போறது பாத்தா...ரொம்ப தாங்க்ஸ் ஸார்! ஒங்ககிட்டே பேசிக்கிணு இருந்தது ரொம்ப உல்லாஸமா இருந்தது. குட்னைட்!

[போகிறார்.]

## காட்சி 3

[கடற்கரையிலிருந்து திரும்பும் வழியில்]

பாலா :—நான் 'ஊங்!' கொட்டிண்டு இருந்ததே உல்லாஸமா யிருந்ததாமே இந்த ஆஸாமிக்கு...... இவர் பேச்சைக் கேழ்க்கறத்துக்கு ஓராளிருந்தா போரும்போலிருக்கு!......

[தடபுடல் ராவ் அவஸரமாய் வருகிறார்.]

தடபுட :—அடேடே! பாலாபிஷேகய்யரா! குட் ஈவினிங்! குட் ஈவினிங்!! எங்கே? வீட்டுக்குத்தானே?

பாலா :—ஆமாம் ஸார்! வீட்டுக்குத்தான். ஏன் ஸார்! நீங்க சட்ட சபை மெம்பர் ஆச்சே, எம். எல். ஏ. ஆச்சே ஸார்! இந்தத் தமிழ்ப் பழமொழிகளை யெல்லாம் கொளுத்திடணம்; எல்லாரும் சாதாரணமாத் தங்க சொந்தப் பேச்சுகளைப் பேசணம்னு நீங்க ஒரு சட்டம் பிறப்பிக்கணும் ஸார்!

தடபுட :—நீங்க சொல்ரது ஸரிதான் ஸார்! நம்புளுக்குக் கூட பளமொளிங்கன்னு புடிக்காது ஸார்! ஆனா நாம்ப என்ன செய்ய முடியும் ஸார்?

[பாலாபிஷேகம் ஐயர் விழிக்கிறார்.

தடபுட :—என்ன ஸார் ? " ஆடு திருடின கள்ளனுமாதிரி முளிக்கி றிங்கோ ?"

பாலா :—அட ராமா ! உங்களாலெ ஒன்னும் செய்ய முடியாதுன்னு சொல்லுங்கோ ஆன !

தடபுட :—அட எளவே ! இதுகூடத் தெரியலியா ? " அடீன்னு கூப்பிட ஆமிண்டியாளுங்காணும்; அஷ்டபுத்திராள் எத்தனே பேர்"ன்னு கேக்கறீங்கோ. ஸார், லெஜிஸ்லேட்டிவ் அசெம்ப்ளி ஒளிஞ்சி போயி "உள்ளதும் போச்சுதடா நொள்ளேக் கண்ணு" இன்ற ஸ்திதியிலே இருக்குது? இந்த ஸ்திதியிலே மசோதாவை எப்படிப் பொறப்பிக்கிறது ஸார் ? இப்போ நம்ப பேச்சை யார் கேக்கருங்கோ ஸார் ? " செவிடன் காதுலே சங்கு ஊதினப் போலே"தான் ஸார் ! நானு வர்ரேன் ஸார் !

[போகிறர்.]

பாலா :—பழமொழிகளே வெறுக்கறதா சொன்ன ஆசாமி இவர் ! பேசினது ரெண்டு நிமிஷம். அதுக்குள்ளே சரமாரியாப் பழமொழிகளாகவே அடுக்கிட்டு போயிட்டாரே...ஏதேது ?...விமோசனமில்லே !

## காட்சி 4

[பாலாபிஷேகம் ஐயர் வீடு.]

கங்கா :—(வீட்டு வாசலேப் பார்த்தபடியே) போனவரை இன்னும் காணமே. எங்கே போயிருக்கப் போருர் ? அந்தப் பாழாப்போன க்ளப்லேபோயிச் சீட்டாடி இருக்கிறதை ஒழிச்சுட்டு இங்கே வந்து...இதோ ! இதோ ! வரட்டும்.

பாலா :—[உள்ளே வந்து] என்ன ! சாவகாசமா ஒக்காந்திருக்காப்பலே இருக்கே. என்ன சேஞ்சுண்டிருந்தே ?

**கங்கா** :—என்னத்தே செய்யரது? வீட்டு வேலே இல்லேயா எனக்கு? கொஞ்ச நாழி அம்பிப் பயலோடே விளே யாடிண்டிருந்தேன்!

**பாலா** :—ஓஹோ! [சிரிக்கிறர்.]

**கங்கா** :—சிரிப்பு என்ன அதுக்கு? எங்கேயும் அப்படித் தான் இருக்கும்: "அடிக்கிற கை அணேக்கவும் தான் செய்யும்!" போகட்டும்......நான் என்ன சொல்லி விட்டேன்? விறுக்குன்னு கோவிச்சுண்டு கிளம்பிட் டேகளே!

**பாலா** :—அதெல்லாம் ஒண்ணுமில்லே. எனக்குத்தான் இந்தப் பழமொழிகளேக் கேட்டாலே கோபம் வரதே, அதுகளெச் சொல்லாமெ நீ பேசக்கூடாதா?

**கங்கா** :—எனக்கு மாத்தரம் பிடிக்கறதா என்ன? பழ மொழிகள் யாருக்கு வேண்டியிருக்கு? "கட்டிக் கொடுத்த சோறும் கத்துவெச்ச சொல்லும் கால்நாழிகூட வராது!"

[இருவரும் உள்ளே போகிறர்கள்.]

**வீராசாமி** :—[தோன்றி] ஓ! அப்படியா சமாசாரம்? இப்போ அம்மாகிட்டெ அந்தக் கோவம் வரது தானே! ஊ ஊம்!! "மாமியார் ஒடைச்சா மண்கலம், மாட்டுப் பொண் ஒடச்சா வெண்கலம்."

**கங்கா** :—(தோன்றி) அடே! வீராசாமி! போடா, ஐயா ஒனக்கு நாளெக்கு லீவ் கொடுத்துட்டார். இந்தா இதெ வெச்சுக்கோ!

[10 ரூபாய் நோட்டைக் கொடுக்கிறள்.]

**வீரா** :—"கொடுக்கிற தெய்வம் கூப்பிட்டுக் கொடுக்கும்!"

தினமணி வெளியீடு—5

# சிறு கதை மஞ்சரி

இச் சிறு கதைகளை எழுதிய தமிழ்ப் பெரும் புலவர், "தமிழில் தற்காலத்திற்குரிய ஓர் இலக்கிய வகை சிறு கதை" என்பதைத் தெளிவாக உணர்ந்திருக்கிறார். இந்தக் கதைகள் தற்காலத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஒரு ஸ்தானம் பெறத் தக்கவை. சுவையான நிகழ்ச்சிகள் சுவையான முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. பிழையற்ற, பொருள் பொதிந்த, இலக்கியச் சுவை வாய்ந்த தமிழ் நடை இந்த ஆசிரியரின் சிறப்பியல்பு என்று சொல்லலாம்.

இந்தப் புத்தகத்தில் ஒன்பது கதைகள் அடங்கியிருக்கின்றன. சொந்தக் கற்பனையும், மொழிபெயர்ப்பும், தழுவலுமாக உள்ள இக் கதைகளெல்லாம் பலவேறு நிறமும் மணமும் வாய்ந்த மலர்கள் போல் இயற்கையாக மலர்ச்சி பெற்றவை.

அழகிய கட்டடம் — விலை ரூ. 1

# ஐயோ! கடவுளே!!

நேயர்களே! நான் பேராசை கொண்டு பெரும் பதவி பெற்று ஒரு நாள் முழுதும் பட்ட பெரும் பாட்டைச் சொல்லுகிறேன், கேளுங்கள். இது ஏதோ பொய்க் கற்பனை யென்று நினைக்கவேண்டாம், வாஸ்தவமாய் நடந்தது. சொன்னால் நம்புவது அஸாத்திய மென்று இத்தனை நாள் சொல்லாமல் வைத்திருந்தேன். ஆயினும், உலகத்தின் க்ஷேமத்தை உத்தேசித்து, ஆழ்வார் சொன்ன மாதிரி, சொன்னால் விரோதம் இது ஆயினும் சொல்லுவன் கேண்மின்!

சில வருஷங்களுக்கு முன் ஒருநாள் பிரஹ்லாத நாடகம் பார்க்கச் சென்றேன். நாடகம் ஆரம்பித்தது. ஹிரண்ய கசிபு வந்தான். ஒரு மரத்தினடியில் போய் உட்கார்ந்தான். கண்களை மூடினான். வாயைத் திறந்து பாட ஆரம்பித்தான். சுருதியைச் சித்திரவதை செய்தான்; தாளத்தை த்வம்ஸமாக்கினான்; சாகித்யத்தைச் சாக அடித்தான்; அர்த்தத்தை அதமாக்கினான்; பாவத்தைப் பாழாக்கினான். வாயை மூடினான். நான்முகன் வேகமாய் வந்து எதிரில் நின்றான். ஒருவேளை சங்கீதத்தைக் கொலை செய்ததற்காக ஹிரண்ய கசிபுவைக் கைதியாக்கி வரும்படி ஸரஸ்வதி தன் நாதனை அனுப்பினாளோ என்று நினைத்தேன். ஆனால் நான்முகன் கொஞ்சமும் தயங்காமல், ஹிரண்ய கசிபுவை அழைத்து, "உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்!" என்றான். ஆரம்பித்தான் ஹிரண்ய கசிபு மறுபடியும். ஏற்கெனவே கொலையுண்டு இறந்துபோன சங்கீதத்தின் பிரேதத்தைக் கண்டதுண்டமாக்கினான். சாகா வரத்தைக் கேட்டான். பிரம்மா மிகுந்த சந்தோஷத்துடன் "தந்தேன்!" என்று சொல்லிப் போய்விட்டான்.

இதைப் பார்த்தேன். எனக்குச் சகிக்க முடியவில்லை. மறுநாள் பத்து மணிக்குள் அண்டி மாண்டின் மேல் வாங்கின ஐந்நூறு ரூபாயை அக்ரமஸிங் ஸாவுகாருக்குக்

கொடுக்கா விட்டால் அதோகதி யாயிற்றே என்று ஞாபகம் வந்தது. அடுத்த வாரத்தில் வருமான வரி செலுத்த வேண்டியது. முந்நூற்றுச் சில்லறை ரூபாயை எங்கிருந்தாவது சம்பாதித்தாகவேண்டும்! செலுத்தத் தவறினால்—நாராயணா! இந்த மாதிரி சமாசாரங்களெல்லாம் மனசில் தோன்றவே, உடனே "நாமும் ஏன் தவம் செய்து வேண்டிய வரத்தைப் பெறக்கூடாது?" என்று யோசித்தேன். அபஸ்வர ஸங்கீதத்திற்கே அழியாவரம் கிடைக்கவே, எனக்கு மிகவும் தைரியம் பிறந்துவிட்டது. நேராக ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனேன். ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு பல்லாவரத்தை அடைந்தேன். அங்கே இறங்கி நேராக மலைமீது ஏறி, ஒரு தனிமையான இடத்தில் உட்கார்ந்து, எனக்குத் தெரிந்த துதிகளையெல்லாம் வெகு அழகாயும், ரஸமாயும் பாட ஆரம்பித்துக் கண்களைக் கெட்டியாய் மூடிக்கொண்டேன். சிறிது நேரம் கழித்துக் காலடி அரவம் கேட்கவே, "பிரம்மா வந்து விட்டார்!" என்று சந்தோஷித்தேன். இன்னும் வெகு ரஸத்துடன் பாடினேன்.

"யாரய்யா இது, இங்கே ராவுலே வந்து கலாட்டா பண்றது? இங்கே வரக்கூடாதுண்ணு தெரியாது? கருங்கல் பொளக்கர கம்பெனிக்குச் சேர்ந்தமான எடம் இது! நாம்போ காவக்காரன், தெரியுமா?. போய்யா எயுந்து வேறெங்கயானு!" என்று காதில் விழவே கண்களைத் திறந்து பார்த்தேன். பிரம்மா இருக்கவேண்டிய இடத்தில் முழநீளம் தாடியைப் போட்டுக்கொண்டு முரட்டு ஸாயபு ஒருவன் நின்றுகொண்டு முறைத்துப் பார்த்தான். "அட கண்றாவியே!" என்று வெறுத்துக்கொண்டு வேறோர் இடத்திற்குச் சென்று உட்கார்ந்து, கண்களை மூடிக்கொண்டு மறுபடியும் பாட ஆரம்பித்தேன்.

கண்ணின் முன் ஜகஜ்ஜோதியாய்ப் பிரம்மா நின்றார். "என்ன வரம் வேண்டும், கேள்" என்றார். நான் "பிரபோ! தயவுசெய்து எனக்கு ஒருநாள் கடவுள் ஸ்தானத்தை வகிக்கும்படி வரம் தரவேண்டும்" என்றேன். உடனே, வழக்கப்படி, அவர் "தந்தேன்!" என்று மறைந்தார்.

தேவலோகத்தில் பெரிய கடியாரம் சரியாய் ஆறுமணி யென்று காட்ட, திடீரென்று ஸ்வர்ணமயமான மாளிகையில் ரத்ன மயமான பீடத்தின்மேல் அரவணைமீது நான் இருந்தேன். இரு பக்கங்களிலும் ஸ்ரீதேவி பூதேவிகள் உபசரிக்கிறார்கள். ஆஞ்சநேயன் காலை வருடிப் பணிந்து நிற்கிறான். கருடன் கழுத்தை நீட்டிக்கொண்டு காத்திருக்கிறான். உடனே யோசனை செய்தேன். இருக்கும் சாவகாசம் 24மணி நேரம்; செய்யவேண்டியதை யெல்லாம் செய்துகொள்ள வேண்டும். வீண்காலம் போக்கலாகாது. உடனே, முதல் முதலில் அக்னி பகவானை வரவழைத்து, வருமானவரி ஆபீஸ் கட்டடங்களை யெல்லாம் பஸ்மமாக்கும்படி உத்தரவிட்டேன். அக்னி பகவான் போனவாறே திரும்பிவந்து “முடிந்துவிட்டது!” என்றான். யமதர்மனை வரவழைத்து அக்ரமஸிங் என்னும் அயோக்கியனை அழைத்துவரச் சொன்னேன். சொல்லி முடிப்பதற்குள் அக்ரமஸிங் எதிரில் நின்றான். முறைத்துப் பார்த்தேன். நடுங்கினான். தன்னை மன்னிக்க வேண்டுமென்று கதறினான். நான் எழுதிக் கொடுத்த அண்டிமாண்டில் செல்லு வைத்துவிடுவதாகச் சொன்னான். இன்னும் வேண்டுமானால் 2, 3 லக்ஷம் ரூபாய் கடன் கொடுப்பதாகச் சொன்னான். கௌஸ்துபத்தையும், சுதர்சனத்தையும் மாத்திரம் பொறுப்பாகக் கொடுத்தால் பத்து லக்ஷம் வரையில் ஓடும் கணக்கில் லேவாதேவி செய்யக்கூடும் என்றான். “ஆஞ்சநேயா!” என்றேன். ஹநுமந்தன் ஒரு குதி குதித்து வணங்கி நின்றான். “இவன் உரைத்ததைக் கேட்டாயா?” என்றேன். “ஆம், பிரபோ!” என்றான். “இவனைத் தக்கபடி தண்டிப்பாய்” என்றேன். அனுமான் அக்ரமஸிங்கை அப்படியே எடுத்துக்கொண்டு குதித்தான். அரை விநாடி கழித்துத் திரும்பி வந்து என் இடது காலைப் பிடித்துக்கொண்டிருந்தான்.

“என்ன செய்தாய்?” என்றேன்.

“அவனை அஃபிஷல் அஸைனீ ஆஃபீஸில் அட்டெண்டராகச் செய்துவிட்டு வந்தேன்” என்றான்.

மறுபடியும் யோசித்தேன். ஒவ்வோர் இரவும் தவறாமல் பன்னிரண்டு மணிக்கு அழ ஆரம்பித்து, காலை

வரையில் ஊளையிடும் அண்டை வீட்டுக்காரன் குழந்தை ஊமையாகப் போகட்டும் என்று ஆக்ஞாபித்தேன். அப்படியே போயிற்று.

எனக்கு நெருங்கிய பந்துக்கள் மித்திரர்கள் எல்லாருக்கும் கணக்கற்ற செல்வம் படைக்க வேண்டுமென்று குபேரனை நியமித்தேன். அவ்வாறே முடிந்து விட்டது.

எனக்குக் கடன் கொடுக்கமாட்டேனென்று சொன்னவரை யெல்லாம் அஷ்ட தரித்திரராக்கினேன் அரை நொடியில்.

பாலாற்றில் ஜலம் ஓட வேண்டு மென்று உத்தர விட்டேன். சிறைச்சாலைகளிலெல்லாம் குழாய்களில் மோர் வரவேண்டுமென்று அருளினேன். சட்ட மந்திரிகள் வீட்டிலிருக்கும் பசுக்களெல்லாம் மலடாக வேண்டு மென்று சபித்தேன். மஹாத்மா காந்திக்குப் பசியே எடுக்கக்கூடாதென்று நியமித்தேன். மணி எட்டு அடித்தது. ஆரம்பித்தது என் தொல்லை. பூலோகத்தில் கோவில்களி லெல்லாம் பூஜை தொடங்கிற்று. ஒவ்வொரு கோவிலிலும் நைவேத்யம் செய்யும் வேளைக்குப் போக வேண்டியதாயிற்று. கருடன் கழுத்து, காய்ப்புக் காய்த்து விட்டது. சில கோவில்களில் பிரமாதமான நைவேத்யங்கள். ஸ்ரீரங்கம், திருப்பதி முதலிய கோவில்களில் நைவேத்யம் முடிந்ததும் ஒவ்வொரு டோஸ் ஓமரசம் சாப்பிட வேண்டியிருந்தது. சில கோவில்களில் மூடி எடுத்து வந்து, திரையைப் போட்டுக் கையைக் காண்பித்தார்கள். பார்த்தால், தாம்புக்கயிறும், சுட வைத்த இரண்டு செங்கல்களும் தென்பட்டன. ஒரு கோவிலில் ஒன்றிலுமே உப்புப்போடவில்லை. 'கிரஹசாரமே' யென்று சாப்பிட்டேன். இதில் இன்னும் அநேக தொந்தரவுகள். ராமாவதாரத்தில் அந்த ராமன் ஒரு மோசமான வழக்கத்தைச் செய்து விட்டுப் போனதில் அநேகம்பேர் எச்சில் செய்து விட்டு அதையே நிவேதனம் செய்கிறார்கள். கேட்கப் போனால் தங்களையும் சபரியைப் போல் நினைக்க வேண்டுமென்கிறார்கள். ஆந்திரர்கள் வீடுகளில் வெகு பக்தியாய்ச்

சமையல் செய்து சமர்ப்பிக்கிருர்கள்: ஆனல் மிளகாய் உபத்ரவம் பெரிதாயிருக்கிறது.

சரி; எதற்கு வீண் வார்த்தை? ஒரு மாதிரியாய் எல்லா இடங்களையும் சுற்றிக்கொண்டு திரும்பிப் பன்னி ரண்டு மணிக்குப் பாற்கடலுக்குப் போய் ஆதிசேஷன் மேல் படுத்துக் கொண்டேன். லக்ஷ்மி வந்து தாம்பூலம் கொடுத்து, சொக்கட்டான் துணியைப் பரப்பி ஆட வேண்டு மென்று கேட்டாள். ஆட ஆரம்பித்த சிறிது நேரத்திற் கெல்லாம் பாடிக்கொண்டு தம்புராவைத் தூக்கிக் கொண்டு நாரதர் வந்து சேர்ந்தார். இவர் விஷயத்தில் எனக்கு எப்பொழுதும் கொஞ்சம் அதிருப்தி. இவரை முதல் முதலில் அப்படியே நிற்கவைத்து ஒரு போட்டோ எடுத்துக் கொண்டேன். ஏனென்ருல், இவர் விஷயமெல்லாம் சர்வ சந்தேகம். இவருக்குத் தாடி உண்டா, இல்லையா? இவர் இலக்கணமாய்ப் பேசுபவரா, கொச்சையாய்ப் பேசுபவரா? இவர் ஆணு...பெண்ணு? இவர் கிழவரா, குமரரா? இவர் உடுத்துவது நார்மடியா, பட்டா, சேலம் துப்பட்டாவா, மரவுரியா? இதை நிஷ்கர் ஷையாய்த் தெரிந்து கொண்டு விட வேண்டுமென்பது என் அபிப்பிராயம். கடைசியில் ஒரு நல்ல யுக்தி தோன் றவே, இனிப் பூலோகத்தில் எந்த நாடகத்தில் நாரதர் வேஷம் வருகிறதோ அந்த நாடகத்தில் அந்த வேஷம் தரிக்கும் ஆஸாமியை எங்கேயாவது மறைத்துவிட்டு நாரதரே நேராகப்போய் நடித்துவிட வேண்டுமென்று உத்தரவு செய்தேன். இனி இவருக்கு ஒரு நாள்கூட ஓய்வு இராது என்பது நிச்சயம்.

திடீரென்று "ஆதிமூலம்! ஆதிமூலம்!" என்று அலறிய குரல் என் செவியில் விழவே, ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து, கருடனையும் இழுத்துக் கொண்டு, என் மேலணிந்த வஸ்திரம் பின்ஞல் நழுவிப் பறந்து வரு வதையும் கவனிக்காமல் குரல் வந்த திக்கை நோக்கி ஓடினேன். யானையோ என்று பார்த்தால், இல்லை; வேறு எந்தப் பக்தனையும் காணவில்லை. குரல் ஒரு பெரிய காட்டில் ஒரு குளத்தின் கரையின் அருகிலிருந்து வந்தது.

முதலையைத்தான் கொல்ல வேண்டுமென்று சக்ராயுதத்தை எடுத்து ஓடிப்போய்ப் பார்த்தேன்: உடனே திரும்பினேன். நடந்ததென்ன வென்றால், அந்தக் காட்டில் ஃபாரெஸ்ட் இலாகாவைச் சேர்ந்த ஒரு பங்களாவில் தங்கியிருந்த ஒரு வெள்ளைக்கார உத்தியோகஸ்தன் தன் ஹரிஜன வேலையாளைக் கோபத்துடன் கூப்பிட்டிருக்கிறான். அந்த வேலையாள் பெயர் ஆதிமூலம்.

உடம்பு அலுத்துத் திரும்பிப் போகும் சமயத்தில் ஒரு பக்தனுடைய பிரார்த்தனை காதில் விழவே, அதை ஈடேற்ற விரைந்தேன். கூப்பிட்ட பக்தன் இருந்த ஸ்திதி யென்ன வென்றால், சற்றும் யோசிக்காமல் ஆஸ், ராஜா, தழை, மருஸ் இவைகளை வைத்துக்கொண்டு நாலு பிடி கேட்டு விட்டான். தழையை வைத்து வெட்டினான். மேல்வெட்டு விழுந்துவிட்டது. அந்தச் சமயத்தில் பரம பக்தியுடன் "ஸ்வாமி இருக்கார்! நம்மாலென்ன முடியும்?" என்றான். உடனே சென்று சுயமரியாதைக் கட்சியைச் சேர்ந்த ஒரு முதலியாரைத் தப்பாட்டம் ஆட வைத்து அவன்மேல் தப்பு பேஸ்து எழுதும்படி செய்து என் பக்தனைக் காப்பாற்றினேன்.

இதற்குள் இன்னோர் இடத்தில் என்னை அழைப்பதாய்த் தெரிந்தது. சைதாப்பேட்டை சப் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஒருவன் உடம்பெல்லாம் நாமம் அணிந்து சாக்ஷிக் கூட்டில் நின்றுகொண்டு பொய்ச் சாக்ஷி சொல்லும் போது வாய்க்கொருமுறை, "ஸ்வாமிக்குத் தெரியும்" "ஸ்வாமி ஸாக்ஷியாகச் சொல்றேன்" என்று சொல்லி வந்தான். உடனே அங்கே சென்று மாஜிஸ்ட்ரேட் மனதில் புகுந்து, அவனை நம்ப வேண்டாமென்று உபதேசித்துவிட்டுத் திரும்பினேன்.

இதே விதமாய்க் கொஞ்சமும் ஓய்ச்சலில்லாமல் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு ஓடினவாறே இருக்கவேண்டி வந்தது. சாயங்காலம் ஆனதும், என் ஜோலிகள் பன்மடங்கு அதிகமாயின. திக்பிரமை அதிகமாயிற்று. கோவில்களிலெல்லாம் பூஜா காலம் வந்து

விட்டது. தங்கள் கோரிக்கைகளைச் சொல்லிக் கொண்டு பிரார்த்தனை செய்பவர்கள் நூற்றுக் கணக்கு, ஆயிரக் கணக்கு, லக்ஷக்கணக்காய் அதிகரித்தனர். தங்களுக்கு ஐச்வர்யம் வர வேண்டுமென்று வேண்டிக் கொண்டவர், தாங்கள் க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று கோரியவர், மற்றவர் அழிய வேண்டுமென்று வேண்டியவர், இம்மாதிரி வித விதமானவர்களின் வேண்டுகோள்கள் ஸதா என் செவிகளில் விழுந்தவாறே யிருந்தன. மழை பெய்ய வேண்டு மென்று மண்ணைப் படைத்தவர் வேண்டினார்கள். மழை வேண்டாமென்று 'பேசும் படம்' தயாரிக்கும் பேர் வழிகள் பேரொலி செய்தார்கள். பணக்கார சாவுக்கார் வீட்டில் கன்னம் வைத்துக் களவு செய்ய உத்தேசித்த கள்ளன் தனக்கு உதவும்படி குனிந்து பணிந்தான். பணக் கார சாவுக்கார் படுக்கப் போகுமுன் பலவிதங்களிலும் காவல் செய்துவிட்டுப் பணத்தையும் தன்னையும் பாது காக்க வேண்டுமென்று பதைபதைக்கக் கெஞ்சினான்,

புத்தி தடுமாற்றம் கொண்டு செய்வதென்னவென்று அறியாமல் திகைத்து நிற்கையில், கோவில்களில் பூஜை களெல்லாம் முடிந்து மூடும் ஸமயம் சமீபிக்கவே, நாதஸ் வர சப்தம் ஆரம்பித்தது. இரவில் கோவில்களை மூடு வதற்கு முன்தான் கத்துக்குட்டி-நாயனக் காரர்களுக்கு அப்பியாசம் செய்யும் சமயம் போலும்! அன்றிரவு என் செவிகளில் வந்து விழுந்த அபஸ்வரங்களைக் கேட்டுக் கொஞ்சமும் சகிக்க முடியாமல் பரிதவித்தேன். ராமேச் வரம் போனாலும் சனீச்வரன் விடவில்லையே என்று வருத்தப்பட்டேன். இதையும்விட ஹிரணிய கசிபுவின் பாட்டுகளே மேலென்று நினைத்து, பூலோகத்திற்கு ஓடி வந்து விட நிச்சயித்தேன். பதினான்கு மணி நேரம் இந்தப் பதவி யனுபவித்தது போதுமென்று நிச்சயித்துக் கொண்டு பறந்து ஓடி வந்தேன். பரலோகத்திலிருந்து வந்த வேகத்தில் தடுமாறி விழுந்து பிரக்ஞை யிழந்தேன்.

உடம்பில் சூரியனுடைய கிரணங்கள் "சுளீர்!" என்று படவே கண்களை விழித்துக்கொண்டு எழுந்து

சுற்றிலும் பார்த்தேன். பல்லாவரத்தின் மலைமேல் ஒரு பாறை மீது படுத்திருந்ததாகத் தெரியவே பரபரப்புடன் பல்லும் விளக்காமல் ஓடி வந்து, முதல் வண்டியில் ஏறிப் பட்டணம் வந்து சேர்ந்தேன். வீடு வந்து சேர்ந்ததும் பக்கத்து வீட்டுக் குழந்தையின் அழுகை காதில் விழுந்தது. கர்ணாமிருதம் போல் அனுபவித்தேன். கட்டி கட்டியாய்க் கற்கண்டைக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டுப் பிறகு ஒருவாறு சாந்தமடைந்தேன். அந்த நாளிலிருந்து கடவுளை ஒரு காரணத்திற்கும் பிரார்த்திப்பதில்லை யென்று சங்கல்பம் செய்து கொண்டேன். "ஐயோ! கடவுளே!"

## சட்டம் சொல்லிக் கொடு

கோணங்கிபுரத்துக்குக் காங்கிரஸ் மந்திரிகள் விஜயம் செய்து, "வக்கீல்கள் சாதாரண ஜனங்களுக்குச் சட்ட ஞானத்தைப் போதிக்க வேண்டும்" என்று சொன்னாலும் சொன்னார்கள்; அந்த ஊர் வக்கீல்களிடையில் பெரிய பரபரப்பு உண்டாகிவிட்டது. கோணவழி கோபாலையங்கார் மிக உக்ரமாய்ப் பேசினார். "என்ன நான்ஸென்ஸ் ஸார்! பொது ஜனங்களுக்கு நாம் எதுக்குச் சட்டம் சொல்லித்தரணும்? அப்போ டாக்டர்கள் வைத்தியம் சொல்லித்தரணும். எஞ்சினியர்கள் வாராவதி கட்டச் சொல்லிக் குடுக்கணும். அப்படிப் போனா ரொம்ப ரஸாபாஸமாய்ப் போயிடுமே! சே! சே! இந்த மந்திரிகள் விளையாடறாளா என்ன? தெரியலயே!" என்று கதற ஆரம்பித்தார்.

இதர வக்கீல்களும், ப்ளீடர்களும் இடி முழக்கம் செய்தார்கள். ஆனால் லாயர் கருங்கல் ராவ் கொஞ்சமும் முகம் கோணாமல் சிரித்த முகத்துடன் எல்லோரையும் அடக்கி, வெகு சாதுர்யமாய்ப் பேசினார். "நாமேன் கோவிச்சுக்கணும்? அவா சொல்றபடியே செய்துடலாமே! ஒங்களுக்கு ஸாத்தியமில்லையா? நானிருக்கேனே! எனக்குக் கோர்ட்டுலே வேலையோ வெட்டியோ பூஜ்யம்!

எனக்குத் தெரிஞ்ச சட்டத்தெ மத்தவாளுக்குச் சொல்லிக் கொடுக்க ஸர்வ ஸம்மதம். அதனாலே வர பலனெ அனுப விக்கறவா அனுபவிக்கட்டுமே! ஏன்?" என்றார். இருந்த லாயர்களெல்லாம் இளிக்க ஆரம்பித்தார்கள். "பலே!" "பேஷ்!" என்றும், "நல்ல ஐடியா, ஸார்!" என்றும் சொல்லிக்கொண்டு வீடு போனார்கள்.

* * *

ஒரு வருஷம் ஆயிற்று. கோணங்கிபுரத்தில் வக்கீல் கள் முகத்திலெல்லாம் அபூர்வ தேஜஸ் வந்துவிட்டது. இதர ஊர்களில் வக்கீல்கள் அழுத முகங்களும் சிந்திய கண்ணீருமாயிருக்கிறார்கள். கோர்ட்டில் கேஸுகள் தாக்கலாவதில்லை. ஜட்ஜும், மாஜிஸ்ட்ரேட்டும் வேலை யில்லாமல் தூங்கி விழுகிறார்கள். ஆனால் கோணங்கி புரத்தில் ஏற்கெனவே வைக்கப்பட்ட கோர்ட்டுகள் போதாமல் புதுக்கோர்ட்டுகள் ஏற்படுத்தப்பட்டு, வருகிற வியாஜ்யங்களைத் தீர்மானிக்க அவகாசமில்லாமல் அவஸ் தைப்படுகின்றன. ஊரெல்லாம் ஒரே கிளர்ச்சி.

ஜாகீர்தார் பாதாள ராவ், சாவுகார் குஞ்சாலாடு தாஸ் குலாப்ஜான் தாஸைக் கண்டபடி திட்டி, மண்டையை உடைத்து, மரணக் காயங்கள் உண்டாக்கியதற்காக அவர் மேல் சர்க்கார் ஒரு போலீஸ் கேஸும், சாவுகார் ஒரு சிவில் டாமேஜெஸ் தாவாவும் செய்தார்கள். ஆறு வக்கீல் களுக்கு ஆறு வருஷம் ஆற்றலிலடங்காத வேலை ஏற்பட் விட்டது. காரணம்? பாதாள ராவ், சாவுகாரைக் கடன் கேட்டார். சாவுகார் உடனே ராயருடைய சம்சாரத்திற்கு என்ன வயதென்று கேட்டார். ராயர் உறுமினார். ஆனால் பணம் முடையானதால் நாற்பது வயதென்றார். சாவுகார் மறுபடியும், அந்த அம்மாள் மாதம் தவறாமல் ஸ்நானம் செய்து வருகிறாளா என்று கேட்டார். ராயர் பற்களைக் கடித்தார்...பணம் வேண்டுமே? "ஆம்" என்று பதி லுரைத்தார். சாவுகார், ராயர் சம்சாரத்தை டாக்டர் சோதித்துக் கர்ப்பவதியில்லை யென்று ஸர்டிஃபிகேட் கொடுத்தால் கடன் கொடுப்பதாகச் சொன்னார். ராயர் மீசையைக் கடித்துக்கொண்டு, தாம் உட்கார்ந்திருந்த

நாற்காலியை எடுத்து சாவுகார் மண்டையைத் திறந்து, அவர் குலம் கோத்திரம் முதலியவைகளைக் குறித்துத் தமக்குத் தெரிந்தவரையில் சொல்ல ஆரம்பித்தார்...... கடன் விஷயம் மலையேறிவிட்டது...சாவுகார் மேல் தவறு இல்லை. அவர் சட்டத்தைத் தெரிந்துகொண்டு, 'கர்ப்பத்தில் இருக்கும் ஆண் சிசுவுக்கும் குடும்ப சொத்தில் சம பாகம் உண்டு என்பதை அனுசரித்துச் செய்த விசாரணையின் பலன் கபால மோக்ஷம்......!

அண்ணு அய்யர் குமாரன் அம்பிப் பயல் பள்ளிக்கூடத்தில் வாசித்து வந்தான். வயது பத்து. திடீரென்று ஒரு நாள் ஐயரைப் பார்த்து, "அப்பா! நீ சரியா கணக்கு வச்சு இருக்கயோ?" என்ருன். அய்யரவாள் "ஏண்டா? ஊளற்ரே கிடந்து?" என்ருர். அம்பிப் பயல் "இல்லேப்பா! நாம் அவிபக்த குடும்பமோன்னே! நீ என் பாகத்தைக் கண்டபடி செலவு செய்யக்கூடாதேயில்லையோ! ரேஸ், பந்தயம், தாஸி..." பையன் சொல்லி முடிப்பதற்குள் அய்யர்வாள் கையிலிருந்த கழி முறிந்துவிட்டது. பையனுடைய தாயாராகிய அர்த்தநாரி அம்மாள்......பிரவேசமாகிப் புருஷனை வெகுவாய்க் கண்டிக்க, ஐயர் அவளை விரட்டக் கையைத் தூக்க, கூட்டம் கூடிவிட்டது. அடுத்த வாரம் அம்பி என்னும் மைனருக்காக அர்த்தநாரி அம்மாள் கார்டியனுயிருந்து அண்ணு அய்யர்மேல் குடும்பச் சொத்தைப் பாகப் பிரிவினை செய்ய வேண்டுமென்று தாவா செய்யப்பட்டது. மேலும் தன்னை அடித்ததற்காக மைனர் அம்பி தகப்பனுர் மேல் ஒரு கிரிமினல் கேஸூம், தன்னை அடிக்கக் கை ஓங்கியதற்காக அர்த்தநாரி அம்மாள் தன் புருஷன்மேல் ஒரு அஸ்ஸால்ட் கேஸூம் போட்டார்கள். அரை டஜன் வக்கீல்களுக்கு அமோகமான வேலை......

கஜகர்ணக் கரையாளர் பக்கத்து ஊரிலிருக்கும் பதஞ்சலிப் பண்டாரத்தினிடம் பதினுயிரம் ரூபாய் வாங்கிக்கொண்டு பிராமிஸரி (அண்டிமாண்டு) நோட்டுக் கொடுத்தார். அதில் 4-அணுவுக்கு வெறும் தபால் ஸ்டாம்பை

ஒட்டி அதன்மேல் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். பண்டாரம் பணத்தைக் கேட்டார். கரையாளர் கையை விரித்தார். பண்டாரம் அண்டிமாண்டை எடுத்து மிரட்டினர். கரையாளர், 'கல கல' வென்று சிரித்து, "ரெவினியூ" என்று எழுதாமல் வெறும் தபால் ஸ்டாம்பு ஒட்டப்பட்ட அண்டிமாண்டை உடைப்பில்தான் போட வேண்டுமென்ருர். பலத்த கலகம் நடந்தது. இருபதுபேர் ஆஸ்பத்திரிக்குச் சென்ருர்கள். கரையாளர்மேல் ஸிவில், கிரிமினல் இரண்டு விதமான தாவாக்கள். பண்டாரத்தின்மேல், கலகம் செய்து காயப்படுத்தியதற்காகக் கேஸு. வக்கீல்கள் பாடு கொண்டாட்டம்.

இதேமாதிரி கோணங்கிபுரத்தில் கண்ட இடமெல்லாம் சண்டையும் சச்சரவுமாய், இருக்கிற வக்கீல்கள் போதாமல் வெளியூரிலிருந்தும் வர ஆரம்பித்தார்கள். "ஸாம்பாரில் ஏன் உப்பு அதிகம்?" என்று பெண் சாதியைப் புருஷன் கேட்பதற்குப் பயம். எங்கே உடனே தனக்குத் தனி ஜீவனும்சம் ஏற்பாடு செய்யச் சொல்லுவாளோ என்று புருஷனுக்கு நடுக்கம். இரண்டு சாக்ஷிகளுடன் எழுத்து மூலமான ஆதாரமின்றிக் காலணுவும் கைமாறுவதில்லை. அதட்டிப் பேசினல் அவதூறு கேஸு. அண்டிமாண்டுகளையும் ரசீதுகளையும் பத்திரங்களையும் எப்படி எழுதினுல் செல்ல வொட்டாமல் செய்யலாமென்று ஸதா முயற்சி. ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒரு பாகப் பிரிவினை தாவா. வீட்டுச் செலவுக்குக் காசு கொடுக்கும் புருஷனுக்குச் சட்டப்படி ரசீது கொடுத்து விட்டுத் தான் மனைவி பெற்றுக் கொள்ளலாம்.

சட்டம் தெரிந்து கொண்டதாக நினைத்துக் கொண்டு, அநேகம்பேர் தாங்களே விக்கிரய பத்திரங்களையும், அடமானப் பத்திரங்களையும், இன்னும் பலவிதமான பத்திரங்களையும் எழுத ஆரம்பித்து, அடி நிலத்தை விட்டு மேற் கூரையையும், குடிவாரத்தை நீக்கி மேல்வாரத்தை மாத்திரம் செப்பியும், குத்தகையை அடமானமாகவும், அடமானத்தை விக்கிரயமாகவும் குளறியடித்ததில் ஒரு

வீட்டுக்கு ஒன்பதுபேர் சொந்தக்காரர்களென்று முன்வர ஆரம்பித்தார்கள். கோணங்கிபுரம் முழுவதும் எங்கே பார்த்தாலும் சட்டப் பேச்சும் சட்டக் கல்வியும்தான்.

கருங்கல் ராவுக்குக் காலையிலிருந்து இரவு வரையில் கணப்பொழுதும் ஓய்வில்லை. கட்டுகளை வைக்க இடமில்லாமல் கஷ்டப்படுகிறார். அவரிடத்தில் முப்பத்தேழு ஜூனியர்கள் பகலும் இரவும் உழைத்து வருகிறார்கள். பணம் மலையாய்க் குவிகிறது. அந்த ஊர் வக்கீல் சங்கத்திற்கு ஆயுள்வரை அக்கிராசனாதிபதியாய் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார்.

நேற்றுச் சாயந்திரம் ஏதோ ஒருவிதமான சேதி என் காதில் பட்டது. அதாவது அவ்வூர்ப் பொது ஜனங்களெல்லாம் பெரிய கூட்டம் கூடி அதில் கருங்கல் ராவைக் கண்ட துண்டமாய் வெட்டிக் கசக்கிப் பிழிந்து காளவாயில் போட்டுக் கொளுத்திவிட வேண்டுமென்று பிரேரேபித்தார்களாம்.

இதை எப்படியோ அறிந்துகொண்ட கருங்கல் ராவ், முன்பு மந்திரிகள் செய்த பிரசங்கங்களைப் பத்திரிகைகளிலிருந்து கத்தரித்துப் பையில் போட்டுக் கூட்டத்தின் தலைவருக்கு அனுப்பினாராம். கூட்டம் அலங்கோலமாய் முடிந்து, மந்திரிகளை வரவேற்புச் செய்தவர்கள் தங்கள் தங்கள் வீடுகளை முற்றிலும் தாளிட்டுக்கொண்டு உள்ளே இருக்கிறார்களாம்.

1. கோர்ட்டு

2. நியாயஸ்தலத்தில் நடக்கும் ரஸமான விஷயங்கள்

3. டிஸ்மிஸா? டிக்கிரியா?

4. 'ஸ்கீம்' ஸுட்

5. விநாயகர் தகராறு

6. கேஸ் ஜயித்தது—ஆனால்

7. சகுணமாவது, மண்ணாங்கட்டியாவது!

8. அவதூறு வழக்கு

9. சாட்சி விசாரணை

# 1. கோர்ட்டு

நமது நாட்டிலும் இதர நாடுகளிலும், தொன்று தொட்டு, நாட்டை யாளும் அதிபதிகள், சண்டைகளையும், சச்சரவுகளையும் தீர்த்து வைக்க நியாய ஸ்தலங்களை ஏற்படுத்தி வந்திருக்கிறார்கள். இக்காலத்து நியாயஸ்தலங்கள் யாவற்றையும் விளக்கிக் கூறுவதற்கு "கோர்ட்டு" என்னும் ஆங்கிலப் பதம், தேசமுழுவதும் எல்லாப் பாஷைகளிலும் அனுஸரிக்கப்பட்டு வருவதால் இனி நாமும் அந்தப் பதத்தை உபயோகப் படுத்துவோம்.

ஸாதாரணமாய்க் கோர்ட்டு விஷயமாய்ப் பேசுபவர்களெல்லாம், மிகுந்த கௌரவத்துடனே; பயத்துடனே, பெருமையுடனே பேசுவது வழக்கம். பக்கத்து வீட்டுப் பங்கஜம் காலை எழுந்ததும் செய்கிற ஆர்ப்பாட்டம், தெரு முழுதிலும் முழங்குகிறது. ஈரமான கட்டை, அடுப்பில் புகைந்து கொண்டு ஸரியாய் எரியாவிட்டால் "ஐயோ! இதென்ன சனியன்! அவர் வந்துட்டா என்ன செய்வேன்? கோர்ட்டு வேளைக்குள்ளே இந்த அரிசி வேகாதுபோல இருக்கே!" என்று முணு முணுப்பாள். கோடியாத்துக் கோமளம் வாசலில் வந்து, காலையில் தயிர் விற்றுவிட்டுப் போன கன்னடியன் வந்து காசு கேட்கும் போது, "என்னடா அவசரம்! நான்தான் பறந்துண்டு இருக்கேனே! கொஞ்சம் பொறுத்து வரக்கூடாதா! அவர் கோர்ட்டுக்குப் போற சமயமாச்சே!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே போகிறாள். எதிர் வீட்டு எச்சம்மாள், சாயங்காலம், தங்கள் வீட்டுக்கு வந்திருக்கும் சீனுப் பாட்டியிடம் சிறிய குரலும் பெரிய குரலுமாய், "எனக்கு ஒண்ணுமே தோணலே. பாருங்கோ! நாலு மணிக்கெல்லாம் 'திடீர்'னு அவர் கோர்ட்டுலேந்து ரிக்ஷாவிலே வந்து எறங்கினார். நேரா மாடி மேலே போயி, படுக்கையெ விரிச்சுப் படுத்துண்டார். போயி என்னுன்னு கேட்டா, இன்னிக்கிக் கோர்ட்டுலே ரொம்...ம்...ம்...ப வேலையாம். தலை அப்படியே சுத்த ஆரம்பிச்சுதாம், ஜட்ஜுண்டெ சொல்லிட்டு வந்துட்டாராம்" என்கிறாள். கடனை வாங்கி

விட்டுத் திருப்பிக் கொடாத கங்காதர ஐயரைக் கஸ்தூா செண்டு ஸாவுகார், "இதோ பாரு! நீ குறியா நம்போ ரூபாய்கி கொடுக்ரு. இல்லே காட்டி உன்கு கோட்லே இசுக்கரு" என்று மிரட்டுகிருன். பரிமள ரங்க ப்ரஸன்ன ராகவ தாதாசாரியார் "ஆஹா! என்ன அக்ரமம்! நம்ம பரம்பரையார் திவ்ய தேசத்துலே, இந்தத் தெங்கலையாருக்கு இவ்வளவு போக்கிரித்தனமா? ஸ்ரீசைல தயா பாத்ரத்தெ கொண்டுவரப் பாக்கருளே! சே! சே! இதெ விடக்கூடாது. மூணு கோர்ட்டும் ஏறிப் பார்த்துட வேண்டியது. சீமை அப்பீலுக்கும் தயாராய் இருக்க வேண்டியது தான். என் சொத்தெல்லாம் போனாலும் ஸரிதான்..." என்று பல்லைக் கடிக்கிருர். கரளகூற பாட்டி கனகவேங்கட நாகய்ய செட்டியார், "ப்ரதிவாதி பயங்கர காண்டூரி கர்ண கடோராச்சாரியாரைப் பார்த்து, "ஸ்வாமி! மீறு ஏமி பயப்பட ஒத்தூ...ண்...டினி. மன ஸம்ப்ரதாயமு கானு மீகுகாவலசின. டப்பு மேமு இஸ்தா......மண்டினி......கடாபட்டி கோர்ட்டு வறகு போயேதி...அப்யந்தரம் லேக...மீறு பயபட ஒத்து..." என்று உறுமுகிருர். சாக்ஷி சொல்ல வந்த காங்கிரஸ் வாலண்டியர் சாம்பசிவனைச் சுந்தரராவ் நாயுடு குறுக்குக் கேள்விகள் கேட்கும்போது, "மிஸ்டர்! இது கோர்ட்டு! தெரியுமா? காங்கிரஸ் ஹவுஸ் இல்லெ! பீச் மீட்டிங் இல்லெ! ஸரியா பதில் சொல்லும்" என்று சீறுகிருர்.

இப்படி யெல்லாம் அநேகவிதமான இடங்களில், அநேகர் வாய்களிலிருந்து கோர்ட்டுகளைக் குறித்துப் பேசப்படும் வார்த்தைகளைக் கேட்கிருேம். ஆனல் ஒருவரும் கோர்ட்டுகளைக் குறித்து வேடிக்கையாகவோ விநோதமாகவோ பேசி நாம் கேட்பதில்லை. ஏன்? கோர்ட்டுகளில் விநோதமே என்றும் இருப்பதில்லையா? நூதனமானவையும், நகைச்சுவை அடங்கியதுமான ஸம்பவங்கள் அங்கு நிகழ்வதில்லையா?...

நன்ருய் நிகழ்கின்றன. பிரதிதினமும் ஏதாவது விநோதமான சம்பவம் நிகழ்கிறது. யோசித்துப்

பார்க்கும்போது, கோர்ட்டில் மேலே உட்கார்ந்திருக்கும் மாஜிஸ்ட்ரேட்டும் ஜட்ஜூம், கீழே உட்கார்ந்திருக்கும் கிளர்க்கும் சிரஸ்ததாரும், நம்மைப்போன்ற மனிதர்கள் தானே?...அப்படி யிருக்கும்போது நமக்கிருக்கும் குணம் குறைகளும் குற்றங்களும், அவர்களுக்கும் இருக்க வேண்டியது முறையே யல்லவா? நமது குறைகளையும் குற்றங்களையும் கண்டு நாமே நகைத்திடாவிடில் வேறு யாருக்கு அந்த உரிமை உண்டு? நம்மைப் பார்த்து நாமே நகைக்கும் சக்தி வாய்ந்திடில் நமனையும் பார்த்து நகைக்கலாமே! அப்படி யிருக்க இந்த நியாய ஸ்தலங்களையும், நியாயவாதிகளையும், நியாயாதிபதிகளையும் குறித்தும், கண்டும், நகைப்பது அரிதா? நகைச்சுவை யறியாதவன் நடைபிணம்; ஆனந்தம் அறியாதவன் ஆந்தை— ஆகையால் நன்ருய் நகைத்து நம் நாளை நன்னாளாய்க் கழிப்போம்.

ஸரி! ஸரி! ரொம்ப ஸரி! நான் சொன்னேனே யென்று நேராகப் போய்க் கோர்ட்டில் நுழைந்து ஜட்ஜைப் பார்த்து "ஹி ஹி ஹி ஹீ...ஹீ" யென்று சிரித்து விடாதீர்கள்...ஆபத்துதான். நீங்கள் சிரித்தால் உங்களுடன் சேர்ந்து சிரிக்கும் ஜட்ஜுகளிருந்த காலம் மலையேறி மறைந்துபோய் விட்டது. இப்பொழுது காரணத்தோடு சிரித்தாலே கல்தா கிடைக்கும். காரணமின்றிச் சிரித்தாலோ, காராக்ரஹவாஸம்கூடக் கிடைத்தாலும் கிடைக்கும். ஆனல் "சிரஸ்ததாரைப் பார்த்துச் சிரிக்கிறேனே"—என்கிறீர்களா? வேண்டவே வேண்டாம். சிரஸ்ததாரைப் பார்த்தும் சிரிக்க வேண்டாம். அமுல்தாரைப் பார்த்தும் அழ வேண்டாம். ஸ்வாமீ! மொத்தத்திலே டபேதாரைப் பார்த்துக்கூடச் சிரிக்கவேண்டாம்!...உடனே கையை நீட்டுவான். வீணுக எதற்கு இந்தப் பஞ்ச காலத்திலே? உங்களுக்குச் சிரிக்க வேண்டுமானல், நான் கோர்ட்டு விஷயங்களைப் பற்றி எழுதியிருப்பதைப் படித்துப் படித்து, வேடிக்கையாயிருந்தால் தாராளமாய்ச் சிரியுங்கள்......வேடிக்கையாயிராவிட்டால் என்னைப் பார்த்துச் சிரிக்க வேண்டாம். சிரித்தீர்களோ, உங்களைக் கோர்ட்டிலே பார்த்துக் கொள்வேன்...நமஸ்காரம்!

# 2. நியாயஸ்தலத்தில் நடக்கும் ரஸமான விஷயங்கள்

"கோர்ட்டு என்றால் நியாயஸ்தலம்: அதாவது விவாதங்களும் சச்சரவுகளும் தீர்மானம் ஆகிற இடம். அங்கே நாலுதிக்குகளிலிருந்தும் ஜனக்கூட்டம் சேர்வதால், கவனிக்கக்கூடிய விஷயங்கள் அநேகம் நடக்கின்றன. ஒருவருக்குப் பொழுது போகாவிட்டால், ஏதாவது ஒரு கோர்ட்டுக்குப் போய் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தால் பொழுது போகிறது தெரியவே தெரியாது. என்ன வேடிக்கை என்பீர்களோ?

சாதாரணமாய் எங்காவது ஒரு சண்டை நடந்தால் எவ்வளவு சீக்கிரம் கூட்டம் கூடிவிடுகிறது? சண்டை செய்கிறவர்கள் என்னவோ இரண்டுபேரோ, சில வேளைகளில் மூன்று பேரோதான்......மற்றவர்கள் யாவரும் வேடிக்கை பார்க்கிறவர்கள்...பழமொழிகூட இருக்கிறதல்லவா...'தெருச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி' என்று. ஒரு சண்டை நடக்கிற இடத்துக்கே இவ்வளவு ஸ்வாரஸ்யமென்றால் நூற்றுக் கணக்கான சண்டைகள் நடந்து தீரும் இடமாகிய கோர்ட்டு எவ்வளவு அதிக ஸ்வாரஸ்யமான இடமாயிருக்கவேண்டும்?

### ஸ்வாரஸ்யத்தைக் காணுமிடம்

கோர்ட்டுகளில், ஜட்ஜுகள் உட்கார்ந்து விசாரணை நடத்தும் இடங்களைவிட, அவைகளுக்கு வெளிப்புறத்திலே உள்ள இடங்கள் அதிக ஸ்வாரஸ்யமானவை. இவ்வளவு ஸ்வாரஸ்யமான இடங்களுக்கு நமது தமிழில் ஒரு சுருக்கமான பெயர் இல்லாத விஷயம் வருந்தத் தக்கதே. இங்கிலீஷ் பாஷையில் இந்த இடங்களுக்கு காரிடார்ஸ் என்று வெகு சுருக்கமான பதமிருக்கிறது. ஒருவேளை தமிழில் அம்மாதிரிப் பதம் இருக்கலாம். எனக்குத் தெரியாது.

அதனுலேதான் கோர்ட்டுக்கு வெளிப் புறங்களில் வேடிக்கைகள் அதிகமேயன்றி உட்புறத்தில் அவ்வளவாய் இல்லையென்று சொல்ல வந்தேன்.

ஒரு நாள் காலையில் 10, 10-30 மணிக்குப் போஜனம் செய்துவிட்டுக் கோர்ட்டுக்குப் போகிருேமென்று வைத்துக் கொள்ளுங்கள். உள்ளே நுழைந்ததும் கொஞ்சம் பிரமிப்பாய்த் தோன்றுகிறது. கிழக்கு மேற்குக்கூட மறந்து விடுகிறது. தப்பித் தவறி யாராவது ஒரு பில்லைச் சேவகன் நாமிருக்கும் திக்கை நோக்கி "ஸைலன்ஸ்!" என்று அதட்டிஞல் வயிறு "கடபடா" என்கிறது. கொஞ்ச நேரம் கழித்து ஒருமாதிரித் தைரியம் பிறந்ததும் சுற்று முற்றும் பார்க்கிருேம்.

"ஜட்ஜ் வருகிருர்!"

ஒருவன்—ஆண் பிள்ளை—பாவாடை உடுத்திக்கொண்டு, ஒரு பெரிய வெள்ளித் தடியைப் பிடித்துக்கொண்டு ஓடிவருகிருன். அவனைத் துரத்திக்கொண்டு ஒரு வயதான பெரியவர் கறுப்பு உடை காற்றில் பறக்க ஓடி வருகிருர். ..."பாவம்! அவருடைய தடியை இந்த அயோக்கியன் திருடிக்கொண்டு ஓடி வருகிருனே; அவனைப் பிடித்துக் கொடுக்கலாம்" என்று ஏதாவது பயித்தியக்காரத் தனம் செய்தோமோ—குடிகெட்டுப் போச்சு! நேராக ஜெயிலுக்குப் போக வேண்டியதுதான். அந்த வயதான பெரியவர்தான் ஜட்ஜு. வெகு அவசரமாகக் கோர்ட்டுக்குப் போகிருர். வெள்ளித்தடி எடுத்து ஓடுகிறவன் அவருடைய சோப்தார், அதாவது வழிகாட்டி விக்நேச்வரர்!

மெள்ள மெள்ளப் போய் ஒரு கோர்ட்டுக்குள்ளே என்ன நடக்கிறதென்று பார்க்கிருேம். ஒரே சமயத்தில் இரண்டு பேர் எதிர்எதிராய் நின்றுகொண்டு ஒருவரோடு ஒருவர் பலமாய்ச் சண்டை போடுகிருர்கள். ஜட்ஜ் உட்கார்ந்து கொண்டு காதாரக் கேட்கிருர். சண்டை பலக்கிறது; அடிதடியாய் விடும்போலிருக்கிறது. நமக்கே

பயம் தோன்றி வெளியே ஓடிவந்து விடுகிறோம். சிறிது நேரத்திற்கெல்லாம் உள்ளே சண்டை செய்த இரண்டு வக்கீல்களும் கோர்ட்டுக்கு வெளியே வருகிறார்கள். ஒருவரோடு ஒருவர் ஸகஜமாய்ப் பேசிக்கொண்டும் சிரித்துக் கொண்டும் இருக்கிறார்கள். இதென்னவென்று ஆச்சரியப் படுகிறோம். உள்ளே நடந்தது நாடகம்; சொந்தச் சண்டையில்லை.

## வக்கீலும் கக்ஷிக்காரனும்

இன்னொரு பக்கம் போகிறோம். அங்கே ஒரு கக்ஷிக் காரன் ஒரு வக்கீலைப் பிடித்துக்கொண்டு, "ஏன் சுவாமி? நிச்சயமாய் ஜெயிக்கும் இண்ணு சொன்னீங்களே; ஜட்ஜு கேக்காமலே தள்ளிட்டாரே!" என்று கேட்கிறான். அதற்கு வக்கீல், "ஓமக்கு எத்தனை தரம் சொல்லற தய்யா? புரியல்லே? இந்த ஜட்ஜு வாண்டாம் வாண் டாம் என்னு அடிச்சுண்டேனே—நீர் தானே—பறந்தீர்! இவருக்கு ஊரிலே இருக்கரவாளெ யெல்லாம் ஜெயிலே தள்ளிடணும் என்னு ஆசை. ஜாமீனில் விடுதலை செய் யவே மனம் வராது. போலீஸ்காரன் வார்த்தை வேத வாக்யம்: நாமென்ன செய்யலாம்?" என்கிறார். "பின்னே, நிச்சயமா ஜயிக்கும் என்று சொன்னீர்களே?" என்று கக்ஷிக்காரன் ஊளையிடுகிறான்.

அதற்கு வக்கீல், "இந்த ஜட்ஜிடம் ஜெயிக்குமென்னு சொன்னேன்? சரியான ஜட்ஜிடம் ஜெயிக்கும்தான்!" என்று சொல்லிக்கொண்டே நழுவுகிறார். கக்ஷிக்காரன் உறுமிக்கொண்டே அவர் கவுனைப் பற்றிக்கொண்டு பின்னால் போகிறான். நாம், "அட ராமா! கேஸ் போடு முன் எந்த ஜட்ஜு முன் வருமென்று ஆரூடம் பார்த்தா போடவேணும்?" என்று நினைத்துக்கொண்டே அப்பால் போகிறோம்.

## மற்றொரு புறம்

ஒருவன் வெகு வேகமாய்க் கோபக் குறிகளுடன் வருகிறான். பின்னால் மற்றொருவன், "வேண்டாம்,

வேண்டாம்! நில்லும், நில்லும்!" என்று மன்றாடிக் கொண்டு ஓடி வருகிறான். நின்று கொண்டு பேச்சு நடக்கிறது. ஒருவன் மிரட்டினவாறே போகிறான். மற்றவன் இரக்கமாய் வேண்டிப் பேசுகிறான். இப்படியே இருவரும் போகிறார்கள். இவர்கள் யார்? கடன் கொடுத்தவனும் கடன் வாங்கினவனும். ஆனால், கொடுத்தவன் யார்? "இதைக்கூடக் கேட்க வேண்டுமா? என்ன முட்டாள்-கேள்வி?" என்கிறீர்களா? நீங்கள் நினைப்பதுதான் தப்பு. மிரட்டுகிறவன், கடன் வாங்கினவன். வேண்டிக் கொள்கிறவன், கொடுத்தவன். "ஏனப்படி?" என்றால், காலத்தின் போக்கு அப்படி! இதுவும் ஒரு வேடிக்கைதானே? பிசினாறி ஐயர் பிக்ஷாண்டி ஐயங்காருக்குப் பதினாயிரம் ரூபாய் கடன் கொடுத்துவிட்டு அவர் பின்னாலேயே போய்க்கொண்டிருக்கிறார். "நீ எங்கிடப் போனாலும், மீனாக்ஷீ! உன்கூட நான் வருவேன்!" என்று என் நண்பர்—ஒரு மலையாளி—சீமைக்குப் போய்ப் பாடக் கற்றுக்கொண்டு வந்தார். அந்தப் பாட்டில் சொன்ன மாதிரி, பிக்ஷாண்டி ஐயங்கார் எங்கே போனாலும் பிசினாறி ஐயரைப் பின்னாலேயே பார்க்கலாம். கேட்டுக் கேட்டுப் பார்த்தும் காலணா பெயரவில்லையாதலால் பிசினாறி ஐயர் பிக்ஷாண்டிமேல் கேஸ் போட்டார். வக்கீல் கருங்கல் ராவுக்கு ரூபாய் 500 பீஸ் கொடுத்தார். கேஸ், விசாரணைக்கு வந்துவிட்டது. ஐந்து நிமிஷத்தில் கேஸ் எடுக்கப் போகிறார்கள். அந்தச் சந்தர்ப்பத்தில்தான் நாம் பார்த்த காட்சி. மிரட்டினவர் பிக்ஷாண்டி. நடந்ததென்னவென்றால், பிக்ஷாண்டி கையில் 1000 ரூபாயை வைத்துக்கொண்டு பிசினாறி ஐயரிடம் போய், "இதை வாங்கிக்கொண்டு என்னை விட்டு விடுகிறீரா, இல்லாவிட்டால் நேராகப் போகட்டுமா?" என்கிறார். "எங்கே?" என்று பிசினாறி கேட்க, "என் வார்சுதாரான அஃபிஷல் அஸைனியிடம்" என்கிறார். "ஐயா! ரொம்பக் குறைவாச்சே!" என்று பிசினாறி வேண்டுகிறார். "ஆனால் இதோ போகிறேன்" என்று பிக்ஷாண்டி மிரட்டி நாலடி எடுத்து வைக்கிறார். "வேண்டாம், வேண்டாம்" என்று பிசினாறி பிடித்திழுக்கிறார். இதுதான் நாம் பார்த்த

நாடகம். கடைசியில், "முடிவென்ன?" என்ருல், பிசிஞறி வக்கீலைக் கேட்கிருர். கருங்கல் ராவ் ஒரு பெரிய ஏப்பம் விட்டு, "பேசாமல் வந்ததை வாங்கிக் கொள்ளுமய்யா!" என்கிருர். அவ்வளவுதான். பிசிஞறி ஐயர் கணக்குப் புஸ்தகத்தில் பற்று பதினருயிரம், வரவு ஆயிரம்.

## ஒரு பள்ளிக்கூடம்

இன்னுமொரு பக்கம் போனல், ஒரு பெரிய கூட்டம் தெரிகிறது. கிட்டப் போய்ப் பார்த்தால் ஒரு வக்கீலும், அவருடைய கக்ஷிக்காரரும் பள்ளிக்கூடம் நடத்துகிருர்கள். நம்மைக் கிட்டச் சேர்க்கமாட்டார்களாகையால், தூரத்திலிருந்து கவனிக்கலாம். கும்பலாயிருப்பவர்கள் சாட்சி சொல்ல வந்தவர்கள். அவர்களுக்கு நன்ருய்ப் பாடம் கற்பித்தாகிறது. வக்கீல் கோர்ட்டுக்குள் போய் விடுகிருர். கக்ஷிக்காரர் கபாலிக் கவுண்டர், கையிலிருந்து ரூபாயும் நோட்டுமாய் எடுத்துப் பட்டுவாடா செய்கிருர். சாக்ஷிகள் வாங்கிக்கொண்டு கோர்ட்டுக்குள் வருகிருர்கள். "என்ன சொல்லுகிருர்கள்?" என்று உள்ளே போய்க் கேட்போம்.

ஒரு ஷோக்கு ஆஸாமி வந்து வாக்குமூலம் கொடுக்கிருர். கொஞ்சமாவது கூசாமல் கபாலிக் கவுண்டரைக் கட்குடியனென்றும், சதா குடிப்பதே அவருக்கு வேலையென்றும் சொல்லுகிருர். தானும் கூடச் சேர்ந்து குடிப்பதாகவும் ஒப்புக்கொள்ளுகிருர்.

ஒரு தாசி வந்து கபாலிக் கவுண்டர் தன் வீடே கதியாயிருப்பதாகவும், தனக்குக் கணக்கற்ற நகைகளும் சேலைகளும் கொடுத்ததாகவும், தன்னைப் பல ஊர்களுக்கு ஷோக்காய் அழைத்துப் போனதாகவும் சொல்லி அவர் பெயரை அடியோடு கெடுத்து விடுகிருள்.

இன்னெரு பேர்வழி வந்து கவுண்டர் ஒரே தாசியுடன் திருப்தி அடயவில்லையென்றும், தனக்குத் தெரிந்து 15 தாசிகளை வைத்திருந்தார் என்றும் ஓங்கி அடிக்கிருர்.

மற்ெருரு சாக்ஷி வந்து, கவுண்டர் தவருமல் கிண்டிக் குதிரைப் பந்தயத்துக்குப் போய் ஆயிரக் கணக்கிலே ரூபாயைப் பந்தயமாடித் தோற்றதைச் சொல்லுகிருர்.

இன்னுமொருவர் வந்து கவுண்டருக்கு ஸதா சீட்டாடுவதும் சூதாடுவதும் தவிர வேறு வேலையில்லையென்றும், ஒரே இரவில் ஆயிரக் கணக்காய்த் தோற்றுவிடுகிருரென்றும் சொல்லுகிருர். நமக்கு இந்த அக்கிரமம் சகிக்கவில்லை.

"அக்கிரமம்"

"இதென்ன அநியாயம்! ஒரு மனிதனிடம் ரூபாயும் நோட்டுமாய் வாங்கிப் போட்டுக்கொண்டு ஐந்து நிமிஷத்திற்குள் சாக்ஷிக்கூண்டில் ஏறி அவனையே பரம அயோக்கியனென்றும், குடியன், சூதாடி, ஸ்திரீலோலன் என்றும் சத்தியம் செய்து அவதூறு பேசுகிருர்களே! இவர்களுக்கு எந்த நரகம் காத்திருக்கிறதோ?" என்று நினைக்கிருேம். வெளியில் வந்து பார்க்கிருேம். நிச்சயமாகக் கபாலிக் கவுண்டர் இந்த ஸாக்ஷிகளை அடித்துத் திட்டிச் சண்டை செய்வாரென்று எதிர் பார்க்கிருேம். ஆனல், இதென்ன புதுமை! அவர்களை அவர் "சபாஷ்! பலே!" என்று தட்டியல்லவோ கொடுக்கிருர்! வக்கீலும் பக்கத்தில் நின்றுகொண்டு பல்லை இளிக்கிருரே! "இதென்ன ஆச்சர்யம்!" என்று விசாரிக்க, கேஸ்-விஷயம் வெளியாகிறது. அந்தக் கேஸ், கவுண்டர் தாமே பணம் செலவு செய்து தன் பிள்ளையைக் கொண்டு தன்மேல் போட வைத்தது. பிள்ளைகளின் தாவா என்னவென்ருல், "எங்கள் தகப்பனர் துர்விநியோகங்கள் பலவிதமாய்ச் செய்து, கடன்களை அக்கிரமமாய் வாங்கி எங்கள் பிதிரார்ஜித சொத்துக்களையெல்லாம் அழித்து விட்டார். அக்கிரம லீலைகளுக்காக வாங்கின கடன்களாதலால் சொத்துக்களில் எங்களுக்குச் சொந்தமான முக்கால் பாகத்தைக் கட்டுப்படுத்தாது!" என்று முறையிடுகிருர்கள். கடன் கொடுத்தவன், "கவுண்டர் மிகவும் யோக்கியர்" என்று கதறுகிருன். 'கள்' என்பதற்கு அர்த்தம்கூட அவருக்குத்

தெரியாதென்றும், அவர் நல்ல நெறியுடையவரென்றும், ஏகபத்தினி விரதரென்றும் அவரைப் பலவாறு சிலாகித்துப் புகழ்கிறான். இப்படி ஒரு கேஸ் நடக்கிறது, வெகு வேடிக்கையில்லையா ?

இன்னொரு பக்கம் போனால் ஒரு பெரியவர் தன் சொக்காயும் கவுனும் காற்றில் பறக்கப் பெருமூச்சு விட்டு அலறிக் கொண்டு ஓடுகிறார். பின்னால் இரண்டு மூன்றுபேர் ஓடுகிறார்கள். ஒன்றும் தோன்றாமல் பின்னாலேயே ஓடிப்போய் நாம் பார்க்கிறோம். பெரியவர் தடுமாறி அடித்து ஒரு கோர்ட்டுக்குள் நுழைந்து மேஜையருகில் போய் மூச்சுத் திணறிக் கொண்டு முணுமுணுக்க ஆரம்பிக்கிறார். சரி, விஷயம் புரிந்தது. இவர் இல்லாத சமயத்தில் இவர் கேஸை எடுத்து விட்டார்கள். ஜட்ஜுக்குப் பயந்து அலறியடித்துக் கொண்டு ஓடியிருக்கிறார். தலையெழுத்து! பாவம்! இவர் வக்கீல் வேலையில் அநேக லக்ஷங்கள் சம்பாதித்தாய் விட்டதாம். "ஏனோ இந்தக் கஷ்டம்?" என்கிறீர்களோ ? பண ஆசை யாரை விட்டது ஸார் ?

## வக்கீல்கள் வம்பு

மற்றொரு மூலையில் ஒரு கூட்டமாய் அநேக வக்கீல்கள், சின்னவாளும் பெரியவாளுமாய் நிற்கிறார்கள். அவர்கள் பேசுவதைக் கேட்க அருகில் போவோம்.

சட்ட சம்பந்தமான விஷயங்கள் தவிர அநேக விதமான புதிய சமாசாரங்கள் நம் காதில் விழுகின்றன. பெரிய வக்கீல்கள் என்று நாம் நினைப்பவர்களில் அநேகர் விசேஷமான சாமர்த்தியமொன்றும் இல்லாமல் அதிர்ஷ்டவசத்தால் முன்னுக்கு வந்து விட்ட விஷயம் இப்பொழுது தான் தெரிகிறது. "இந்த வக்கீலை அந்த ஜட்ஜு தூக்கி விட்டார். அந்த வக்கீல் அளவில்லாத கடன் வாங்கியிருக்கிறார். மூன்றாவது வக்கீல் கேஸைப் படிக்காமலே காலக்ஷேபம் செய்கிறார். நாலாவது வக்கீல் நாயாய்க் குலைத்து நரியாய் ஊளையிட்டு ஜூனியர்களைத் திட்டுவார்.

அஞ்சாவது வக்கீலுக்கும் அவர் மனைவிக்கும் மனஸ்தாபம். இந்த ஜட்ஜு கர்வம் பிடித்தவர். அந்த ஜட்ஜு சட்டம் தெரியாதவர்.'' இம்மாதிரியான பல முக்கியமான அந்தரங்க விஷயங்களைக் கேட்கிறோம். "சே! விஷயம் இவ்வளவுதானா?'' என்று நினைத்துக் கொண்டு அப்புறம் செல்கிறோம். எதிரே வருகிற ஒரு டபேதாரை, "அப்படிப் பேசிக் கொண்டிருந்த வக்கீல்கள் யார்?'' என்று கேட்கிறோம். அதற்கவன் "வேலையில்லாத வக்கீலுங்க ஸார்! எப்போ பாத்தாலும் அங்கேயே நின்னுக்கினு கூச்சல் போட்றதே வேலை: அதுக்கு எங்கதாலி அறுந்து போவுது!'' என்று உறுமிக்கொண்டு போகிறான்.

## கேஸ் ஜயித்த கக்ஷிக்காரன்

இதோ! யாரோ ஒருவன் ஒரு கோர்ட்டை விட்டு வேகமாய் வெளியே வருகிறான். அவனைப் பல பில்லைச் சேவகர்களும், பில்லையில்லாதவர்களும் துரத்திக்கொண்டு வருகிறார்கள். என்ன முயன்றும் தப்ப முடியவில்லை. பையிலிருந்து கொஞ்சம் சில்லறை எடுத்து வீசுகிறான். இரண்டுபேர் போகிறார்கள். இன்னும் கொஞ்ச தூரம் போய் மறுபடியும் காசை வீசுகிறான். இன்னும் இரண்டு பேர் விட்டு விடுகிறார்கள். அவன் மறையும் வரையில் இப்படியே நடக்கிறது.

முதலில் காசு வாங்கிக்கொண்டு வந்தவரில் ஒருவனை "என்ன விஷயம்?'' என்று கேட்டால், ஓடுகிற மனிதன் ஒரு கேஸை ஜயித்த கக்ஷிக்காரனென்றும், துரத்துபவர் 'பக்ஷீஸ்' கேட்கிறவர்களென்றும் தெரிகிறது. அவன் பட்ட கஷ்டத்தைப் பார்த்தால் கேஸைத் தோற்றிருந்தாலே தேவலை யென்று அவனுக்குத் தோன்றியிருக்கும்போலிருக்கிறது. இது ஒரு வேடிக்கை.

இதே மாதிரிச் சில வேளைகளில் ஒரு வக்கீல் கோர்ட்டுக்கு வெளியே வந்ததும், அவரைப் பில்லைச் சேவகர்கள் துரத்துவதைப் பார்க்கிறோம். அதற்குக் காரணம் வேறு.

அப்பொழுதுதான் அவர் சன்னது பெற்றுக்கொண்டு—அதாவது, என்ரோல் ஆகி—வெளியே வருகிறார்.

### பத்திரிகைக்காரர் செல்வாக்கு

'பக்ஷீஸ்' வாங்க அது ஒரு முக்கியமான சமயமில்லையா? ஒரு கிழப் பியூன் வந்து, "ஓங்க அப்பா என்ரோல் ஆனப்போ ஒரு ரூபாய் கொடுத்தாரு!" என்பான். இன்னொருவன் "நீங்கள் இன்னும் 5 வருஷத்துக்குள், சாமி! அட்வகேட் ஜெனரல்" என்பான். மற்றொருவன் ஒரு விதமான அதிகாரத்துடன் கை நீட்டுவான். இன்னுமொருவன், "நான் தானே சாமி, ஓங்க பேரு மேலே முத்திரை குத்தினேன்!" என்பான். கடைசியில் புது வக்கீலுக்கு ஸன்னது வாங்கும் செலவு 650 ரூபாயோடு 'பக்ஷீஸ்' கொடுத்த பத்து ரூபாயும் அதிகப் பற்று.

வேறொரு பக்கம் போனால் பெஞ்சுகளில் வரிசையாய்க் கறுப்பு உடையும், வேறு வர்ண உடைகளுமாய், வக்கீல்களும் லாயர்களும் உட்கார்ந்து பேசிக் கொண்டோ, தூங்கிக் கொண்டோ இருப்பதைப் பார்க்கலாம். தினசரிப் பத்திரிகைகளில் கோர்ட்டு வர்த்தமானங்களை எழுதும் நிருபர்கள் அங்கும் இங்கும் உலாவுவதைப் பார்க்கலாம். அடிக்கடி வக்கீல்கள் அவர்களிடம் போய்ப் பேசுவதையும் பார்க்கலாம். அடாடா, என்ன பல்லிளிப்பு! என்ன வினயம்! சகஜம் தானே? எல்லோருக்கும் தங்கள் பேர் பத்திரிகைகளில் வரவேணுமென்னும் ஆசை இருப்பது ஆச்சரியமா?

## 3. டிஸ்மிஸ்ஸா? டிக்கிரியா?

ஸாதாரணமாய்த் தமிழ் நாட்டில் முதல் முதல் கோர்ட்டுக்குப் போய் வியாஜ்யத்தைத் தொடங்குகிறவனுக்கு வாதியென்று சொல்வது. மலையாள ராஜ்யமிருக்கிறதே—அதாவது, மேற்குக் கடலின் அலைகள்

மோதும் மேன்மை தங்கிய நாடு—அங்கே அவனுக்கு "அநியாயக்காரன்" என்று பெயர்! எவ்வளவு பொருத்தம், பாருங்கள்! தாவாவை அப்பொழுது தான் போட்டான்: அதன்மேல் நம்பர்கூட விழவில்லை! வெளியில் வந்து கொண்டிருக்கிறுன்...பெயர் வந்து விட்டது: அநியாயக்காரன்! விசாரணை நடக்கு முன்னமே இந்தப் பெயர் வந்துவிடுகிறது!

வாதிக்கு எதிரி பிரதிவாதி. வாதிக்கு அனுகூலமாகத் தாவாவை நிச்சயம் செய்தால் அதற்கு 'டிக்கிரி' செய்வது என்று பெயர். பிரதிவாதிக்கு அனுகூலமாகச் செய்தால் 'டிஸ்மிஸ்' செய்வது என்று பெயர். ஒரு பெயர் போன ஜட்ஜ் தம்முன் வரும் தாவாக்களை எல்லாம் கூடிய மட்டில் பாதி 'டிக்கிரி', பாதி 'டிஸ்மிஸ்' செய்வது வழக்கம். இவர் அவ்வாறு செய்வதில் வாதி பிரதிவாதி இருவரும் திருப்தியடைந்து ஸந்தோஷமாய்ப் போவார்கள். இதைப் பார்த்திருந்த மற்ருெரு ஜட்ஜ் தாமும் எளிதில் அதே விதமாய் நற்பெயர் அடையலாமென்றெண்ணித் தாவாக்களை இருதிறத்தாருக்கும் பாதி பாதி அனுகூலம் செய்ய ஆரம்பித்தார். ஆனுல் இவர் அம்மாதிரிச் செய்த தீர்மானங்களில் வாதி பிரதிவாதி இருவரும் அதிருப்தியடைந்து, 'அவர் தீர்மானம் தப்பு, தவறு, புத்திக் குறைவு, புரட்டு, மோசம்' என்று பல வாருய்த் தூஷித்து, இருதிறத்தாரும் அப்பீல் செய்யத் தொடங்கினுர்கள். இதைக் கண்டு அந்த ஜட்ஜ் "கக்ஷிக்காரர்கள் மிகுந்த பக்ஷபாதிகள்" என்று நொந்து கொண்டார்.

எந்த ராஜ்யத்திலாவது, எந்தக் கோர்ட்டிலாவது, எவனுவது தன்னுடைய பக்ஷம் தோற்றுவிட வேண்டுமென்று கோரியதாக நீங்கள் கேட்டது உண்டா? நமது சென்னை ஹைகோர்ட்டில் ஒரு தாவாவில், ஒரு மஹா பிரக்யாதிபெற்ற ஜட்ஜின் முன்னிலையில, இரு திறத்தாரும் அவ்வாறு கோரி, அதற்காக மிகவும் பிரயத்தனப்பட்டதை நான் கண்டிருக்கிறேன்.

நமது சென்னையில் ஸாதாரணமாய் இரும்புச் சாமான் களில் வியாபாரம் செய்பவர்கள் அநேகமாய்ப் போரா மதத்தைத் தழுவிய சாயபுமார்கள். பார்ப்பதற்கு இவர்கள் விச்வாமித்ர மஹரிஷி சராய் அணிந்து கொண்டு தலையை மாத்திரம் மொட்டை அடித்துக் கொண்டு வந்ததுபோல் காட்சி யளிப்பார்கள். அவர் களில் ஒருவரான ஜீவாஜி என்பவர் மற்றொருவரான ஸூல்தாஞ்சி என்பவருக்கு ஏராளமான இரும்புச் சாமான்களை விற்றார். சாமான்களின் மொத்த விலை ரூபாய் 50,000. ஒரு வாரத்திற்குள் ரூபாயைக் கொடுத்து விட்டு, இரும்புச் சாமான்களை எடுத்துப் போவதாக ஸூல்தாஞ்சி ஒப்பந்தம் செய்தார். சாமான்களைத் தயா ராய் ஒரு புறமாய் எடுத்து வைத்து ஜீவாஜி காத்திருந்தார். ஐந்து நாட்களாயின. ஏதோ அமெரிக்காவில் குழப்பம், துருக்கியில் கலகம் என்று காரணங்கள் கிளம்பி, இரும்புச் சாமான்களின் விலை குட்டிக்கரணம் போட்டுக்கொண்டு திடீரென்று குறைந்துவிட்டது. வாங்கின ஐந்தாவது நாள் ரூபாய் 50,000 க்கு ஸூல்தாஞ்சி வாங்கின சாமான் களின் மதிப்பு ரூபாய் 30,000 ஆய்விட்டது. அடுத்த நாள் இன்னும் 5,000 ரூபாய் குறைந்தது. அதற்கு அடுத்த நாளும் அவ்வாறே. பேசின வாரத் தவணை கடந்துவிட்டது. சாமான்களின் விலை மதிப்பு ரூபாய் 20,000 க்கு வந்துவிட்டது. ஸூல்தாஞ்சி சாமான்களின் அருகில் வரவேயில்லை. ஜீவாஜி ஆள் மூலமாய்ச் சொல்லி அனுப்பினார். ஆள் மாத்திரம் திரும்பி வந்தான்; பதிலே இல்லை. கடிதம் எழுதி யனுப்பினார்...பிரயோஜனமே இல்லை. நேராகப் போய்ப் பார்த்தார். ஸூல்தாஞ்சி பல்லை இளித்துப் பலவிதமாய்ப் பேசி, கடைசியில், "நானாவது உன்னிடமாவது சாமானாவது வாங்குகிறதாவது! படா ஜூட் பாத். ஜாவ்! ஜாவ்!" என்றுமுடித்தார்.

விலை ரூ, 18,000 க்கு இறங்கிவிட்டது. பிரமாத மான நஷ்டம் வந்துவிடும் போலிருந்தது. ஜீவாஜி நேராக வக்கீல் வீட்டைத் தேடிச் சென்றார். வக்கீல் வேங்கடா சலபதி ஐயங்கார் சரமாரியாய்ப் பொழிந்தார். கோண

எழுத்தில் அவ்வளவையும் எழுதிக்கொண்ட குமாஸ்தா ஆசூரி ஐயங்கார், அதை அழகாய் அச்சு மாதிரி டைப் செய்து கையெழுத்து வாங்கினர். பிராதும் தாக்கலாய் விட்டது. அதில், ஜீவாஜி தம்மிடம் ஸூல்தாஞ்சி வந்து 1914-ம் வருஷம் ஜுலை மாதம் 20-ந்தேதி ரூ. 50,000 விலையுள்ள இரும்புச் சாமான்களை வாங்கினதாகவும், ஒரு வாரத் தவணைக்குள் ரூபாயைச் செலுத்திச் சரக்குகளை எடுத்துப் போவதாக ஒப்புக்கொண்டதாகவும், ஒரு வாரம் கடந்தும், பலமுறை கேட்டும், ஸூல்தாஞ்சி ரூபாயையும் கட்டாமல் பதிலும் சொல்லாமல் இருந்து, கடைசியில் மோசக் கருத்துடன் தாம் ஒன்றும் வாங்கவேயில்லை என்று சொல்லி விட்டதாகவும், தாம் அந்தச் சாமான்களை எப்பொழுதும் தயாராய் வைத்திருப்பதாகவும் காட்டி, ஸூல்தாஞ்சி அவைகளுக்குரிய ரூபாய் 50,000த்தையும் கொடுத்துவிட்டுச் சாமான்களை எடுத்துப் போகுமாறு கோர்ட்டார் தீர்மானிக்க வேண்டுமென்று கேட்டார்.

ஸூல்தாஞ்சி பதில் ஒன்று தாக்கல் செய்தார். தமக்கு ஜீவாஜியைத் தெரியவே தெரியாது என்றார். அவரிடத்திலிருந்து என்றும் எந்தச் சாமான்களையும் வாங்கவில்லையென்றார். "வாதியின் தாவா முற்றிலும் மோசம், புரட்டு, செல்லத் தக்கதல்ல!" என்று வழக்கம்போல் பெரிய போடு போட்டார்.

நம் ஊர்க் கோர்ட்டுகளில் இம்மாதிரி சிவில் கேஸுகள் எவ்வளவு சீக்கிரம் விசாரணைக்கு வரும் என்பதுதான் உங்களுக்குத் தெரிந்த விஷயமாச்சே! இப்படியும் அப்படியுமாக, இரண்டு வருஷங்கள் சென்றன. உலகமெல்லாம் பெருத்த யுத்தத்தில் ஆழ்ந்து அல்லோல கல்லோலமாயிருந்தது. ஜீவாஜி தாக்கல் செய்த தாவா விசாரணைக்கு வந்தது. ஜட்ஜ் வந்து உட்கார்ந்தார். தாவாவை எடுத்து விட்டார்.

வேங்கடாசலபதி ஐயங்கார் வாதியின் தரப்பில் ஆஜராகி எழுந்து நின்று, கைகளைச் சேர்த்து வைத்துக் கொண்டு, மெல்ல ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

அதே சமயத்தில் சட்டுப் ஐயர் பிரதிவாதியின் தரப்பில் ஆஜராகி எழுந்து அந்த அருமையான ஆர்க் கண்டித் தலைப்பாகையை ஒரு கையால் முன்னும் பின்னும் தள்ளிக்கொண்டு, தம் மைதீட்டிய கண்களை மேலும் கீழும் ஓட்டி மயக்கி ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

ஐயங்கார், ஐயர் :—(இருவரும் ஒரே சமயத்தில்) கோர்ட்டா ருக்கு ஒரு மனு...

ஜட்ஜ் :—என்ன விஷயம் ?

இருவரும் :—(ஒரே சமயத்தில்) தங்கள் மேலான உத்தரவை அனுசரித்து...

ஜட்ஜ் :—யாராவது ஒருவர் பேசக்கூடாதா ?

இருவரும் :—நான் சொல்வதென்னவென்றால்...

ஜட்ஜ் :—அடா...டா...டா...டா...டா !

இருவரும் :—இந்தத் தாவாவை...

ஜட்ஜ் :—(பற்களைக் கடித்துக்கொண்டு) என்ன இது ?

ஐயங்கார் } (ஒரே சமயத்தில்) { ...டிஸ்மிஸ் செய்யுமாறு கோருகிறேன்.
ஐயர் } (ஒரே சமயத்தில்) { ...டிக்கிரி செய்யமாறு கோருகிறேன்.

ஜட்ஜ் :—எனக்கு ஒன்றும் புரியவில்லை...ஐயங்கார்வாள் ! நீங்கள் என்ன சொல்கிறீர்கள் ?

ஐயங்கார் :—நான் சொல்வதென்ன வென்றால் என் கக்ஷிக் காரர் செய்திருக்கும் தாவாவை 'டிஸ்மிஸ்' செய்து விட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஐயர் :—அது கூடாது ! என் கக்ஷிக்காரர்மேல் வாதி கோரி யிருக்கிறபடி 'டிக்கிரி' செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன் நான்.

ஜட்ஜ் :—(மூக்குக் கண்ணாடியை எடுத்துத் துடைத்துப் போட்டுக் கொண்டு) உங்களுக்கு என்ன—பைத்தியமா ?

இருவரும் :—இல்லை.

ஐயங்கார் :—நான் தான் வாதி ; ஆகையால்...

ஐயர் :—நான்தான் பிரதிவாதி ; ஆகையால்...

ஜட்ஜ் :—நான்தான் ஜட்ஜ்; ஆகையால் இருவரையும் ஒரே சமயத்தில் பேச விடமாட்டேன். ஐயங்கார்வாள் ! நீங்கள் கேட்பதென்ன ?

ஐயங்கார் :—என் கக்ஷிக்காரர் வாதி. வாதிதான் முதலில் தாவாவை ஆரம்பிக்கப் பாத்தியதை உடையவர். அவர் ஆரம்பிக்க மாட்டேனென்றால் அவரை யாரும்—கோர்ட்டார் உள்பட—கட்டாயப்படுத்த முடியாது. அவர் தாவாவை 'டிஸ்மிஸ்' தான் செய்யவேண்டும்.

ஐயர் :—என் கக்ஷிக்காரர் பிரதிவாதி. அவர்மேல்தான் தாவா போடப்பட்டிருக்கிறது. அது விசாரணைக்கு வருவதற்கு முன்னமேயே தம்மேல் டிக்கிரி செய்துவிட ஒப்புக்கொள்ள அவருக்குப் பாத்தியதை உண்டு. அவரே எதிர் வாதத்தை வாபீஸ் வாங்கிக் கொண்டால்......

ஐயங்கார் :—நான் என் தாவாவை வாபீஸ் வாங்கிக் கொள்கிறேன்.

ஐயர் :—அது ஒரு நாளும் முடியாது...

ஜட்ஜ் :—சற்றுப் பொறுங்கள்......

[தாவா சம்பந்தமான கட்டுகளைப் படிக்கிறார்.]

ஐயங்கார் :—என் கக்ஷிக்காரர் வரவில்லை.....பம்பாய்க்குப் போய்விட்டார். 'டிஸ்மிஸ்' செய்யவேண்டியது தானே......?

ஐயர் :—என்றைக்குப் போனார் ?

ஐயங்கார் :—முந்தாநாள்.

ஐயர் :—அனால் என் கக்ஷிக்காரர் ஒரு வாரத்திற்கு முன்னமேயே திருவாங்கூருக்குப் போய்விட்டார்...டிக்கிரி ஆகட்டும்.

ஐயங்கார்:—வேண்டுமானால் பிரதிவாதி செலவுத் தொகை வாங்கிக்கொள்ளட்டும்.

ஐயர் :– இதோ பாரும், என் கையில் தாவாத் தொகை, உங்கள் செலவுத் தொகை எல்லாவற்றிற்கும் சேர்த்து என் கக்ஷிக்காரருடைய செக்கு......எடுத்துக்கொள்ளுங்கள்.

ஜட்ஜ் :—(படிப்பதை முடித்துவிட்டு) ஓஹோ! அப்படியா? ...இருக்கட்டும்...ஒப்பந்தம் நடந்தபோது இரும்புச் சாமான்களின் விலை என்ன?

ஐயங்கார் :—ஒப்பந்தமேது? அவர் தான் ஒப்பந்தமே இல்லையென்றாரே?

ஐயர் :—இல்லை, இல்லை. என் கக்ஷிக்காரர் ஞாபகப் பிசகாய்ச் சொல்லிவிட்டார்......பிறகு யோசித்துப் பார்த்ததில் தாவாவில் சொன்னபடி தாம் ஒப்பந்தம் செய்தது ஞாபகம் வரவே, உடனே தாம் தர வேண்டிய ரூபாய் ஐம்பதினாயிரமும், வீணாக வாதி செலவு செய்ய வேண்டி வந்த ரூபாய் இரண்டாயிரமும் சேர்த்து இதோ செக்கு அனுப்பி யிருக்கிறார். சாமான்களை எடுத்துப் போக வண்டிகள் கூடப் பேசித் தயாராக வாதியின் கடையருகில் நிற்கின்றன.

ஐயங்கார் :—ஐயோ, பாவம்! என்ன யோக்யம்! என்ன நாணயம்!

ஜட்ஜ் :—அதெல்லாம் இருக்கட்டும். இப்பொழுது தாவா ஸம்பந்தமான சாமான்களின் விலை என்ன இருக்கும்?

[ஐயங்கார் விடாமல் இருமுகிறார். ஐயர் தம் ஜூனியரைப் பார்த்துப் புருவத்தை நெளிக்கிறார்.]

ஜூனியர் :—(உரத்த குரலில்) கக்ஷிக்காரர் வரவேயில்லை.

ஜட்ஜ் :—ஓஹோ! அப்படியா? இருங்கள்! அடே, டபேதார்! அதோ அந்த மூலையில் நிற்கும் சாயபுவை இங்கே வரச்சொல்லு.

[டபேதார் போய் "ஹாஜி" என்கிற சாயபுவை அழைத்து வருகிறன்...“ஹாஜி” சாக்ஷிக் கூட்டில் ஏறி மிரளமிரள விழிக்கிறர்.)

ஜட்ஜ் :—ஐயா ! சாயபு! நீங்கள் இரும்பு வியாபாரி தானே?

ஹாஜி :—ஆமா ! நாம்போ இந்த கேஷ்லே அல்லாம் தெரிஞ்சான்...நம்போ அந்தச் சரக்கு வாதிக்கிக் கேட்டான், வாதி குடுக்ருன் இல்லே...என்ஞத்துக் குண்ஞ, நம்போ எளுபத் ஆயிரம் குடுக்ருன் சொன்னேம்...சரக் இப்போ லச்ச ரூபா வெலெகீ போரு... ஷண்டே நடக்கறது இல்லே?...வெலெ ரொம்போ ஏறிப்போச்சி...இண்ணிகி கோட்கி தமாஷ் பாக்க நம்ப வந்தோம்...ஷாக்ஷி கீக்ஷி ஒண்ணும் தெரியாத்... ஜஞப்...!

[ஜட்ஜ், சாயபுவைத் திருப்பி அனுப்பி விட்டுப் பின் வருமாறு தீர்மானம் செய்தார்.]

"இந்தத் தாவா இன்று விசாரணைக்கு வந்தது. மிகவும் நூதனமான கோரிக்கைகளை இருதரப்பாரும் சமர்ப்பித்தார்கள். வாதி, தம் தாவாவைத் தள்ளிவிட வேண்டுமென்று தம் வக்கீல் வேங்கடாசலபதி மூலமாய் வேண்டுகிருர். பிரதிவாதி தம்மேல் தாவாவில் கோரியபடி டிக்ரி செய்து விடவேண்டுமென்று தம் வக்கீல் சட்பட் ஐயர் மூலமாய்க் கேட்கிருர். இரு திறத்தாருக்கும் புத்தி நல்ல ஸ்வாதீனமாய்த்தான் இருக்கிறது. தாவா ஸம்பந்தமான இரும்புச் சாமான்கள் 1914-ம் வருஷத்தில் ரூபாய் ஐம்பதினுயிரம் பெறுமானவையாயிருந்து, இப்பொழுது ஒரு லட்சம் ரூபாய்க்கு மதிக்கப்படுகின்றன. வெகுதூரம் யோசித்ததில் பின் வரும் முடிவுக்கு வந்தேன். முதல் முதலில் வாதியே தாவாவை ஆரம்பிக்கப் பாத்தியமுடையவராகையால் அவருக்கே முதலில் பேச உரிமை உண்டு. அவர் எழுந்தவுடன் "என் தாவாவை வாபீஸ் வாங்கிக் கொள்கிறேன்" என்ருல், வேண்டாமென்று சொல்ல எனக்கு அதிகாரமில்லை. தம் தாவாவை நடத்தவோ, நடத்தாமலிருக்கவோ தீர்மானிக்க வாதிக்கு ஸர்வ அதிகாரமுண்டு. ஆகையால் இந்தத் தாவாவை 'டிஸ்மிஸ்' செய்கிறேன். ஆனல் பிரதிவாதிக்கு ஏற்பட்ட சகலமான செலவுகளையும் வாதி கொடுக்கவேண்டியது..."

திர்ப்பளித்த களைப்புத் திருவதற்கு ஜட்ஜ் தம் அறைக்குச் சென்றார். ஐயங்காரும் ஐயரும் சிரித்த படியே ஒருவர் தோளில் ஒருவர் கை போட்டுக்கொண்டு வெளியே வந்தார்கள். "ஹாஜி" சாயபு தாடியை உருவிக் கொண்டு "அரே அல்லாஹ்!" என்று சொல்லிக்கொண்டு மற்றொரு கோர்ட்டை நோக்கிச் சென்றார். ஐரோப்பாவில் சண்டை இன்னும் பலத்து நடந்தது.

# 4. ஸ்கீம் ஸூட்

"ஸ்கீம் ஸூட்" என்றால் தெரியுமா? சாதாரணமாய்ப் பொதுஜன நன்மைக்காக ஏற்பட்டிருக்கும் ஒரு தர்மத்தைச் சரிவரப் பரிபாலித்து நடத்தவேண்டுமென்று கோர்ட்டில் செய்யும் தாவா. அநேகமாய் நமது கோவில்கள் விஷயமாகவே கோர்ட்டுகளில் பெரும்பான்மையான 'ஸ்கீம் ஸூட்டு'கள் போடப்படுகின்றன. கருங்காலிபுரம் காளேச்வரன் கோவிலின் தர்மகர்த்தர்கள் சரிவரக் கோவில் சொத்துகளைப் பரிபாலித்துக் கோவில் விஷயங்களைக் கவனிக்கவில்லை யென்று வைத்துக் கொள்ளுங்கள். சிவராத்திரி உத்ஸவம் நிறுத்தப்பட்டது. அம்மனுக்கு அணிவித்திருந்த வைர ஒட்டியாணமும், நவரத்ன ஹாரமும் திடீரென்று காணாமல் போய்விட்டன. கோவில் மான்யங்களின் வரும்படி, கணக்குப் புஸ்தகங்களிலேயே பதியப்படுவதில்லை. தேவஸ்தானத்தைச் சேர்ந்த கட்டுக்கோப்பு - வீட்டில் தர்மகர்த்தாவின் அபிமான பாரியாள் அரைக்காசும் கொடாமல் அழகாய் வசித்து வருகிறாள். கேட்பாருக்குப் பதிலில்லை. இன்னும் அநேக விதமான அக்கிரமங்கள் நடந்து வருகின்றன. இதற்கெல்லாம் வழி யென்ன வென்றாலோ, "ஸ்கீம் ஸூட்" தான்.

காஞ்சி கோணத்தில் சாரங்கராஜப் பெருமாள் கோவிலில் சொல்லத் தகாத கோளாறுகள் ஏற்பட்டு ஊர் முழுதும் ஒரே குழப்பம். பிரதி தினமும் முப்பத்

தைந்து தேசாந்தரிகளுக்கு வடை பாயசத்தோடு ததி யாராதனை செய்யுமாறு ஏற்பட்டிருக்கும் கட்டளைகளைச் சரிவர நடத்துவதே இல்லை. கட்டளைச் சொத்துக்களை அனுபவிக்கும் தேசாந்தரிகள் யாரென்றால், பத்மநாப பட்டாசாரியாரும், அவருடைய இரண்டு மைத்துனர்களும், மணியக்காரர் மலைப்பிஞ்சு ஐயங்காரும், அவருடைய ஷட்டகரான சர்வ பக்ஷஞசாரியாரும், கோவில் தாஸி களில் குறைந்த வயதுடைய குவலய ஸுந்தரியும், அவள் தாயாராகிய குரங்குவதனியும் தான்! தர்மகர்த்தாக் களோ, இரண்டு பரம்பரை ஹக்குதாரர்கள், பஞ்சபாத்ர பாட்ராசாரியாரும், துர்க்கந்த தாதாசாரியாரும், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய், பெரு மாள் சொத்தைப் போக்யமாய் அமிசை செய்துகொண்டு, தாயார் திருவாபரணங்களை நாரா சந்து ஸவுகாரிடம் அடகுவைத்து, தர்ம வட்டிக்குக் கடன்கள் வாங்கி, தங்கள் வீட்டுக் கல்யாணம் கார்த்திகைகளைக் குறைவின்றி நடத்தி வருகிறார்கள். இதற்கு விமோசன மென்ன?......... ஸ்கீம் ஸுட்!

ஸரி. இந்த "ஸ்கீம் ஸுட்"டை யார் வேண்டு மென்றாலும் போட்டு விடலாமா?—என்றால் முடியாது. காளேச்வரர் கோவில் ஸ்கீம் ஸுட்டைக் காதர் பாச்சா சாயபுவும், கன்னிங்ஹாம் துரையும் போடலாமா? சாரங்கராஜப் பெருமாள் கோவில் ஸ்கீம் ஸுட்டை சங் லிங் ஸு என்னும் சீனா தேசத்துக்காரரும், பஸவராஜப்பா என்னும் லிங்காயத் வீர சைவரும் போடலாமா? கூடவே கூடாது...அந்தந்தக் கோவிலிலிருக்கும் ஸ்வாமி களைத் தொழுபவர்கள் தான் போடலாம். சாதாரண மாய் இரண்டு பேருக்குக் குறையாமல் வாதிகள் முன்வர வேண்டும்.

ஒவ்வொரு ராஜதானிக்கும், சட்டவாதிகள் அதாவது வக்கீல்கள், அட்வகேட்டுகள், ப்ளீடர்கள், அட்டர்னிகள் இவர்களுக்கெல்லாம் தலைமையானவராக ஒருவரை ஸர்க் கார் நியமித்திருக்கிறார்கள். இவர்களுக்கு "அட்வகேட்

ஜெனரல் " என்று பெயர். யாராவது 'ஸ்கீம்' ஸூட் போட வேண்டு மென்றால், முதல் முதலில் எந்த விக்நேச்வர ருடைய வரத்தைப் பெற வேண்டும் என்று கேட்டால்... "அட்வகேட் ஜெனரல்" உத்தரவை அடைந்த பிறகே கோர்ட்டில் தாக்கல் செய்ய முடியும். அந்த மஹா னுடைய அனுமதியின்றித் தாக்கல் செய்யப்பட்ட ஸ்கீம் ஸூட்டுகள் அரைக்கணமேனும் பிழைக்க முடியாது....... வாதிகளுக்கு வாபீஸ் செய்யப்படும்.

சாதாரணமாய் ஸ்கீம் ஸூட்டுகளில் வாதி தரப்பில் ஆஜராகி நடத்தும் வக்கீல்களுக்கு வருமானம் :—

(1) அந்தக் கேஸ் சம்பந்தப்பட்ட கோவிலில் குடி கொண்டிருக்கும் தெய்வத்தின் ஸம்பூர்ண அனுக்ரஹம்.

(2) வேறு ஏதாவது கோவிலில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியின் பிரஸாதம்—இது வைஷ்ணவக் கோவிலா யிருந்தால் ஏதோ சுமாராயிருக்கும். சிவன் கோவிலா யிருந்தால் வில்வமும் சாம்பலும்தான்!

(3) தாவாவில் சம்பந்தப்பட்ட கோவிலின் தர்மகர்த் தர்கள், அர்ச்சகர்கள், பட்டர்கள், குருக்கள், தாஸ நம்பிகள், தாஸிகள், மணியக்காரர்கள் முதலியவர் களுடைய தீர்க்கமான விரோதமும், திட்டுகளும்.

ஆனால் பிரதிவாதிகளான தர்மகர்த்தாக்களின் தரப் பில் கேஸை நடத்தும் வக்கீல்கள் பாடு கொண்டாட்டம் தான். இவர்கள் அடையும் பலன்கள் என்னவென்று உரைக்க வேண்டியதேயில்லை. ஒரே வார்த்தையில் சொல்லி விடுகிறேன்......'ஸ்கீம்' ஸூட் முடிந்து ஓயும் வரையில் அந்தக் கோயிலிலுள்ள மூர்த்தி வேறு, இவர்கள் வேறு என்று எந்த விஷயத்திலும் சொல்ல முடியாது.

'ஸ்கீம்' ஸூட்டுகளில் முக்கியமான அம்சங்கள் யாவை யென்றால், தர்மகர்த்தாக்களை நீக்கிவிடுவதும், அதற்குப் பின், கோவிலின் விஷயங்களைச் சரிவர நடத்தவேண்டிய ஏற்பாடுகள் செய்வதும்.

கேஸை ஆரம்பித்து, தர்மகர்த்தர்கள் செய்யும் அட்டூழியங்களை வாதி, கோர்ட்டில் ருஜுப்படுத்தி ஸ்தாபிக்கும் வரையில், அந்தக் கோர்ட்டில் கொஞ்சமும் கும்பலே இராது. வாதிகளுடைய சாக்ஷிகளை ஜட்ஜ் நம்பாமல் ஸூட்டைத் தள்ளிவிட்டால், அதோடு எல்லாம் ஓய்ந்துவிடும். அன்றிரவு கோவிலில் முதல்தரமான சர்க்கரைப் பொங்கல், வடை, இன்னும் அனேக விதமான பக்ஷணங்கள் செய்யப்பட்டுப் பிரஸாத ரூபமாய் வக்கீல் வீட்டிலும், தர்மகர்த்தர்கள் வீடுகளிலும், மணியக்காரர் வீட்டிலும், மேளக்காரன் வீட்டிலும், தாஸ நம்பி வீட்டிலும், தாஸி வீட்டிலும் மிதிபடும்! ஆனால் தோற்றுவிட்ட வாதிகளின் வீடுகளில் விளக்குக்கூட எரியாது; தெருக் கதவுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் இடப்படும்!

ஆனால் வாதிகள் விசாரிக்கும் சாக்ஷிகளின் வாக்குமூலங்களை ஜட்ஜ் நம்பித் தர்மகர்த்தர்கள் விலக்கப்பட வேண்டும் என்று தீர்மானித்தாலோ,...உடனே "ஸ்கீம்" அதாவது கோவிலின் நடவடிக்கைகளைச் சரிவர நடத்த ஏற்பாடு செய்வதற்காக ஒரு நாள் நியமிக்கப்படும். அன்று அந்தக் கோர்ட்டில் கல்யாண தடபுடல்தான். கோவிலில் என்றும் பாராத முகங்களை யெல்லாம் கோர்ட்டில் காணலாம்.

"ஸ்கீம்-ஸூட்டாவது டீம் ஸூட்டாவது! வேலையத்த வம்புக்காரப் பசங்களும், பராரிகளும், இன்ஸால்வெண்ட் பேர்வழிகளும் செய்கிற சுத்தப் போக்கிரித்தனம், ஸார்! பாவம், தர்மகர்த்தர்கள் எவ்வளவு பெரிய மனுஷா! அவாளை இந்தக் காத்தானும் கீத்தானும் தள்ளிவச்சுடப் போறானும். என்ன அக்ரமமெங்கறேன்!" என்று சொல்லிக் கொண்டிருந்த சுகஜீவனம் சுந்தரராஜையங்கார், அன்றைக்குச் சொக்காயும் தலைப்பாகையும் அணிந்து வாதிகளின் வக்கீல் கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரை விடாது பிடித்துக்கொண்டு, "நன்றாய்ப் போடுங்கோ ஸார்! பலமாய் ஓங்கி அடியுங்கோ! இந்த அயோக்யப் பசங்க இன்னமே தர்மகர்த்தாக்களா

யிருக்கவேகூடாது. என்ன அக்ரமம்! என்ன அக்ரமம்! நல்ல பெரிய மனுஷாளாப் பாத்து, மொத்தத்தையும் மேல் பார்வை செய்ய ஒரு கமிட்டி ஏற்பாடு செய்துடுங்கோ!" என்பார்.

பக்கத்திலிருக்கும் பத்மநாப நாயுடு, "ஆமாங்க! அது நல்லதுங்க! ரெண்டு பிராமணுளு, நாலஞ்சு நான்பிராமின்ஸ் சேத்துப் போட்டுடுங்க!" என்பார்.

வக்கீல் கோணவழி கோகிலத்வனி ஐயர் எழுந்து, தாம் அந்தப் பேட்டையில் வசிக்கும் மார்வாடிகளுக்காக ஆஜராவதாயும், தம் கக்ஷிக்காரர்களுடைய ஜாதியார்கள் ஏராளமான பணங்களைக் கோவில் உண்டிகளில் போட்டும், கோவில் உத்ஸவாதிகளில் உபயங்கள் செய்தும் வருவதால், 'ஸ்கீம்' விஷயத்தில் அவர்களையும் கலந்து கோர்ட்டார் தீர்மானிக்க வேண்டுமென்று சொல்வார். மேலும் கோர்ட்டார் எந்தக் கமிட்டி ஏற்படுத்தினுலும் அதில் ஒரு மார்வாடியும் ஒரு குஜராத்தியும் இருக்க வேண்டுமென்று முழக்குவார்.

இதே மாதிரியாய் அநேக வக்கீல்கள் எழுந்து அநேகக் கக்ஷிக்காரர்களுக்காகப் பேசுவார்கள். இதை யெல்லாம் பார்க்கும் ஒரு புதிய மனிதனுக்கு "அடாடா! இது எந்தக் கோவிலோ? மிகவும் முக்கியமானதாயும், பிரக்யாதி பெற்றதாயுமிருக்க வேணும்! இவ்வள்வு பேர்கள் இவ்வளவு அக்கரையுடன் கவனிப்பார்களா, இல்லாவிட்டால்?" என்று தோன்றும்.

கடைசியில், எல்லோரும் சொல்வதை யெல்லாம் மிகவும் ஊக்கத்துடன் கேட்டு, ஜட்ஜ் தம்முடைய தீர்மானங்களை வெளியிடுவார். கேஸும் முடிந்து, வந்தவர் யாவரும் போய்ச் சேர்வார்கள். கோவில் கொஞ்சம் சொத்துகளாவது ரொக்கமாவது படைத்திருந்தால், கேஸில் ஆஜரான யாவர்க்கும் ஏற்பட்ட செலவுகளைக் கோவில் பணத்தி லிருந்து கொடுக்கும்படி உத்தரவாகும். இல்லாவிட்டால், விலக்கப்பட்ட தர்மகர்த்தர்களுடைய

ஜாதகங்களில் அஷ்டமத்தில் சனியாயிருந்தால், வாதிகளுடைய செலவுகள் அனைத்தையும் அவர்கள் கொடுக்கும்படி உத்தரவு பிறக்கும்!

ஆனால் எதற்கும், அந்தக் கோவிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமிக்குத் தசா புக்திகள் நன்றாக இருக்க வேண்டும். இவை நல்லவையாயிருந்தால், ஏதோ கொஞ்ச நாட்களுக்காவது புதுக் கமிட்டியாரும் தர்மகர்த்தாக்களும்,

"வந்தாப்போல் சிறுக்கி பந்தடித்தாள்!"

என்பதுபோல் கோவில் விஷயங்களைச் சீராகக் கவனித்து, பிறகு

"வர வரச் சிறுக்கி கெட்டுப் போனாள்!"

என்றவாறு, பழைய தர்மகர்த்தாக்களையும் அதிகாரிகளையும் நல்லவர்களாக்கிவிடுவார்கள்.

ஆனால் அந்த ஸ்வாமிக்குத் தசா புக்திகள் கெட்டவையாயிருந்தால் கொள்ளைக்காரனிடமிருந்து தப்பிக் கொலைகாரனிடம் அகப்பட்டுக் கொண்ட கதைதான்.

## 5. விநாயகர் தகராறு

சென்னையில் குரங்குப்பேட்டையில் பிள்ளையார் கோவில்-தெருவில் செல்வ விநாயகர் கோவில் ஒன்று இருக்கிறது. இந்தக் கோவிலில் எழுந்தருளியிருக்கும் விக்நேச்வர மூர்த்தி மிகவும் சக்தி வாய்ந்தவராயும் வரப் பிரஸாதியாயும் இருந்தமையால், நாளடைவில் இந்தக் கோவிலுக்கு ஏராளமான நிலங்களும் வீடுகளும் இதர விதமான சொத்துக்களும் சேர்ந்துவிட்டன. வருஷ வாரியில் ஏறக்குறைய ஐந்து அல்லது ஆறாயிரம் ரூபாய் வரும்படி ஏற்பட்டுவிட்டது. கோவிலில் உத்ஸவங்களும், பூஜைகளும் பலக்க ஆரம்பித்தன. பிரார்த்தனைகள் கணக்கில்லாமல் நிறைவேற்றப்பட்டு வந்தன.

வெகுநாளாய் இந்தக் கோவிலுக்கு மூன்று தர்மகர்த்தர்கள் இருந்து நடத்தி வருவது முறையாயிருந்தது. 193—ம் வருஷத்தில் இந்தக் கோவிலின் தர்மகர்த்தர்கள்: (1) பரஞ்சோதிப் பண்டாரம், (2) பிச்சாண்டிப் பிள்ளை, (3) பெருச்சாளி நாயகர். இதில் பண்டாரம், தாம் பரம்பரைத் தர்மகர்த்தா என்றும், அந்த ஸ்தானத்தை ஸ்ரீராமலிங்க ஸ்வாமிகள் காலத்திலிருந்து அவருடைய சிஷ்ய பரம்பரையில் வகித்துவந்ததாகவும், அதைத் தம் காலத்திற்குப் பிறகு தம் பிரதம சிஷ்யன் ஆண்டிப்பண்டாரம் அடையவேண்டியதென்றும் சொல்லிக் கொள்வார். கோவிலைச் சேர்ந்த அழகான தோட்டத்தில் ஆச்ரமமொன்று கட்டிக்கொண்டு, ஆட்களுடனும் ஆடம்பரத்துடனும் பண்டாரம் காலக்ஷேபம் செய்துவந்தார். ஒரு நாள் திடீரென்று அவர் "பண்டார சன்னிதிகள்" ஆய் விட்டார். ஆச்ரமம் போய், "ஆதீன"மாய்விட்டது! விநாயக சதுர்த்தி உத்ஸவம் வந்தது. காலையில் கோவிலைத் திறந்ததும் பண்டார சன்னிதிகளின் பரமானந்த சிஷ்யர்கள், பல திக்குகளிலிருந்தும் வந்து உட்புகுந்து, எல்லாவற்றையும் கைப்பற்றிக் கொண்டார்கள். அர்ச்சனை செய்வதற்கு அரைப்பணம் செலுத்தி அண்ணாமலைப் பண்டாரத்தின் உத்தரவு வாங்கவேண்டுமென்றார்கள். தீபாராதனை செய்வதற்குத் திருஞானப் பண்டாரத்தின் உத்தரவு வேண்டுமென்றார்கள். இன்னும், கர்ப்பூரம் கொளுத்தக் கந்தப் பண்டாரத்தின் உத்தரவும், தரிசனம்செய்யத் தர்மலிங்கப் பண்டாரத்தின் உத்தரவும், ஆலயத்தைத் திறக்க ஆதீனத்தின் உத்தரவும், ஆதீனத்தை அணுக ஆண்டிப் பண்டாரத்தின் உத்தரவும் வேண்டுமென்றார்கள். இதர தர்மகர்த்தர்களை எங்கும் தேடியும் காணவில்லை. கோவில் முழுதும் கோலாகலமாய்ப் போயிற்று.

மூன்றுவது நாள் காலை, பதினொரு மணிக்குச் செல்வ விநாயகர் கோவில் விஷயமாய் 'ஸ்கீம்' ஸூட் தாக்கலாய் விட்டது. வாதிகள்: (1) பூஞ்சாள நாயகர், (2) புலிவேஷ நாயகர், (3) பூச்சி நாயகர். பிரதிவாதிகள்: (1) பரஞ்சோதிப்

பண்டாரம், (2) பிச்சாண்டிப் பிள்ளை, (3) பெருச்சாளி நாயகர். வாதிகள் தரப்பில் கேஸைத் தாக்கல் செய்த வக்கீல் வல்லடி வழக்கய்யா. பிராதின் மேல் "இந்த 'ஸ்கீம்' ஸூட்டைக் கோர்ட்டில் தாக்கல் செய்வதற்கு நான் சம்மதப்படுகிறேன்...பல்லாடி பரமசிவ ஐயர்—அட்வ ஜெனரல்" என்று வரையப்பட்டிருந்தது.

நாளடைவில் கேஸ் விசாரணைக்கு வந்தது. ஜட்ஜ் சீமையிலிருந்து வந்த வெள்ளைக்காரப் பிரபு. அவர் பெயர் கல்லன் துரை.

வாதிகளின் வக்கீல் வல்லடி வழக்கய்யா தம் சாக்ஷிகளை யெல்லாம் கூப்பிட்டு விசாரித்தார். அவர்களை வெகு தீவிரமாய்ப் பிரதிவாதிகளின் தரப்பில் ஆஜரான பிரமுகர்கள் குறுக்குக் கேள்விகள் கேட்டுக் குளற அடித்தார்கள். முதல் பிரதிவாதிக்கு பாரிஸ்டர் பிருண்டு துரையும், அவருடைய ஜூனியரான கோரோஜனை ஐயங்காரும் ஆஜராகிச் செய்த ஆர்ப்பாட்டத்தில், எங்கே இவர்கள் பண்டாரத்தைப் பிரதிஷ்டை செய்வித்து, விநாயகரை விசாரணைக் கர்த்தாவாக்கி விடுவார்களோ?—என்று எல்லோரும் திகைக்கும்படியா யிருந்தது. இரண்டாம் பிரதிவாதியான பிச்சாண்டிப் பிள்ளைக்கு, அவர் ஸ்வய ஜாதியாரான கந்தரகூளம் பிள்ளை ஆஜரானார். மூன்றும் பிரதிவாதியான பெருச்சாளி நாயகருக்கு ஒருவரும் ஆஜராகவே யில்லை.

சாக்ஷிகளெல்லாம் விசாரிக்கப்பட்டு, வீடு போய்ச் சேர்ந்தார்கள். ஜட்ஜ் கல்லன் பிரபு பிருண்டு துரையைப் பார்த்து, "உங்கள் கக்ஷிக்காரராகிய பரஞ்சோதிப் பண்டாரத்தை ஏன் நீக்கிவிடக்கூடாது?" என்றார்.

பிருண்டு துரை :—என் கக்ஷிக்காரர் ஸாமானியமானவரல்ல. அவர் பரம்பரை மிகவும் புராதனமானது. பதினாயிரம் வருஷங்களாய் அவர் பரம்பரை...

வல்லடி :—அது சுத்தத் தவறு. அவருக்குப் பரம்பரையே கிடையாது! அதுவும் பதினாயிரம் வருஷங்களாய்க்

கிடையவே கிடையாது! எந்த ஆதாரத்தைக் கொண்டு என் நண்பர் சொல்லுகிறாரோ தெரிய வில்லை.

பிரூண்டு துரை :—எனக்கு ஆதாரம் ஒன்றும் தெரியாது. நான் என்ன சொல்லப் போகிறேனென்று முழுதும் கேளாமல் என் நண்பர் நெல்லிக்காயைப் போல் குதிக்கிறார்!

கல்லன் பிரபு :—அதெல்லாம் எனக்குத் தெரியாது...என் மனதில் நன்றாய்த் திருப்தியாய்த் தெரிந்துவிட்டது, உங்கள் பண்டாரத்தை விலக்குவதாகத் தீர்மானித்து விட்டேன்.

பிரூண்டு :—அப்படியானால் என் காலத்தை வீணாக்கிக் கொண்டு இங்கிருக்க இஷ்டமில்லை.

[கோர்ட்டை விட்டுப் போய்விடுகிறார்.]

சுந்தரகூளம் பிள்ளை :—என் கக்ஷிக்காரராகிய பிச் சாண்டிப் பிள்ளையைக் குறித்த வரையில்...

கல்லன் பிரபு :—அவரைப் பற்றி நீர் பேசாமலிருப்பது நல்லதாகும்.

சுந்தரகூளம் பிள்ளை :—நான் சொல்வதென்ன வென்றால்...

கல்லன் பிரபு :—உங்கள் கக்ஷிக்காரர் முழு அயோக்யர்! அவரை ஜெயிலுக்கனுப்ப வேண்டும்.

சுந்தரகூளம் பிள்ளை :—ஆனால் கோர்ட்டாரிஷ்டம்...

[உட்காருகிறார்.]

கல்லன் பிரபு :—நீங்கள் யாவரும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம்: நான் இப்பொழுது மூன்று தர்ம கர்த்தர்களையும் நீக்கிவிட நிச்சயித்துவிட்டேன். இனி, தேவஸ்தானத்தைச் சீராக நடத்தவேண்டிய ஏற்பாடுகள் என்னவென்று யோசிக்க வேண்டி யிருக்கிறது. அந்த விஷயத்தைக் குறித்தும் நான்

அநேகமாய்த் தீர்மானித்து விட்டேன். ஒரு விஷயத்தைப் பற்றி மாத்திரம் நீங்கள் சொல்லவேண்டியதைக் கேட்க விரும்புகிறேன். அதாவது, இந்தத் தேவஸ்தானத்து விஷயங்களை நடத்திப் பார்வையிட முக்கியமான உரிமை எந்த ஜாதியாருக்கு உண்டு? பிள்ளைகளுக்கா? நாயகர்களுக்கா? அதைக் குறித்துப் பேசினால் கேட்கிறேன்...

சுந்தரகூளம் பிள்ளை:—இப்பொழுது நான் பிள்ளைகளுக்காக ஆஜராகி அவர்களுடைய உரிமையைக் குறித்துப் பேச விரும்புகிறேன். இந்தக் கோவில் செல்வ விநாயகர் கோவில். பிள்ளைகளில் பலவிதமுண்டு. அதில் முக்கியமானவர்கள், வெள்ளாளப் பிள்ளைகள், யாதவப் பிள்ளைகள்.

கோரோஜனம்:—ஆதிதிராவிடப் பிள்ளைகள்......அணில் பிள்ளைகள்...கீரிப்...

[எல்லோரும் "கோல்" லென்று சிரிக்கிறார்கள்.]

சுந்தரகூளம் பிள்ளை:—என் நண்பர் இந்த முக்கியமான விஷயத்தைக் குறித்து விளையாட்டாகப் பேசுவது மிகவும் கண்டிக்கத் தக்கது...ஸரி, இருக்கட்டும்... யாதவப் பிள்ளைகள் வைஷ்ணவர்கள். இந்த விக்நேச்வரர் கோவிலின் அருகில் வரமாட்டார்கள்.

கல்லன் பிரபு:—என்ன கோவில்?

வல்லடி:—விக்நேச்வரர்...

[எழுத்துக் கூட்டிச் சொல்லுகிறார். அந்தப் பேரை வெகு கவனமாய் ஜட்ஜு எழுதிக் கொள்கிறார்.]

விநாயகரென்றாலும், விக்நேச்வரரென்றாலும், பிள்ளையாரே ஆனாலும், ஒரே ஸ்வாமியைக் குறிக்கும்.

சுந்தரகூளம் பிள்ளை:—ஆகையால் எங்கள் வெள்ளாளப் பிள்ளைகளைக் குறித்தே இந்தக் கோவிலின் விஷயத்தில் நான் வற்புறுத்துகிறேன். பிள்ளைகள்

சைவ மதத்தார். சிவனுடைய பிள்ளை விநாயகர். ஆகையால் "பிள்ளையார்" என்று பெயர். நாங்களும் பிள்ளைகள், அவரும் பிள்ளையார்......இன்னும் வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? மேலும், இந்தச் செல்வ விநாயகர் கோவிலை ஸ்தாபித்து வைத்தவர் செல்வப் பிள்ளை யென்று ஈஸ்ட் (கிழக்கு) இந்தியாக் கம்பெனி நாள்களில் வாழ்ந்த ஒரு பிரபு. அவர் ஜாதியாராகிய பிள்ளைகள் அவர் காலத்திற்கு அப்புறம் பல விதத்தில் இந்தக் கோவிலுக்குத் திருப்பணிகள் செய்தும், இன்னும் அநேக விதங்களில் உதவியும் இருக்கிறார்கள். இந்தக் கோவில் இருக்கும் பேட்டையில் வாழ்ந்து வந்த வஜ்ரகண்டப் பிள்ளை பதினாயிரம் ரூபாய் முதல் வைத்துப் போயிருக்கிறார். இந்தப் பேட்டையிலேயே, இந்தத் தெருவிலேயே, பிள்ளைகளுடைய குடும்பங்கள் அதிகமாய் வசித்து வருகின்றன. கோவிலில் வந்து தரிசனம் செய்யும் பெரும்பான்மையோர், எங்கள் ஜாதியார்...இந்தத் தெருவின் பெயரைப் பாருங்கள்: "பிள்ளையார் கோவில் தெரு." "பிள்ளையாரென்றால் "பிள்ளையார்" அல்லது "பிள்ளைகள்:" எங்கள் ஜாதிப் பன்மையைக் குறிக்கின்றது. "பிள்ளையார் கோவில்" என்றால் பிள்ளைகளுடைய கோவிலென்று அர்த்தம். ஆகையால் கோர்ட்டார் பிள்ளைகளுக்கு அனுகூலமாகவே தீர்மானிக்க வேண்டுமென்று நான் வணக்கமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

வல்லடி:—நான் வெகு வினயமாய் என் கக்ஷிக்காரர்களாகிய நாயக்கர்களுக்காகப் பேச விரும்புகிறேன். என் நண்பர் கந்தரகூளம் பிள்ளை கூறினதெல்லாம் குழந்தைகள் பேசுவது போலிருந்ததே யன்றி, ஒன்றும் கவனித்துப் பார்க்கக்கூடிய அம்சங்களுடையதாகத் தெரியவில்லை......அவர் போன வழியின் முழு மோசம் வெகு சுலபமாய் வெளியாகிவிடும். பிள்ளைகளாம், பிள்ளைகள்! இந்த உலகத்தில் உள்ள ஒவ்வொரு மனிதனும் ஐரோப்பா, அமெரிக்கா,

எந்தக் கண்டத்திலிருந்த போதிலும், ஒரு விதத்தில் "பிள்ளை" தான்......அவனுடைய தகப்பன் தாயாருக்குப் "பிள்ளை" தானே? ஆகையால் உலக முழுவதும் ஒரே ஜாதி!!!

அது போகட்டும். என் நண்பர் வெகு ஜம்பமாக "இந்தக் கோவிலுக்குத் தரிசனத்திற்கு வருகிறவர்களெல்லாம் பிள்ளைகள்" என்கிறார். ஒரு விதத்தில் நிஜமே! அவர்கள் "ஆண் பிள்ளைகள்" அல்லது "பெண் பிள்ளைகள்" தானே! ஆகையால் எல்லோரும் பிள்ளைகள்! மிகவும் அழகு! என் நண்பர் கோரோஜனம் உரைத்ததில் என்ன தவறு? கீரிப் பிள்ளை, அணிற் பிள்ளை, தென்னம் பிள்ளை, இவையெல்லாம் கூடப் பிள்ளைகள் தான்! ஆதிதிராவிடர்களிலும் "பிள்ளை" யென்று பெயர் வைத்துக் கொள்கிறார்கள்.........இம்மாதிரி சமாதானங்களைக் கூறியா, கோர்ட்டாரை வசமாக்க முடியும்?...... சுத்தத் தப்பு!...

இந்தத் தேவஸ்தானம் தொன்று தொட்டு நாயகர் ஜாதியாரால் ஸ்தாபிக்கப்பட்டும் நடத்தப்பட்டும் வருகிறது. இந்தத் தெருவில் முதல் வீட்டில் ஒரு "சிலா சாஸனம்" இருக்கிறது. அது இந்தக் கோவிலைச் சேர்ந்தது. அந்த வீடு இந்தக் கோவிலுக்குப் பரம்பரையாய்த் தர்மகர்த்தாக்களாய் இருந்து வந்த "நாயகர்" குடும்பத்தைச் சேர்ந்ததாகையால், அங்கே இந்தச் சிலா சாஸனம் இருக்கிறது. அதிலிருந்து ஏற்படுவ தென்னவென்றால், இந்தக் கோவில் 35 தலைமுறைகளுக்கு முன்னால், அதாவது 700 வருஷங்களுக்கு முன்னால், கொழுக்கட்டை நாயகர் குமாரர் கோணங்கிநாயகரால் கட்டப்பட்டதென்றும், அந்த வம்சத்தில் பரம்பரையாய்த் தர்மகர்த்தத்வம் இருந்து வந்ததாகவும் முக்கியமாய் ஏற்படுகிறது...இப்பொழுது விலக்கப்பட்ட "பெருச்சாளி நாயகர்" அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவரே. இந்தப் பேட்டையில் இருக்கும் ஒவ்வொரு நாயகர்

வீட்டிலிருந்தும் வருஷத்திற்கு ஒரு முறை "மூன்று பணங்கள்" கோவில் - கட்டணம் செலுத்திவரப் படுகிறது...அது ஏன்?

கோரோஜனம் :—பெருச்சாளி நாயகர் செலவுக்கு...

[அதிக நகைப்பு]

வல்லடி :—இருக்கலாம்! அவர் யோக்கியரென்று நான் சொல்லவில்லை....பண்டாரத்துக்கும் பங்கு இருந்த தல்லவா?...மேலும் "நாயகர்கள்"...த்விஜர்கள்.... பிள்ளைகளைப் போல் நாலாவது வர்ணத்தார்களல்ல. அதில் வன்னிய குல க்ஷத்திரியர்களென்று கூறப் படுபவர்தான் "நாயகர்கள்". இந்தத் தேசத்தில் எங் காவது, நாலாம் வர்ணத்தார் ஸ்தாபித்த கோவிலில் க்ஷத்திரியர்கள் போய்த் தொழுவாவது,...தர்மகர்த்தர் களாயிருக்கவாவது ஒப்புக்கொள்வார்களா?...அது போகட்டும்..."கலி புருஷ நாயகர்"—என்ன உலகப் பிரசித்தி!...இந்தக் கோவிலுக்கு அவர் செய்திருக்கும் உபயங்களும், உபகாரங்களும் கணக்கற்றவை. அவர் ஒரு வன்னியகுல க்ஷத்திரியர்...நாயகர். இந்தத் தெருவில் கோவிலுக்கு இருபுறமும் இருக்கும் வீடு களில் வசிப்பவர் நாயகர்கள்...இந்தக் கேஸை இவ் வளவு ஊக்கமாய் நடத்தி, தங்கள் கையிலிருந்து பணத்தைச் செலவு செய்து, பண்டாரத்தைப் பறக் கடித்து, பரம பரோபகாரங்களைச் செய்த வாதிகள் மூவரும் நாயகர்கள்...ஆகையால் நாயகர்கள் பக்கமே தீர்மானிக்கக் கோருகிறேன்.

[உட்காருகிறார்.]

கல்லன் பிரபு உடனே கோண எழுத்து எழுதும் கோதண்டராயரை வரவழைத்துப், பின் வருமாறு தீர் மானத்தைச் சொன்னார் :—

"இந்தக் கேஸில் விஷயங்கள் மிகவும் சுலபமாய்ப் போய்விட்டன. இப்பொழுது முக்கியமாய் ஒரு விஷயத் தைப் பற்றி என் தீர்மானத்தைச் சொல்லிவிட்டுப் பிறகு

இதை அனுஸரித்துச் செய்ய வேண்டியவைகளை யெல்லாம் சொல்கிறேன்......பிள்ளைகளுக்காக மிஸ்டர் சுந்தர கூளம் பிள்ளையும், நாயகர்களுக்காக மிஸ்டர் வல்லடி வழக்கய்யாவும் வெகு சாமர்த்தியமாய்ப் பேசி முடித்தார்கள். இருவருடைய வாதங்களும் ஏறக்குறைய ஒரே விதமாய் இருக்கவே, எனக்கு அவ்வளவாக அவைகளை ஆதாரமாகக் கொண்டு ஒருவர் பக்ஷத்திற்கு அனுகூலமாய்த் தீர்மானிக்க இஷ்டமில்லை. ஆனால் ஒரு விஷயம் என் மனத்திற்கு நன்றாய்ப் புரிந்துவிட்டது. இரு திறத்தாரும் அதைக் கவனிக்கவில்லை. நானாகக் கண்டுபிடித்த விஷயமானதால், என் மனத்தில் சற்றும் சந்தேகமில்லை. இது மிகவும் விசனிக்கத் தக்க விவாதம், ஜாதி விவாதம். ஆனால் இந்தத் தேசத்தில் வேறென்ன நடக்கக் கூடும்? இந்தத் தேசத்து வழக்கப்படி சாக்ஷிகளெல்லாம் பொய்ச் சத்தியம் செய்திருக்கிறார்கள். அவர்கள் யாரையும் நம்ப இஷ்டமில்லை. நானாகக் கண்டு பிடித்த விஷயமென்ன வென்றால், இந்தக் கோவிலிலிருக்கும் தெய்வத்தின் பெயர் விநாயகர். இந்தத் தேசத்தில் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு ஜாதியைச் சேர்ந்தவரா யிருக்கவேண்டும். ஆகையால் இந்தத் தெய்வம் என்ன ஜாதி?......இரு திறத்தாரும் இவர் பெயர் "விக்நேச்வரர்" என்று ஒப்புக் கொள்கிறார்கள். இந்த ஊர் வழக்கம் என்னவென்றால், ராஜகோபாலாசாரியை ஆர். சாரி யென்றும், மங்கபதியை எம். பதி யென்றும், கே. ஸ்ரீநிவாசனை கே. எஸ். வாஸன் என்றும் கூப்பிடுவது. இதை அனுஸரித்து நான் ஊகிப்பதென்னவென்றால், இந்தத் தெய்வம் பூர்வீகத்தில் 'விக்நேச்வர நாயகர்' என்று பெயருடையதா யிருந்தது. அது 'வி. நாயகர்' என்று ஆய்விட்டது. ஆகையால் இந்த 'விநாயகர்' என்பவர் நாயகர் ஜாதியைச் சேர்ந்தவரென்று நன்றாய் நிரூபிக்கப்படுகிறது. ஆகையால் இந்தத் தேவஸ்தானத்தை நடத்திப் பரிபாலிக்கப் பெரும்பான்மை உரிமை நாயகர் ஜாதிக்கே என்று நான் தீர்மானிக்கிறேன்!"

# 6. கேஸ் ஜயித்தது, ஆனால்

சுக ஜீவனம் சுப்பராமன் தெரு வழியே போய்க் கொண்டிருக்கையில், கீழே ஒரு கடுதாசியைக் கண்டு எடுத்துப் பார்த்தான். அது ஐந்து ரூபாய் நோட்டாக இருந்தது. கையில் வைத்துக் கொண்டு மிரள மிரள விழித்துப் பார்க்கையில், லாயர் லங்கண ராவ் எதிரில் வந்து என்ன விசேஷம் என்று கேட்டார். சுப்பராமன் நோட்டை நீட்டி, "இது இங்கே கிடந்தது. சரியான நோட்டோ, தப்பு நோட்டோ தெரியவில்லை; பாருங்கள்" என்றான். லாயர் அதை வாங்கி, முன்னும் பின்னும் பார்த்து, முகத்தைச் சுளித்து, மூக்குக் கண்ணாடியைக் கழற்றித் துடைத்துப் போட்டுக் கொண்டு, மறுபடியும் முறைத்துப் பார்த்து, முடிவில் தலையை அசைத்து, "சரியானதுதான். பாக்கி மூன்றரை ரூபாயையும் வீட்டிற்கு அனுப்பிவிடுங்க" என்று சொல்லிவிட்டு, நோட்டை மடித்துப் பையிலே போட்டுக் கொண்டு கிளம்பினார். சுப்பராமன் சுருண்டு கீழே விழுந்தான்......மீண்டும் பிரக்ஞை அடைந்து வீடு போய்ச் சேர்ந்ததும், தனக்கு வந்திருந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். உள்ளே லாயர் லங்கண ராவ் எழுதியனுப்பிய கடிதம். அது பின் வருமாறு :—

| | | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|
| வேறு வேலையாய்ப் போகும்போது நிறுத்தப் பட்டதற்காக, பற்று. ... ... | | | | 2 | 8 | 0 |
| சுப்பராமன் காண்பித்த காகிதத்தைப் பார்த்ததற்காக, பற்று. ... ... | | | | 2 | 8 | 0 |
| அதை நன்றாய்க் கவனித்து நோக்கி, ஐந்து ரூபாய் நோட்டு என்று அறிந்து சொன்னதற்காக, பற்று. ... ... | | | | 2 | 8 | 0 |
| மேற்சொன்ன அபிப்பிராயத்திற்காகச் சேர வேண்டிய "பீஸ்" எவ்வளவென்று தெரியப் படுத்தியதற்காக, பற்று. ... | | | | 1 | 0 | 0 |
| வரவு ரூ. | 5 | 0 | 0 | | | |
| | 5 | 0 | 0 | 8 | 8 | 0 |

சேரவேண்டிய பாக்கி ரூ. 3-8-0. தயவு செய்து மேற்படி பாக்கியை மூன்று நாட்களுக்குள் செலுத்தும் படியாய்க் கோருகிறேன்.

இப்படிக்கு,

லங்கண ராவ் (லாயர்)

இவ்வாறு சுப்பராமன் படித்த உடனே இரண்டாம் முறை மூர்ச்சையானுன்.

"இதுவும் நடக்கக் கூடியதா?" என்பீர்களோ...... இன்னும் வியக்கத்தக்க விஷயங்களுமுண்டு......இம் மாதிரியான பட்டியலில் கண்டவாறு "ஃபீஸ் வாங்கின லாயர் என்ன லாயர்?" என்பீர்களோ?

அவர் ஒரு "அட்டர்னி". "அட்டர்னி" என்ருல் ஒரு வகை லாயர். ஸாதாரணமாய்ப் பழைய நாள் மனிதர்கள் அட்டர்னிகளைத்தான் "லாயர்" என்பது......மற்ற வித மானவர்களை வக்கீல்கள் என்றும், அட்வகேட்டுகள் என்றும், பாரிஸ்டர்கள் என்றும் சொல்வார்கள். பின் சொன்னவர்கள் எல்லாம் தங்கள் கட்சிக்காரர்களிட மிருந்து தங்களுக்குச் சேரவேண்டிய "ஃபீஸை"த் தாவாவின் மதிப்பின்மேல் நூற்றுக்கு ரூ. 5, 6 அல்லது 7 என்ருே, கோர்ட்டில் ஆஜராகும் நாள் ஒன்றுக்கு இவ்வளவு என்ருே பேசிக் கொள்வார்கள்.

ஆனுல் அட்டர்னிகளோ அவ்வாறில்லை. கேஸ் ஸம்பந்தமாய்த் தாங்கள் செய்யும் ஒவ்வொரு வேலைக்கும் இவ்வளவென்று கணக்குப் போட்டுக் கடைசியில் பெருத்த தொகையாய்ச் செய்து, வாங்கிக் கொள்வார்கள். ஆயிர ரூபாய் மதிப்புள்ள கேஸும், லக்ஷ ரூபாய் மதிப் புள்ள கேஸும் அவர்களுக்கு ஒன்றுதான்......சீக்கிரம் முடியாமல் சிக்கல் அதிகமாயிருந்து பல நாட்கள் நீடித்து நடந்தால்; அவர்கள் பாடு கொண்டாட்டம்; கக்ஷிக்காரன் பாடு திண்டாட்டம். இதற்குத் திருஷ்டாந்தமாக நடந்த ஒரு கேஸைப் பற்றிச் சொல்கிறேன்.

பகல் கொள்ளைப் பச்சையப்பக் கவுண்டர் பரலோக ப்ராப்தி யடைந்தார். அவரும் அவர் தம்பியான பெருந் தொந்திக் கவுண்டரும் ஏக குடும்பமாய் இருந்து வந்த தால், அவர்களுக்குப் பொதுவாய் இருந்த சொத்துக்கள் முழுமையும் பெருந் தொந்திக் கவுண்டர் அடைந்து விட்டார். பச்சையப்பக் கவுண்டருடைய விதவையான பரிதாபி அம்மாளுக்கு ஜீவனும்சத்திற்கு உரிமையே தவிரச் சொத்துக்களில் வேறெவ்விதப் பாத்தியதையும் இல்லை.

பச்சையப்பக் கவுண்டர் இறந்த ஒரு வருஷத்திற் கெல்லாம் பரிதாபி அம்மாள் ஹைகோர்ட்டில் ஒரு தாவா செய்தாள்.

இறந்துபோன தன் பர்த்தா பச்சையப்பக் கவுண் டரும் பெருந்தொந்திக் கவுண்டரும் பொதுவாக அனு பவித்து வந்த சொத்துக்களின் மதிப்பு நான்கு லக்ஷம் ரூபாய்களென்றும், தன் பர்த்தா மிகவும் உலகப் பிர ஸித்தி அடைந்து மேன்மையான ஸ்திதியில் வசித்து வந்தா ரென்றும், அவர் இறந்த பின் சொத்துக்கள் யாவற்றையும் பெருந்தொந்திக் கவுண்டர் கைப்பற்றிக்கொண்டு, தன்னை மிகவும் அலக்ஷியமாகவும், அக்கிரமமாகவும் நடத்திவருவ தாகவும், வருஷவாரியில் பதினைந்தாயிரம் ரூபாய் வரு மானம் இருந்தும், தனக்கு மாதம் பத்து ரூபாய்கூடச் செலவிற்காகக் கொடுப்பதில்லை யென்றும், பலவிதமாகக் குறைகளைக் கூறிக்கொண்டு, தனக்கு ஆயுள்காலம் வரை யில் குடி இருப்பதற்கு ஒரு தனி பங்களாவும், ஜீவனும் சத்திற்காக மாதம் ஒன்றுக்கு ரூ. 500-ம் கொடுக்கும்படி உத்தரவு செய்யவேண்டுமென்றும் அந்தத் தாவாவில் பரிதாபி அம்மாள் கோரினாள். அவளுக்காகத் தாவாவைத் தாக்கல் செய்தவர், லாயர் (அட்டர்னி) பசியேப்ப ஐயங்கார்.

பெருந்தொந்திக் கவுண்டர் பலமாய் எதிர்வாதம் செய்தார். இறந்துபோன பச்சையப்பக் கவுண்டர் தம் சகோதரரென்பதையும், வாதி பரிதாபி அம்மாள் அவ

ருடைய மனைவி யென்பதையும் தாம் ஒப்புக்கொள்ள வில்லையென்றும், அவைகளை வாதி நன்ருய் ருசுப்படுத்த வேண்டும் என்றும் புகன்ருர். தம் வசம் இருக்கும் சொத்துக்கள் ஒருபொழுதும் தமக்கும் பச்சையப்பக் கவுண்டருக்கும் பொதுவாயிருந்ததில்லை யென்றும், அவை பூராவும் தாம் சொந்தமாய்ச் சம்பாதித்தவை என்றும் சாதித்தார். பரிதாபி அம்மாளுக்கு ஜீவனும்ச உரிமை ஒன்றுமே கிடையாதென்றும், தர்ம விஷயமாகத் தாம் அவளுக்குத் தம் வீட்டில் சாப்பாடு போட்டு வருவதாகவும் தெரிவித்தார். கடைசியாக, தம் வசமிருக்கும் சொத்துக்களின் மதிப்பு பதினையிரம் ரூபாய் என்றும், வரி, செலவுகளெல்லாம் போக நிகரமான வரும்படி வருஷத்தில் ரூ. 37—8—9 என்றும் ஒரு போடு போட்டார்... இந்த மாதிரியான எதிர் வாதத்தைப் பெருந்தொந்திக் கவுண்டருக்காகத் தயார் செய்து தாக்கல் செய்யப் பன்னிரண்டு வக்கீல்கள் ஏற்பட்டார்கள். அவர்களில் சிலர் கவுண்டருடைய சொந்த ஊரான கோயமுத்தூரில் வேலை பார்க்கும் அடிவெட்டு அட்டஹாஸ ராவ், கவுண்டருடைய வீட்டிலேயே வசித்துக் கொண்டு மாதச் சம்பளம் வாங்கிவரும் தண்டபிண்ட பாரதி, கவுண்டருக்காக வருமான வரி ஆஃபீஸில் பிரதி தினம் போய்ப் பலவித அனுகூலமான ஏற்பாடுகள் செய்து வரும் குட்டைய தீக்ஷிதர், கவுண்டர் நடத்திவரும் கள்ளுச் சாராயக் கடைகளின் விஷயங்களுக்காக அப்போதைக் கப்போது சட்டத்தைப் படித்து, சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பேட்டிகண்டு, சகலவிதமான வேலைகளையும் சர்வ சுலபமாய்ச் சாதிக்கச் சக்திவாய்ந்த சக்கிமுக்கி சாஸ்திரி பி. எல்., பரீக்ஷயில் முதலாய் நின்று மூன்று நாட்களுக்கு முன் ஸன்னது பெற்ற மூட்டைப்பூச்சி ஐயங்கார், வக்கீல் வேலையிலிருந்து ஆறு மாதம் விலக்கப்பட்டு மறுபடியும் தொழில் பார்த்து வரும் பிஞ்சுன்னி நாயர், கடைசியாய்க் கோர்ட்டில் ஆஜராகிப் பேசி ஜயித்துக் கொடுப்பதற்காக அட்வகேட் ஜெனரல் பல்லாடி பரமசிவ ஐயர், கவர்ண்மெண்டு ப்ளீடர் ஸநாதன ஐயங்கார் ஆகிய இவர்கள்... இவர்களன்றி, தாவா விசாரணைக்கு வரும் போது எந்த ஜட்ஜுடைய முன்னிலையில் வருமோ அந்த

ஜட்ஜுடைய பிள்ளையோ, மாப்பிள்ளையோ, தம்பியோ, மச்சினனே, சினேகிதரோ, சினேகிதருடைய உறவினரோ, யாரேனும் வக்கீலாகவோ பாரிஸ்டராகவோ இருந்தால் அவசியம் அவர்களுக்கும் வக்காலத்துக் கொடுத்துக் கோர்ட்டில் ஆஜராக ஏற்பாடு செய்யப்பட்டது.

இந்தக் கேஸ் 1928-ம் வருஷம் ஜுலை மாதம் 28-ம் தேதி தாக்கல் செய்யப்பட்டது. லாயர் பசியேப்ப ஐயங்கார் தம் கட்சிக்காரியான பரிதாபி அம்மாளுக்காகப் பல விதத்தில் கஷ்டம் எடுத்துக்கொண்டு வேலை செய்தார். ஏதாவது ஒரு விஷயத்தைக் குறித்து எதிரித் தரப்பு வக்கீல்களுடன் ஏற்பாடு செய்யவேண்டுமென்றால் மிகவும் அக்கரையாய் ஒரு முறை டெலிபோனில் பேசுவார்; ஒரு முறை தம் குமஸ்தாவை அனுப்புவார். கடைசியாகத் தாமே நேரில் சந்தித்துப் பேசுவார். பரிதாபி அம்மாள் மனம் பொங்கப் பூரித்து அவர் தனக்காக என்ன ஊக்கத்தோடு உழைக்கிறார் என்று அவரை வாழ்த்துவாள். ஆனால், பிரதி தினமும் லாயர் பசியேப்ப ஐயங்காருடைய குமாஸ்தா பலகார சர்மா எழுதிக் கொண்டு வந்த கணக்குப் புஸ்தகத்தை மாத்திரம் பரிதாபி அம்மாள் ஒரு முறை பார்த்திருந்தால், லாயரைக் குறித்து அவ்வளவு பொங்கி யிருக்கமாட்டாள்!

அந்தக் கணக்குப் புஸ்தகத்தில் பரிதாபி அம்மாளுக்கென்று அலாதியாய் ஒரு பேரேடு பேர் ஏடாகத்தான் ஆரம்பித்து, வெகு சீக்கிரத்தில் பேறேடாகி விட்டது! நாள் தவறாமல் அதில் ஏதாவது பதிவுகளைப் பலகார சர்மா பரிவுடன் தாக்கல் செய்து வந்தார்.

உதாரணமாக:—

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| 288-ம் நம்பர் கேஸ்...கட்டு ஸரி பார்த்துச் செய்ய வேண்டியதைக் குறித்து யோசனை செய்வதற்காகப் பற்று ... | 2 | 0 | 0 |

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| எதிர்த் தரப்பு வக்கீல் தண்டபிண்ட பாரதிக்கு டெலிபோன் செய்து அவர் கட்சிக்காரர் ஊரிலிருந்து வந்துவிட்டாரா என்று கேட்டதற்குப் பற்று ... | 1 | 8 | 0 |
| அவர் 'இல்லை' என்று சொன்ன பதிலைக் கேட்டுக் குறித்துக் கொண்டதற்குப் பற்று ... ... ... | 1 | 8 | 0 |
| டெலிபோன் மூலமாய் நடந்த சம்பாஷணையைக் கடித மூலமாய் ஊர்ஜிதப் படுத்திப் பாரதிக்கு எழுதினதற்குப் பற்று ... | 1 | 8 | 0 |
| மேற்படி கடிதத்தை வக்கீல் பாரதிக்கு 'டெலிவரி' செய்யப் பற்று ... | 1 | 0 | 0 |
| மேற்படி 'டெலிவரி' செய்ததற்கு வக்கீல் பாரதி கையொப்ப மிட்டிருக்கிருரா என்று பார்த்து, ஜாக்கிரதைப் படுத்தினதற்குப் பற்று... ... ... | 1 | 0 | 0 |
| எதிர்த் தரப்பு வக்கீலுக்குக் கடிதமெழுதி அவர்களுக்கு அதைச் சேர்ப்பித்த விஷயத்தைப் பரிதாபி அம்மாளுக்கு எழுதினதற்குப் பற்று... ... ... | 1 | 0 | 0 |
| மேற்படி கடிதத்தைத் தபாலில் போட்டு ரிஜிஸ்டர் செய்ததற்காக, ஸ்டாம்பு உட்பட, பற்று ... ... .... | 1 | 0 | 0 |
| ஆக மொத்தம் பரிதாபி அம்மாள் பற்று ... | 10 | 8 | 0 |

கேஸ் ஆரம்பித்த சமயத்தில், தன் பெரிய நகையொன்றை விற்று, அந்த அம்மாள் லாயர் கையில் கொடுத்த ரூபாய் 3,000 முதலில் வரவு வைக்கப் பட்டிருந்தது. நாளுக்கு நாள் இம்மாதிரி பற்றுத் தொகைகள் ஏற்பட்டு, கடைசியில் கேஸ் விசாரணைக்கு வரும்போது, அந்தத் தொகை பெரும்பான்மையும் கரைந்துவிட்டது.

1933-ம் வருஷம் டிஸம்பர் மாதம் 15-ம் தேதி யன்று கேஸ் விசாரணைக்கு வந்தது. ஜஸ்டிஸ் சத்ருக்னராவ் வந்து உட்கார்ந்து கேஸைக் கூப்பிடச் சொன்னார். வாதியின் தரப்பில் பாரிஸ்டர் மட்கார்ட் துரை ஆஜராகித் தம் கக்ஷிக்காரியான பரிதாபி அம்மாளுடைய அனுதாபகரமான சரித்திரத்தைக் கண்களில் நீர் ததும்ப, கல்லும் கரையும்படி சொல்ல ஆரம்பித்தார். எதிர்க் கக்ஷிக்கு எட்டு வக்கீல்கள் ஆஜராகி, ஒருவர் சொல்வதை ஒருவர் மறுத்துப் பேசி, கோர்ட்டை அலங்கோலமாக அடித்தார்கள். பன்னிரண்டு நாட்கள் கேஸ் நடந்தது. கடைசியில் ஜட்ஜ் தீர்மானத்தைத் தெரிவித்தார்.

தீர்மானத்தில் முக்கியமான அம்சங்கள் :—(1) வாதி பரிதாபி அம்மாள் பச்சையப்பக் கவுண்டருடைய விதவை. (2) பிரதிவாதி பெருந்தொந்திக் கவுண்டர், மேற்படி பச்சையப்பருடைய இளைய சகோதரர். (3) இருவரும் ஏக குடும்பமாய்ச் சேர்ந்து அனுபவித்து வந்த ஸொத்துக்களின் மதிப்பு, பச்சையப்பக் கவுண்டர் இறந்துபோன சமயத்தில், மூன்றரை லக்ஷம். (4) கேஸ் ஆரம்பித்து விசாரணைக்கு வருவதற்குள் பெருந்தொந்திக் கவுண்டர் பல விதமாய்த் ‘தாம் தீம்’ என்று செலவு செய்த பின் சொத்துக்களின் மதிப்பு ரூபாய் 2¾ லக்ஷம். (5) கேஸ் தீர்மானம் செய்த தேதியில் நிகரம் நின்ற சொத்துக்களின் மதிப்பு ரூ. 50,000. (6) அவைகளிலிருந்து வருஷவாரி வருமானம் ரூ. 3,000. ஆகையால்,

பிரதிவாதி பெருந்தொந்திக் கவுண்டர் வாதி பரிதாபி அம்மாளுக்கு மாதம் ஒன்றுக்கு, 5 தேதிக்குள் ரூ. 75 ஜீவனாம்சத்திற்காகக் கொடுக்க வேண்டியது.

தாவா தீர்மானமாகும் வரையில் வாதிக்குச் சேர வேண்டிய ஜீவனாம்சத் தொகை பாக்கிக்காகப் பெருந்தொந்திக் கவுண்டர் ரூ. 3,500 கொடுக்கவேண்டியது.

மேற்சொன்ன ரூ. 3,500, மாதா மாதம் கொடுக்க வேண்டிய ரூ. 75, இவைகளுக்குப் பொறுப்பாகப் பிரதி

வாதிக்குச் சொந்தமான "பட்டை விலாஸ்" என்னும் வீட்டைக் கொடுக்க வேண்டியது.

வாதி பரிதாபி அம்மாள் மேற்படி "பட்டை விலாஸ்"த்தில் தம் ஆயுட்காலம் வரையில் வசித்து வரவேண்டியது. அதற்கப்புறம் அதைப் பெருந்தொந்திக் கவுண்டரும் அவருடைய வார்சுகளும் அடைய வேண்டியது.

தாவாவில் வாதி பரிதாபி அம்மாளுக்கு ஏற்பட்ட செலவுகளைக் கோர்ட்டார் கணக்கிட்டுத் தெரிவித்தவுடன் பிரதிவாதி பெருந்தொந்திக் கவுண்டர் கொடுக்க வேண்டியது.

"பலே பேஷ்! பரிதாபி அம்மாளின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! அவளுக்கு இனி என்ன குறைவு?" என்று கேட்கிறீர்களோ?...உங்களுக்குத் தெரிந்தது அவ்வளவு தான்...சற்று முன் சத்திரத்துத் திண்ணைமேல் சாப்பாட்டிற்காகக் காத்துக்கொண்டிருந்தாளே, அந்த அம்மணி தான் பரிதாபி அம்மாள்...சத்திரத்திலே சாப்பாடு; வீதிகளிலும், சாவடிகளிலும் வாசம்; க்ஷணப்பொழுதும் விடாது பீடிக்கும் க்ஷயரோகம். "என்று எமன் வருவான்!" என்று ஏங்கியவாறு எதிர் பார்த்திருப்பாள் ஏழைப் பரிதாபி அம்மாள்...."ஏனப்படி?" என்கிறீர்களோ?

சுருக்கிச் சொல்லி விடுகிறேன்......கோர்ட்டார்...... செலவுத் தொகையைக் கணக்கிட்டு, பரிதாபி அம்மாளுக்குப் பெருந்தொந்திக் கவுண்டர் கொடுக்கவேண்டிய தொகை ரூ. 6,500 என்றூர்கள். இதைத் தெரிவித்த மூன்றாவது நாள் பெருந்தொந்திக் கவுண்டர் தாம் பரம பாப்பரென்று சத்தியம் செய்து இன்ஸால்வெண்டு கோர்ட்டில் இலவசமாக நுழைந்தார்!

லாயர் பசியேப்ப ஐயங்கார் தம் கக்ஷிக்காரி பரிதாபி அம்மாளின் பேரேட்டைப் புரட்டிக் கணக்குப் போட்டார். அழகாய் அச்சடிக்கப்பட்ட அறுபத்து மூன்று தாள்களில் அடிக்கப்பட்டுக் கடைசியில்,

| | | |
|---|---|---|
| "ஆக மொத்தம், பற்று | | ரூ. 14,999-15—9 |
| ஆரம்பத்தில் வரவு | ரூ. 3,000—0—0 | |
| பாக்கி வரவேண்டியது | | |
| அதிகப்படி பற்று | ரூ. 11,999-15—9 | |
| | 14,999-15—9 | 14,999-15—9 |

31—1—1934 பசியேப்பய்யங்கார், அட்டர்னி"

என்று கணக்கை முடித்திருந்தது.

பரிதாபி அம்மாள் நேராகப் போய் லாயரைப் பார்த்தாள். லாயர் பாக்கி ரூ. 12,000-த்தையும் கேட்டார். அம்மாள் என்ன சொல்லியும் பயன்படவேயில்லை. "இதென்ன அநியாயம்? 'சுண்டைக்காய் கால்பணம், சுமை கூலி முக்கால் பணம்' என்றுயிருக்கிறதே!" என்றாள். ஐயங்கார் "அதுதான் சட்டம்" என்றார். தாவாப் போட்டு ஜயித்ததில் தனக் கென்ன லாபம் என்று அம்மாள் அலறினாள். கோர்ட்டு டிக்ரி நகலை அழகாய் அச்சடித்து அம்மாள் கைகளில் ஐயங்கார் கொடுத்து, "இது" என்றார். அம்மாள் அழுதாள், சிரித்தாள், கெஞ்சினாள், கோபித்தாள், சபித்தாள், சலித்தாள்: ஒன்றும் பலிக்கவில்லை. காலணாவும் கொடேனென்று வீடு பொய்ச் சேர்ந்தாள்.

பாவம், பரிதாபி அம்மாளுக்குப் பசியே பறந்து விட்டது! எங்கே பார்த்தாலும்,

"கடிதம் எழுத ரூ 2—8—0,
அதை அனுப்ப ரூ 2—8—0,
கோர்ட்டுக்குப் போக ரூ 2—8—0,
திரும்பி வர ரூ 2—8—0"

என்று கண்களின் முன் தோன்ற ஆரம்பித்தது. "அட பாவி! 'கேஸு வருமா?' என்று கேட்டா மூனு ரூபாய் கொடுக்கணுமாமே. அதுக்கு அவன் 'வராது' என்று பதில் சொன்னா, அதுக்கும் மூனு ரூபாயாமே! எழுந்தா எட்டு ரூபாயாம்; உக்காந்தா ஒம்பது ரூபாயாம்; அழுதா அஞ்சு ரூபாயாம்; மூச்சு விட்டா மூனு ரூபாயாம்!

சே! சே! சே! இதென்னடி இது! பகல் கொள்ளையா யிருக்குதே......" என்று சதா முணு முணுத்துக் கொண்டிருந்தாள்.

சிலகாலம் காத்திருந்த லாயர் பசியேப்ப ஐயங்கார், பரிதாபி அம்மாள் மேல் தம் பாக்கி ரூபாய் 12,000-க்குப் பிராது செய்தார். அம்மா நேராக வக்கீல் வைக்காமல் கோர்ட்டில் சென்று "கோ" வென்று கதறினாள். ஜட்ஜ் பலவிதமாய்த் தேற்றிக் கடைசியில் சமாதானம் செய்து கொள்ளச் சொன்னார். பக்கத்திலிருந்த பரிகாச நாயுடுவும், பாதாம்கீர் ஸாயபுவும் பிரவேசித்து, ஒருவிதமாய் ராஜீ செய்தார்கள். அதாவது:

"'பட்டை விலாஸம்' என்னும் பொறுப்பு வீட்டில் தனக்குச் சேரவேண்டிய ரூ. 3,500, மாதவாரி ரூபாய் 75 இவைகளுக்காகத் தனக்குள்ள பாத்தியதையைப் பரிதாபி அம்மாள் லாயருக்கு மாற்றிவிட வேண்டியது.

மேற்படி வீட்டை அம்மாள் உடனே காலி செய்து லாயருக்கு ஒப்புவித்துவிட வேண்டியது.

இதற்குப் பதிலாக லாயர் பசியேப்ப ஐயங்கார் தமக்கு அம்மாளிடமிருந்து வரவேண்டிய பாக்கி ரூபாய் முழுவதையும் விட்டுவிட வேண்டியது. மேலும் தாம் அம்மா பேரில் செய்த கேஸுக்கு ஆன செலவுகளையும் விட்டு விட வேண்டியது."

எல்லோரும் பரிதாபி அம்மாள் மிகுந்த அதிர்ஷ்ட சாலி யென்று சொன்னார்கள். ஏனென்றால் ஒரு லாயருக்கு(அட்டர்னி) வரவேண்டிய ஃபீஸ் பாக்கிக்காக அந்தக் கேஸில் தமது கட்சிக்காரர் அடைந்த ஸொத்துக்கள் யாவற்றையும் தாமே தொடர்ந்து எடுத்துக்கொண்டு விட ஸர்வ அதிகாரம் உண்டென்று சட்டத்திலிருப்பதாகச் சொன்னார்கள்......பரிதாபி அம்மாள், பல்லைக் கடித்துக் கொண்டு வீடு வரையில் வந்து வாசற்படியில் விழுந்து

பிரக்ஞை யிழந்தாள். பிறகு மூன்று வருஷம் பைத்தியக்காரர் - ஆஸ்பத்திரியில் இருந்து, சொஸ்தம் செய்து கொண்டு இப்பொழுதுதான் வெளி வந்தாள்.

பசியேப்ப ஐயங்கார், பெருந் தொந்திக் கவுண்டரின் கடன்காரர்களுடைய வார்சுதாரான, "அஃபிஷல் அஸைனி" என்னும் உத்தியோகஸ்தரைக் கண்டு, "பட்டை விலாஸ"த்தில் பெருந் தொந்திக் கவுண்டருக்கு இருந்த பாத்தியதை யாவற்றையும் ரூ. 150-க்கு வாங்கிக் கொண்டு, "பட்டை விலாசம்" என்பதை "அட்டை விலாஸம்" ஆக்கி அதன் வாசற்படி மேலெல்லாம் பட்டை நாமத்தைப் பரக்கச் சாத்திப் பரம சந்தோஷமாய்ப் பரம் பரையுடன் வாழ்ந்து வருகிறார்.

## 7.- சகுனமாவது, மண்ணாங்கட்டியாவது.

"அடே! சடகோபா! இதோ பாரு! உடனே போயி இந்த அப்ளிகேஷனை (மனுவை)க் கோர்ட்டிலே தாக்கல் செய்துட்டு வா" என்று வக்கீல் கிறுக்குசாமி ஐயங்கார் தம் குமாஸ்தாவைக் கூப்பிட்டு அவனிடம் காகிதங்களைக் கொடுத்தார்.

"ஆ......ஆ......ய்...ஷு......" என்று பலமாய் ஒரு தும்மல் கேட்டது.

சடகோபன் சுற்றுமுற்றும் விழித்துப் பார்த்தான். வக்கீலின் ஆபீஸ் ரூமில் ஒரு மூலையில் தப்புச் சாக்ஷி–தனகோடி செட்டியார் உட்கார்ந்து உறுமிக் கொண்டும், தம் வஸ்திரத்தின் மூலையைக் கூராக முறுக்கித் தம் மூக்கில் விட்டுக்கொண்டும் இருப்பதைப் பார்த்தான்.

சடகோபன் :—(எஜமானிடம்)—இந்தாருங்கோ! இதுலே கையெழுத்து சரியாயிருக்கோ பார்த்து வையுங்கோ, பொறுத்து வந்து வாங்கிண்டு போறேன்!

கிறுக்கு :—டே! தடிப்பயலே! எனக்குத் தெரியுண்டா, அவர் தும்மிஞரேன்னு எங்கிட்டெத் திரும்பக் கொடுத்து வாங்கப் பாக்கறயோ? சீ, சீ! போ; சகுன மாவது மண்ணுங்கட்டியாவதுடா! போடா போ!

சட:—மேலும் ராகுகாலமாயிருக்கே! அப்புறம் ஆகட்டுமே.

கிறுக்கு :—என்னடா நான்ஸென்ஸ்! ராவுகாலமும் எழவு காலமும்! இப்போ உடனே தாக்கல் செய்துட்டு வரயா இல்லையா?......எனக்கு இந்த எழவிலெல் லாம் நம்பிக்கை கிடையாதுன்னு தெரியாதா ஒனக்கு?......ஸ்டுபிட்!!

[சடகோபன் மனமில்லாமல் போகிறன்.]

தனகோடி செட்டியார் :—ஏமண்டீ! மன சமாசாரமா இப்புடு இச்சி பம்பிதிரி?

கிறுக்கு :—ஆமாம்......

த. கோ. செ :—(அடித்துக் கட்டிக்கொண்டு எழுந்து ஓடிக் கொண்டே கத்துகிறர்.) ஒரே அப்பாயீ! சடகோபம்! ஒரே!...சடகோபம்......!

சட :—(திரும்பி வந்து) ஏன், கூப்பிட்டீர்களா?

த. கோ. செ :—நாயஞ! இப்புடு ராகுகால..................

கிறுக்கு :—சட்! நிறுத்துமய்யா!... (சடகோபனைப் பார்த்து) ஒன்னெ யாரும் கூப்பிடலே. போடா சீக்கிரம்......

சட :—(முணு முணுத்துக் கொண்டே) ஒரு அப சகுனம் பாக்கியில்லே;. இது எங்கே வாழப்போறது?... க்ஷவரம்தான்........

[போகிறன்.]

த. கோ. செ:—உண்டு, உண்டு! நேனுகூட வஸ்தானு....

[கத்திக் கொண்டே போகிறர்.]

கிறுக்கு :—என்ன மடையன்கள்! சே! சே!!

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த நான் மெதுவாகச் சிரித்து, "ஏன்? கிறுக்குஸாமி! என்ன விஷயம் அது?" என்றேன்.

கிறுக்கு :—ஓ! அது ரொம்ப சாதாரண மனு!...வர வியாழக்கிழமை சேம்பர் கோர்ட்டிலே வரணும். ஒரு மைனர் சமாசாரம்.

நான் :—என்ன மனு? அதில் கோரியிருப்பது என்ன?

கிறுக்கு :—அட! ஒண்ணுமில்லெப்பா! "கண்ணம்மா" ன்னுட்டு ஒரு மைனர் பொண்ணு. அவளுக்கு ஏராளமாகச் சொத்துகளிருக்கு. எல்லாம் அட்மினிஸ்ட்ரேடர் ஜெனரல் (Administrator-General) வசத்துலே இருக்கு. அவள் தகப்பனார் இந்தச் செட்டியார்......அவளை வளர்த்துண்டுவரார்......ஏராளமா இருக்கு......வட்டிக்கு வட்டி சேர்ந்துண்டு வரது, இதுலே கேக்கறதெல்லாம், பெண்ணுக்கு ஒரு வண்டி குதிரையாவது, சின்ன மோட்டாராவது வாங்க ரெண்டாயிரம் ரூபா. கணிசமா ரெண்டு மூணு நகை பண்ண இன்னொரு ஆயிரத்துச் சில்லரை ரூபா.....இங்கிலீஷ் தையல் எல்லாம் கத்துக் கொடுக்கறத்துக்கு ஒரு வாத்தியாரும், சங்கீதம் கத்துத்தரத்துக்கு ஒரு வாத்தியாரும் வைக்கணும்... தலா ஐம்பது ரூபா சம்பளம் கொடுத்தால் போதும். இவ்வளவுதான். இதுக்கெல்லாம் கோர்ட்டு உத்தரவு இல்லாதே செய்ய மாட்டானும் அந்தப் படுபாவி அட்மினிஸ்ட்ரேட்டர் ஜெனரல்......சுத்தப் பயங்கொள்ளியாயிருக்கான்... ரொம்ப மாமூல் அப்ளிகேஷன்; எழுந்து கேட்டதும் ஆர்டர் செய்ய வேண்டியதுதான். அதுவும் ஜட்ஜு நம்ம சுந்தர குமார சாஸ்திரியார்......எல்லா விஷயமும் நன்னாத் தெரிஞ்சவர்!

நான் :—சரிதான்? ஆனா 'ஹியரிங்' வியாழக்கிழமையாச்சே!

கிறுக்கு :—அதனாலே?

நான் :—அவர் தங்கமான மனுஷர்தான்! ஆனால் வியாழக்கிழமையிலே மாத்ரம் அவருடைய டெம்பர் (குணம்) கொஞ்சம் ஒரு மாதிரியிருக்குமே. ஒனக்குத் தெரியாதாப்பா?......... ஏற்கெனவே வியாழக்கிழமை

வேலை ரொம்பத் தொந்தரவுகூட, போதாக்குறைக்கு அன்னிக்கு ஸரியா லண்டன் மெயில் போறநாள். இதெல்லாம் சேந்தா எந்த மனுஷனுயிருந்தாலும் 'சள்ளு' 'புள்ளு' என்னுதான் விழுவான்.

கிறுக்கு :—போ! போ! பாட்டியாட்டமாப் பேசாதே...... எங்கிட்டெ ஒருநாளும் எரிஞ்சு விழமாட்டார்...... அதெல்லாம் நாம்ப பேசறமாதிரியிலே இருக்கு...... சரி, வா போகலாம்.

இரண்டு பேருமாய்ப் பேசிக்கொண்டே கிளப்புக்குப் போய்விட்டோம்.

வியாழக்கிழமையன்று ஹைகோர்ட்டில் ஒரிஜினல் ஸைடில் (அசல் கேஸுகள் தீர்மானிக்கும் இலாகா) ஒரு ஜட்ஜ் சேம்பர் கோர்ட்டு நடத்துவார். அதாவது, கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிற அசல் தாவாக்கள் சம்பந்தப்பட்ட சிறிய மனுக்கள், இன்னும் அதிக நீண்ட விசாரணை தேவையில்லாத விஷயங்கள், இவைகளையெல்லாம் தீர்மானிப்பதற்கு அந்த ஜட்ஜ் தம் 'சேம்பரில்' (அறையில்) உட்கார்ந்து விவகாரம் நடத்துவது வழக்கமாய் விட்டது. அன்று கோர்ட்டில் ஜனக்கூட்டம் அதிகமாயிருக்கும்.........வேலையும் மிகவும் சள்ளை.. ஜன நெருக்கத்தாலும், பேச்சரவத்தாலும், சகிக்க முடியாத தொந்தரவு. தேச முழுதும் "தர்மப் பிரபு" என்றும், "தயாள மூர்த்தி" என்றும் நற்பெயரெடுத்த ஸுந்தரகுமார சாஸ்திரியாருக்கே கோபம் மூட்டக்கூடிய அந்த "சேம்பர்" வேலையின் கஷ்டங்கள் சொல்லாமலே விளங்குவன.

வியாழன் வந்தது......சுந்தரகுமார சாஸ்திரியார், சிவந்த மேனியும் சிரித்த முகமுமாய், காதில் கண்களைப் பறிக்கும் கமலக் கடுக்கன்கள் மின்ன, ராஜகுமாரனைப் போல் தோன்றி, தம் ஆசனத்தில் அழகாய் அமர்ந்தார்.

"ஸைலென்ஸ்!" என்று ஆங்கிலேயக் காவலன் அதட்ட, வேலை ஆரம்பித்தது.

பதினைந்து நிமிஷங்களுக்குள் ஜட்ஜின் சிரித்த முகத்தில் சினக் குறிகள் தோன்றின. வேலை மாத்திரம்

வெகு கிரமமாயும் ஜரூராயும் நடந்து வந்தது. கோர்ட்டி னுள் கும்பல் வெகு அதிகமாயிருந்தது. உள்ளே யிருந்த வர்களுக்கெல்லாம் தவருமல் தலைவலி கண்டிருக்கும். போதாக் குறைக்கு இரண்டு மூன்று விஷயங்களில் ஆஜ ரான வக்கீல்கள் ஜட்ஜினுடைய கோபத்தை அதிகப் படுத்திவிட்டார்கள். வீங்கல் ஸ்வாமி ஐயர் விடாது பேசு பவர்—ஜட்ஜ் அனுகூலமாயிருந்தாலும் ஓயாது பேசுவார் —கடைசியில் ஜட்ஜ் பல்லைக் கடித்துப் பலமாய்க் கண் டித்த பின், பக்கத்திலிருப்பவர்கள் பற்றி இழுத்தால் தான் உட்காருவார்! இந்த மனிதர் அன்று மூன்று கேஸுகளில், ஆஜராகி ஒவ்வொன்றிலும் கண்டவா றெல்லாம் பேசி ஜட்ஜை ருத்திரமூர்த்தி யாக்கிவிட்டார்! போதாக் குறைக்கு வக்கீல் தூங்குமூஞ்சி ராவ் தம் கேஸை எடுத்துக் கூப்பிடும்போது வழக்கம்போல் ஆஜ ராகவில்லை. ஜட்ஜுக்குக் கோபம் பொங்கிவிட்டது. பற் களைக் கடித்துக்கொண்டு, "இந்த உபயோகமற்றவ னெல் லாம் ஏன் கேஸ் போடணும்? இவனுக்கு இருப்பதெல் லாம் இந்த ஒரு கேஸுதானிருக்கும். கூப்பிடும்போது எங்காவது தொலைந்து போகிறதே வழக்கமாய்விட்டது. இவனையெல்லாம் எங்காவது வெளியூரில் முன்சீப் கோர்ட்டுக்கு அனுப்பி, கோர்ட்டுக்கு வெளியே ஆல மரத்து நிழலில் காக்கவைத்துக் கசரத் வாங்கினல் புத்திவரும்" என்று வைதுகொண்டே கேஸை 'டிஸ் மிஸ்' செய்துவிட்டார். செய்த மூன்ருவது நிமிஷம் மூதேவியைப் போல் முகத்தை வைத்துக்கொண்டு தூங்கு மூஞ்சி ராவ் கோர்ட்டினுள் நுழைந்து, ஜட்ஜ் வேறு கேஸை விசாரித்துக் கொண்டிருக்கையில் குறுக்கே பேச, அவரைக் கண்டதும் ஜட்ஜுக்குள் எரிந்துகொண்டிருக் கும் தீயை ஏறத்தள்ளினற் போலாக, கோர்ட்டினுள் நெருப்புப்பொறி பறக்க ஆரம்பித்தது. மணி ஒன்றே முக்காலாயிற்று. ஜட்ஜும் எழுந்து தம் அறைக்குச் சென்ருர். கோர்ட்டும் கலைந்தது.

2-30 மணிக்குக் கோர்ட்டு மறுபடியும் கூடினவுடனே முதலில் விசாரணைக்கு எடுக்கவேண்டிய கேஸு, நமது

கிறுக்குஸ்வாமி ஐயங்கார் தாக்கல் செய்த மனு. நல்ல கொழுத்த ராகுகாலம். சடகோபன் ஒரு புறமாய் நின்று கொண்டு ஆயிரத்தைக் கொடுத்து ஐந்து நூறை வாங்கினவன் போல் முகத்தை வைத்துக்கொண்டு முணு முணுத்துக்கொண்டிருக்கிறான். அந்தச் சமயத்தில் நான் போய்ச் சேர்ந்தேன்.

நான் :—என்னடா சடகோபா? ஒங்க அப்ளிகேஷன் வந்துதோ? என்னவாச்சு?

சட :—இன்னும் வரலே ஸார்! அதெங்கே பொழைக்கப் போறது ஸார்! எள்ளும் தண்ணியும் ரெடியா வச்சுண்டிருக்கிறேன்!

நான் :—ஏண்டாப்பா அப்படிச் சொல்றே?

சட :—என் வயத்தெரிச்சலை கொட்டிக்காதீங்கோ, ஸார்! பொழைக்கிற கேஸாயிருந்தா டிபன் டயத்துக்கு முன்னே வராதோ? சரியா சொல்லி வச்சாப்பலே ராகுகாலத்திலே வரதே ஸார்! ஒண்ணு மாத்திரம் சொல்றேன். சகுனம், ராகுகாலம் இதெல்லாம் வீண் போகவே போகாது—நீங்க வேணும்னு பார்த்துக் கோங்க. எங்க ஐயங்காருக்கு இதுலேல்லாம் நம்பிக்கை யில்லே. வெள்ளேக் காரனுட்டமா இருக்கப் பாக்கறார்! அதோ, அதோ! கேஸ் வந்தாச்சு, பாருங்கோ வேடிக்கை!

[கோர்ட்டுக்குள் இருவரும் ஓடினோம்.]

பெஞ்ச் கிளர்க் :—193......ம் வருஷத்து 388-ம் நம்பர் அப்ளிகேஷன்...கிறுக்குஸ்வாமி ஐயங்கார்!......

கிறுக்கு :—(எழுந்து) இது ஒரு சாதாரணமான மனு...

ஜட்ஜ் :—(முகத்தைச் சுளித்துக்கொண்டு) என்ன சாதாரணமான மனு?

கிறுக்கு :—மைனர் கண்ணம்மாளுடைய சொத்துக்களெல்லாம் அட்மினிஸ்ட்ரேட்டர் ஜெனரல் கையில் இருக்கின்றன...

ஜட்ஜ் :—க்ஷேமம்!

இறுக்கு :—ஏராளமான சொத்துக்கள். ஏழெட்டு லக்ஷம் பொறும்...

ஜட்ஜ் :—ஆகையால் 'தாம்தீம்' என்று செலவு செய்து தொலைத்துவிட வேணுமோ ?

இறுக்கு :—மைனருக்கு வயது பத்தாகிறது....சாயங்கால வேளையில் வெளியில் அழைத்துப் போய்வர ஒரு சிறிய மோட்டார் வாங்க வேணும்...

ஜட்ஜ் : — (சிடுசிடுவென்று) ஒன்றும் வேண்டியதில்லை. எங்காவது மோதி ஒடிந்து போகும்......உயிருக்கே ஆபத்து வரும்...

இறுக்கு :—இல்லாவிடில் குறைந்த விலையில் ஒரு வண்டி, குதிரையாவது கொடுக்க வேணும்.

ஜட்ஜ் :—வண்டியும் வேண்டாம், குதிரையும் வேண்டாம்! எதையாவது கண்டு மிரண்டு குதிரை ஓடி விடும்!

இறுக்கு :—மைனருக்கு நகைகளே இல்லை! காதுக்குக் கமல ஓலைகளும் கழுத்துக்கு ஒரு வைர அட்டிகையும் வாங்கிப் போட்டால் நன்றுயிருக்கு மென்று எல்லோரும் கருதுகிறுர்கள்...

ஜட்ஜ் : — கூடவே கூடாது! எங்காவது தெருவில் போகும்போது போக்கிரிகள் அடித்துப் பிடுங்கிக் கொள்வார்கள்!

இறுக்கு :—சங்கீதம் கற்றுக்கொடுக்க 50 ரூபாயில் ஒரு வாத்தியார் வைக்கவேணும்...

ஜட்ஜ் :—சங்கீதமென்ன சங்கீதம், ஸம்ஸாரிப் பெண்ணுக்கு! அவளைத் தேவடியாளாக்க வேண்டாம்!

இறுக்கு :—ஆனுல் இங்கிலீஷ் படிப்பு சொல்லித் தருவதற்கு 50 ரூபாயில் ஒரு வாத்தியார்...

ஜட்ஜ் :—போதும் போதும், நீங்களெல்லாம் வெள்ளைக்காரர்களாய்ப் போனது!......அந்தப் பெண்ணையும் வெள்ளைக்காரியாக்க வேண்டாம்......பள்ளிக் கூடத்துக்கு அனுப்புங்கள்.

கிறுக்கு :—அவள் தகப்பனுர்...

ஜட்ஜ் :—சுத்த அயோக்கியன்! தப்பு ஸாக்ஷி சொல் விண்டு திரிவது போதாதா? பெண் - ஸொத்தை வேறு கொள்ளையடிக்கணுமோ? மனு டிஸ்மிஸ்.

கிறுக்கு :—எனக்குச் சேரவேண்டிய செலவுத் தொகை யாவது...

ஜட்ஜ் :—ஒழிச்சுண்டு போங்கோ! "மைனர் பணத்தி லிருந்து நூறு ரூபாய் செலவுக்காக வக்கீல் கிறுக்கு ஸ்வாமி ஐயங்காரிடம் கொடுக்க வேண்டியது". ஸரிதானு?

கிறுக்கு :—கோர்ட்டார் இஷ்டப்படியே.

[வெளியே வந்துவிடுகிறர்.]

த. கோ. செ :—ஏமி! ஸ்வாமி!...ஸ்வாமி!...ஏமாயிந்தி?.

கிறுக்கு :— (அவசரமாய்ப் போய்க்கொண்டே) அதோ, குமாஸ்தாவைக் கேளுங்கோ! எல்லாம் சொல்லுவார்.

த. கோ. செ :—ஏமண்டி! மிம்மனி அடுகமன்னுரு!...... ஏமாயிந்தி?

சட :—க்ஷவரம்!

த. கோ. செ :—எட்லா?

சட :—நேரா ஒருதரம்...எதிரா ஒருதரம்!

த. கோ. செ :—மீரு செப்பேதி ஏமியு தெலியலேதே...

சட :—அட கண்ருவியே! டிஸ்மிஸ் ஆய்ப்போச்சையா! நானப்பவே சொல்லலியா? தாக்கல் செய்யச்சே நடந்த அப்சகுனம் போதாதுன்னு, விசாரணைக்கு வரச்சே ராகுகாலமா யிருக்கணுமா? போமய்யா போம்!

த. கோ. செ. :—ராமானுஜா! மன டப்பு எத்தி மனகு இச்சேதானிகி இந்த கஷ்டமா? ஏமி கோர்ட்டு? ஏமி ஜட்ஜு! ஏமி குமாஸ்தாலு!...ஏமி வக்கீலு? செப்பகொண்ட பரிகெத்தி போயினுடே!

[உறுமிக்கொண்டே போகிறர்.]

நான் யோசித்துப் பார்த்தேன்...எந்தக் காரணத்தினால் அந்த அப்ளிகேஷன் தள்ளப்பட்டது? பின்வருமாறு எனக்குள் நானே கேள்விகளைக் கேட்டுக்கொண்டு அவற்றுக்கு ஸமாதானங்களையும் சொல்லிக்கொண்டேன்.

| | |
|---|---|
| செட்டியார் தும்மினதால் இருக்குமா? | சீ, சீ, நான்ஸென்ஸ்! அதுவும் வேணுமென்று மூக்கைக் குடைந்துகொண்டு தும்மினாலா? இல்லை! |
| சடகோபன் போகும்போது அவனைச் செட்டியார் கூப்பிட்டு, தானும் கூட வருவதாகச் சொன்னதினால் இருக்கக்கூடுமா? | ரொம்ப அழகுதான்! எத்தனையோ முறை எனக்கு அம்மாதிரி நடந்து நான் போன காரியம் ஜயமாயிருக்கிறது... |
| ராகுகாலத்தில் தாக்கல் செய்ததினாலா? | ஆனால் அன்று ராகுகாலமிருந்த ஒன்றரை மணி காலமும் யாவரும் எதையும் தாக்கல் செய்ய வில்லையா? தாக்கல் செய்தவையெல்லாம் தள்ளப்பட்டனவா?... ஒரு நாளும் இராது... |
| கிறுக்குஸ்வாமி ஐயங்கார் பேசினதில் ஏதாவது தவறு? | இல்லையே! அவர் பேசுவது எப்பொழுதும் அவ்வளவுதானே......சிலவேளைகளில் அவர் பக்கமும் தீர்மானமாகிறதே... |
| இல்லாவிடில், அன்று லண்டன் போஸ்டில் போகும்படி ஜட்ஜ் மணியார்டர் அனுப்பினதாலா? | இருக்......யாரோ கூப்பிடுகிறார்கள்......திரும்பி வந்து சொல்லுகிறேன்! |

# 8. அவதூறு வழக்கு

சில வருஷங்களுக்கு முன் பட்டணத்தில் "குடி வெற்றி" என்றொரு பத்திரிகை நடந்து வந்தது. அது ஒரு தமிழ்த் தினசரி. அதில் ஒரு நாள் பிரான்டர் என்னும் ஆங்கிலேய கனவான் ஒருவரைக் குறித்து மிகவும் தாறுமாருய்த் தூஷித்து எழுதியிருந்தது.

அந்தப் பிரான்டர் துரை ஒரு தேயிலைத் தோட்டத்தின் சொந்தக்காரர். மிகுந்த தனவந்தர். அவருக்கு ஸம்ஸ்கிருத பாஷையில் அபிமானம் அதிகம். எங்கேயோ பிரசங்கம் செய்தபோது அவர் அந்தப் பாஷையை மிகவும் புகழ்ந்து பேசினர். அந்தச் சந்தர்ப்பத்தில், "முன் காலத்தில் இந்தியாவிலிருந்த முனிவர்கள் தமது கல்வியாலும் நல்லொழுக்கத்தாலும் பரிசுத்தமான நடவடிக்கைகளாலும் யாவருக்கும் புத்தி புகட்டியதுமன்றி, ஸம்ஸ்கிருத பாஷையையும், அதிலுள்ள சிறந்த காவியங்கள், இதிகாச புராணங்கள், தர்ம சாஸ்திரங்கள் முதலிய விலையற்ற மாணிக்கங்களையும் இந்தியா தேசம் இழந்து விடாமல் நிலை நிறுத்தினர்கள்" என்று சொன்னர்.

இது, மேற்படி "குடி வெற்றி" பத்திரிகைக்கு அந்தப் பிரான்டர் துரை மீது அளவிலாத கோபத்தை மூட்டி விட்டது.

"புத்தி நேராக இருந்திருந்தால் அவர் அம்மாதிரி உளறியிருக்கமாட்டார். பிரான்டர் துரை 'பிராண்டி'யைக் குடித்து விட்டு, பிராந்தியடைந்து பிதற்றினர். பிராம்மணர்களுடைய ஒழுக்கத்தையும் அவர்களுடைய நூல்களையும் புகழும் குடியனுக்கு என்ன ஒழுக்கமிருக்கப் போகிறது? அந்தப் பிராம்மணர்களுடைய ஒழுக்கம் தானே யிருக்கும்! அவர்களைப் போல் இவரும் நாள் முழுவதும் பொய்யுரைத்து, நாட்டை மோசம் செய்ய நானுவித வேஷம் போட்டு, நாசியைப் பிடித்துக் கொண்டு நாரியரை ஸ்மரித்துக் கொண்டு நாகரிகமாய் நாணமற்ற

செயல்களைச் செய்யும் ஒரு நய வஞ்சகரா யில்லாவிடில் இவ்வாறெல்லாம் பிதற்றுவாரா?" என்றும், இன்னும் பலவாறாய் அவரைத் தூஷித்தும், அவதூறு செய்தும் எழுதப்பட்டிருந்தது.

பிராண்டர் துரை ஹைகோர்ட்டில் மான நஷ்டத்திற்காகத் தாவா செய்தார். தமக்குப் பிரதிவாதிகள் ரூபாய் 50,000 கட்டிக் கொடுக்க வேண்டு மென்று கோரினார். முதல் பிரதிவாதி, மேற்சொன்ன "குடி வெற்றி" என்னும் பத்திரிகையின் ஆசிரியரான நாக்குப் பூச்சி நாவலர், இரண்டாம் பிரதிவாதி, அந்தப் பத்திரிகையை அச்சிட்டு வெளியிடும் நன்னாடு வளை நாடார்.

பிரதிவாதிகள் தாக்கல் செய்த எதிர் வாதம் என்னவென்றால் :—"தாவா செல்லத் தக்கதல்ல. வாதியைக் குறித்துத் தாவாவில் கண்டவாறு எழுதியது உண்மை. ஆனால் எழுதிய விஷயங்கள் யாவும் உண்மை. ஆதலால் அதில் தவறில்லை. விரோதத்தினால் எழுதியதில்லை. பொது ஜன நன்மைக்காக, பத்திரிகைகள் நடத்துபவர் செய்ய வேண்டிய கடமையை மேற்கொண்டு எழுதியது. பிராண்டர் துரை பொது மனிதர். அவர் செய்தது பொதுப் பிரசங்கம். அதைக் குறித்து விமர்சனம் செய்ய ஸர்வ பாத்தியதையும் உண்டு. வாதிக்கு ஒருவிதமான மான நஷ்டமும் ஏற்படவில்லை. அப்படி ஏதாவது இருந்தாலும் அதற்காக ரூபாய் 50,000 கேட்பது அகாதம். நாமகார்த்தமாய் ஒரு ரூபாய் கொடுத்தால் போதுமானது..."

சில மாதங்கள் சென்று கேஸ் விசாரணைக்கு வந்தது. ஜட்ஜ், மிஸ்டர் வள்ளர்துரை. வாதியின் தரப்பில், லபக்ஸன் என்னும் அட்டர்னியுடன், மிஸ்டர் பிராண்டு என்னும் பிரபல பாரிஸ்டரும், அவருடைய ஜூனியரான கோரோஜன ஐயங்காரும் ஏற்படுத்தப்பட்டார்கள். பிரதிவாதிகளுக்கு அவருடைய நிரந்தரமான வக்கீலான பிஞ்சுன்னி நாயர் இருந்தார். கோர்ட்டில் ஆஜராகிக் கேஸை நடத்த இவருடன் பாரிஸ்டர் சிடுமூஞ்சியையும் பிரதிவாதிகள் நியமித்திருந்தார்கள்.

கோரோஜன ஐயங்கார் :—இந்தக் கேஸில் என் தலைவர் மிஸ்டர் பிராண்டு துரை திடீரென்று நேற்றிரவு கோயமுத்தூருக்குப் போகவேண்டி வந்தது...

ஜட்ஜ் :—(தம் ஒற்றைக் கண்ணாடியை இடது கண்ணில் செருகிக் கொண்டு) ஏன்?

கோரோ:—அங்கே சிரஞ்சீவிக் கவுண்டர் மீது கொலைக் கேஸ் போடப்பட்டு இன்று விசாரணை ஆரம்பமாகிறது. மிஸ்டர் பிராண்டு, கவுண்டருக்காக ஆஜராகப் போயிருக்கிறார். தயவு செய்து ஒரு வாரம் இந்தக் கேஸை வாய்தா...

[ஜட்ஜ் ஏதோ முணுமுணுக்கிறார்.]

சிடுமூஞ்சி :—நான் ஆக்ஷேபிக்கிறேன். இது மிகவும் பழைய தாவா.

ஜட்ஜ் :—(கோரோஜன ஐயங்காரை) வாய்தாக் கொடுக்க முடியாது. நீங்கள் ஏன் நடத்தக்கூடாது?

கோரோ :—அப்படியே! இது ஒரு ஸாதாரணமான தாவா. வாதி, தேயிலைத் தோட்டங்களுக்குச் சொந்தக்காரரான பிராண்டர் என்பவர். அவர் மிகவும் கௌரவம் வாய்ந்த பெரிய மனிதர். பிரதிவாதிகள் "குடி வெற்றி" யென்னும் ஒரு தமிழ்த் தினசரியை நடத்துபவர்கள்.

ஜட்ஜ் :—"குடி வெற்றி" யென்றால் என்ன அர்த்தம்?

கோரோ :—நான் தமிழ்ப் பண்டிதனில்லை. எனக்குத் தெரிந்த வரையில் "குடி" யென்றால் கள், சாராயம் முதலியவற்றைக் குடிப்பது; "வெற்றி" என்றால், "ஜயம்." இந்தப் பத்திரிகையை நடத்துபவர்களுடைய கொள்கை ஒரு வேளை, "அதிகமாய்க் குடிப்பதால் ஜயம் பெறலாம்" என்பதோ என்னவோ?

[நகைப்பு.]

சிடுமூஞ்சி :—என் நண்பர் விளையாடுகிறாரா? "குடி வெற்றி" என்றால் குடிகளுடைய வெற்றி. அதாவது

ஏழைப் பொது ஜனங்களுடைய ஜயமென்று அர்த்தம்.

ஜட்ஜ் :—ஓ! ஊம்!

கோரோ :—மேற்சொன்ன தினசரியில் 193— ம் வருஷம் ஜூன் மாதம் 30-ந் தேதியில் வெளியான பத்திரிகையில் வாதியைப் பற்றித் தாறுமாருய்த் தூஷித்து எழுதிப் பிரசுரித்திருந்தது. அதை அவ்வாறே எடுத்து மொழிபெயர்த்துத் தாவாவில் குறிப்பிட்டிருக்கிறது. வாதி, பண்டைக் காலத்துப் பிராமணர்களைச் சிலாகித்துப் பேசியது தவரும். ஆகையால் அவர் குடிகாரராம்! ஒழுக்க மற்றவராம்! பிராண்டர் என்ருல் பிராந்தி குடிப்பவராம்.

ஜட்ஜ் :—அவ்வாறு "குடி வெற்றி" யிலா எழுதப் பட்டது?

கோரோ :—ஆம், 'குடி வெறி'யில்!

சிடுமூஞ்சி :—(குதித்தெழுந்து) என்ன? என்ன? நான் ஆக்ஷேபிக்கிறேன். என் நண்பர் உரைத்ததை வாபீஸ் வாங்கிக்கொள்ளவேண்டும்.

கோரோ :—நானென்றும் தவருய் உரைக்கவில்லையே.

சிடுமூஞ்சி :—என் கக்ஷிக்காரரைப்பற்றி அவதூருகப் பேசினர்......அவர்கள் குடிவெறியில் எழுதினர்களென்று சொன்னர்.

கோரோ :—ஆம், அதிலென்ன தவறு? இதோ, பாருங்கள்! அன்று வெளியான உங்கள் கக்ஷிக்காரருடைய அழகான பத்திரிகை! மேலே தலைப்பில் அச்சிட்டிருப்பதைப் படியுங்கள் :

"குடி வெறி—30 ஜூன் 193—"

[கோர்ட்டில் இருந்த யாவரும், ஜட்ஜ் உள்படக் கோல்லென்று நகைக்கிறர்கள். சிடுமூஞ்சியின் முகத்தில் கோபக்குறிகள் தோன்றுகின்றன.]

சிடுமூஞ்சி :—அது அச்சுப்பிழை; ஓர் எழுத்து விட்டுப் போயிற்று. வெற்றி யென்பதுமாறி......

கோரோ :—தோல்வியாய்ப் போயிற்று.

[மறுபடியும் அதிக நகைப்பு.]

ஆகையால் குடி வெற்றியிலோ, குடி வெறியிலோ, இவ்வாறு எழுதப்பட்டது. அவை இரண்டுக்கும் அவ்வளவாய் வித்தியாசமிருப்பதாகத் தெரியவில்லை. மிஸ்டர் பிராண்டர்! தயவு செய்து அந்தக் கூட்டில் ஏறி நில்லுங்கள்.

[பிராண்டர் சாக்ஷிக்கூட்டில் ஏறி நிற்கிறர். அவர் கையில் பைபிள் புஸ்தகத்தைக் கொடுத்து, தாம் சொல்வதெல்லாம் ஸத்யமென்று சொல்லச் சொல்கிறர்கள். அவர் அவ்வாறே செய்கிறர்.]

கோரோ :—மிஸ்டர் பிராண்டர்! உங்களுக்கு என்ன ஜீவனம்?

பிராண்டர் :—நான் தேயிலைத் தோட்டங்களைச் சொந்தமாகப் பயிர் செய்கிறேன்.

கோரோ :—உங்களுக்கு என்ன ஸ்திதி? வருஷவாரியில் வருமானமென்ன?

பிரா :—எனக்கு இந்தியாவிலும் சிலோனிலும் ஐம்பது லக்ஷ ரூபாய்கள் பொறுமானமுள்ள தேயிலைத் தோட்டங்கள் இருக்கின்றன. அவற்றிலிருந்து வருஷ வரும்படி நிகரமாய்ச் சுமார் மூன்று லக்ஷம்.

கோரோ :—நீங்கள் எங்கே நிரந்தரமாய் வசிப்பது?

பிரா :—பெரும்பான்மை கொடைக்கானலிலும், அடிக்கடி பட்டணம், நீலகிரி, கொளும்பு முதலிய இடங்களிலும் வசிப்பேன்.

கோரோ :—நீர் சில மாதங்களுக்குமுன் ஒரு பிரசங்கம் செய்தீரா?

சிடுமூஞ்சி :—அதிகப் பிரசங்கம்!

[இவ்வாறு சொல்லிவிட்டுத் தாம் ஒருவர் மாத்திரம் சிரிக்கிறர்.]

பிரா :—[சிடுமூஞ்சியைக் காட்டி] அவர் சொன்னது புரியவில்லையே!

ஜட்ஜ் :—எனக்கும் புரியவில்லை.

கோரோ :—அவருக்கே புரியவில்லை! ஆகையால் நான் கேட்டதற்குப் பதில் கூறும்.

பிரா :—ஆம், எங்கள் சங்கத்தில் ஒரு கூட்டம் நடக்கவே, அதில் நான் ஒரு பிரசங்கம் செய்ய வேண்டி வந்தது. அப்பொழுது பொதுவாய் வடமொழியையும், அதில் செய்யப்பட்டுள்ள கிரந்தங்களையும், சிலாகித்து உரைக்கும்போது, அந்தக் கிரந்தங்களை ஆக்கிய முனிவர்கள் மிகவும் புத்திக் கூர்மை, பரிசுத்தம், ஒழுக்கம், எல்லாம் வாய்ந்தவர்களென்று உரைத்தேன். என் பிரசங்கத்தைச் சிலாகித்து அநேக நண்பர்களும் பத்திரிகாசிரியர்களும் எழுதினார்கள், ஆனால் ஒரு பத்திரிகை மாத்திரம் என்னைத் தாறுமாறாய்த் தூஷித்து எழுதியது.

கோரோ .—அந்தப் பத்திரிகையின் பெயரென்ன?

பிரா :—அதன் பெயர் குடி.........குடி.........என் வாயில் நுழைவதில்லை.

கோரோ :—வாஸ்தவம்தான்! ஆனால் அவர்கள் அதை ஒப்புக்கொள்ள வில்லையே......அந்தப் பத்திரிகையின் பெயர் "குடி வெற்றி"யா?

பிரா :—ஆம்!

கோரோ :— அதில் கூறியதெல்லாம் உண்மைதானா?

பிரா :—நான் பிரசங்கம் செய்தேனென்பது தவிர வேறு ஒரு வார்த்தையும் உண்மையில்லை. என் நடத்தையைக் குறித்து எழுதியிருப்பது அவ்வளவும் பொய்.

[இதற்குள் கோர்ட்டில் கூடியிருந்த கூட்டத்தில் யாவருக்கும் பிராண்டர் துரையைப்பற்றி மிகவும் கௌரவமும் மதிப்பும், பிரதிவாதிகள் மேல் கோபமும் பிறந்து, வாதிக்கு நிச்சயமாய் ஜயமென்று தீர்மானித்து விட்டார்கள்.]

இன்னும் ஏதோ சிலமுக்கியமான கேள்விகளைக் கேட்டுவிட்டுக் கோரோஜனம் உட்கார்ந்து விட்டார்,

உடனே வெகு அட்டஹாஸமாய் பாரிஸ்டர் சிடு மூஞ்சி எழுந்து சாக்ஷியைக் குறுக்கு விசாரணை செய்யத் தொடங்கினுர்

சிடுமூஞ்சி :—மிஸ்டர் பிராண்டர்! "குடி வெற்றி"யை எத்தனை நாளாய் உமக்குத் தெரியும்?

பிரா :—என்னைப்பற்றித் தூஷித்து எழுதியிருப்பதை என் நண்பர்கள் உரைத்து என்னைப் பரிகாசம் செய்யும் வரையில், அம்மாதிரி ஒரு பத்திரிகை இருப்பதே தெரியாது.

சிடு :—எப்போதாவது உமக்கும் அந்தப் பத்திரிகைக்கும் மனஸ்தாபம் உண்டா?

பிரா :—ஒன்றுமில்லை.

சிடு :—உம்மைப் பிரதிவாதிகளுக்கு எப்போதாவது தெரியுமா?

பிரா :—தெரியவே தெரியாதென்று நினைக்கிறேன்.

ஜட்ஜ் :—ஆகையால்தான் அவருடைய நடத்தையைக் குறித்து அவ்வளவு விவரமாய் எழுதினுர்களோ!!

சிடு :—அப்படியல்ல. அவர்கள் எழுதியது விரோதத்தின லில்லையென்று நிருபிக்கப் பார்க்கிறேன்.

ஜட்ஜ் :—விரோதமில்லாமலே அவ்வளவு நிந்தித்த வர்கள், விரோதத்துடன் எழுதியிருந்தால் இன்னும் எப்படி இருந்திருக்குமோ?

[எல்லோரும் அதிகமாய் நகைக்கிறர்கள்.]

சிடு :—நீர் சாராயம் குடிப்பதுண்டா?

பிரா :—அந்தப் பழக்கமே எனக்கில்லை.

சிடு :—வழக்கமாயில்லாவிடினும், எப்போதாவது...?

பிரா :—என்று மில்லை.

சிடு :—நீர் சாராயக் கடைக்குப் போனதே யில்லையா?

பிரா :—என்றுமில்லை.

ஜட்ஜ் :—ஆகையால்தான் அவர் "குடி வெற்றி"ப் பத்திரிகையைப் பார்த்ததே யில்லை போலும்!

[நகைப்பு.]

சிடு :—(படபடப்புடன்) ப்ரபோ! நீங்கள் அவ்வாறு உரைப்பது மிகவும் ஆக்ஷேபிக்கத்தக்கது. அதனுல் எங்கள் பத்திரிகை சாராயக் கடைப் பத்திரிகை யென்று அர்த்தமாகும்.

கோரோ :—ஆம்! நானும் ஆக்ஷேபிக்கிறேன். கோர்ட்டார் சொன்னது தவறு! அது சாராயக்கடைப் பத்திரிகை யல்ல!

ஜட்ஜ் :—பிறகு, என்ன பத்திரிகை?

கோரோ :—சாக்கடைப் பத்திரிகை!

[யாவரும் அலங்கோலமாய் நகைக்கிறர்கள்.]

சேவகன் :—ஸைலென்ஸ்-ஸ்-ஸ்-ஸ்!

பிஞ்சுன்னி நாயர் :—சாக்கடை எங்களுக்குத் தேவை யில்லை. சாக்கடைகளால் ஜீவனம் நடக்கவேண்டியது உங்கள் கட்சிக்காரருக்கே...

["சா" என்றல் தேயிலை, தேத்தண்ணீர் இவற்றைக் குறிக்கும். ஆனுல் இந்த கூடமான அர்த்தம் ஒருவருக்கும் தெரியாமல் போகவே, யாரும் சிரிக்கவில்லை. பிஞ்சுன்னி நாயர்-அசடு வழிய அங்குமிங்கும் விழிக்கிறர்.]

சிடு :—(சாக்ஷியை) நீர் என்றும் விபசாரிகளுடன் சகவாஸம் செய்ததில்லையா?

பிரா :—இல்லை.

சிடு :—நீர் வருமான ஆபீஸுக்குச் சரியான கணக்குகள் அனுப்புவதுண்டா?

ஜட்ஜ் :—மிஸ்டர் சிடுமூஞ்சி! ஏதாவது ஆதாரத்தைக் கொண்டு இவ்வாறு கேட்கிறீர்களா?

சிடு :—ஆம்; என் கக்ஷிக்காரர்கள் சொல்லித்தான் கேட்கிறேன்.

[நாக்குப்பூச்சி நாவலரும் நண்டுவளை நாடாரும் முகங்களில் ஆச்சரியக் குறியுடன் ஒருவரை யொருவர் பார்க்கிறர்கள்.]

பிரா :—நான் அனுப்பும் கணக்குகள் மிகவும் சரியானவை.

ஜட்ஜ் :—போதும்! இனி ஆதாரமற்ற கேள்விகளைக் கேட்க விடமாட்டேன்...ஊம்! காலதாமதமாகிறது.

சிடு :—(சாக்ஷியை) உமக்கு முசிரி சுப்ரமணிய ஐயரைத் தெரியுமா?

பிரா :—தெரியாது.

ஜட்ஜ் :—யார் அவர்?

சிடு :—அவர் வந்து ஒரு... இவர்......

[நகைப்பு.]

கோரோ.—அவர் ஒரு பிரபலமான சங்கீத வித்வான். ஆனால் அவருக்கும் இந்தக் கேஸுக்கும் சம்பந்தமென்னவோ தெரியவில்லை.

சிடு :—தெரியும், தெரியும், சீக்கிரம் தெரியும்!! (சாக்ஷியை) அவர் "தேயிலைத் தோட்டத்திலே" என்று ஒரு பாட்டுப் பாடி யிருக்கிறாரே, தெரியுமா உமக்கு?

பிரா :—தெரியாது; இந்திய சங்கீதத்தைக் குறித்து எனக்கு ஒன்றுமே தெரியாது.

சிடு :—அந்தப் பாட்டில் உம்மைப் போன்ற தேயிலைத் தோட்டச் சொந்தக்காரர்கள் செய்யும் அட்டூழியங்களையும் அக்கிரமங்களையும் அவர் விவரித்துச் சொல்லி யிருக்கிறாரே, தெரியுமா?

கோரோ :—இந்தக் கேள்விக்கு நான் ஆக்ஷேபிக்கிறேன். முசிரி சுப்பிரமணிய ஐயர் ஏதோ ஒரு பாட்டில் பொதுவாய்ச் சில விஷயங்களைப் பற்றிப் பாடியிருக்கலாம். அது எவ்வாறு இந்தக் கேஸில் வரக்கூடும்? அந்தப் பாட்டை முதலில் முசிரி சுப்பரமணிய ஐயர் கட்டினாரா?......இல்லை. அதில் சொல்லியிருக்கும் விஷயங்கள் அவருக்கு நேராகத் தெரிமா?...தெரியாதென்று நினைக்கிறேன். அவர் பிரதிவாதிகள் தரப்பில் சாக்ஷியாய் வந்து, "அவையெல்லாம் நிஜமானவை; தமக்கு நேராகத் தெரியும்" என்று சொன்னாலொழிய அதைப் பற்றி என் நண்பர் கேட்பது தவறு.

ஜட்ஜ் :—(சிடுமூஞ்சியை) நீங்கள் முசிரி சுப்ரமணிய ஐயரைக் கூப்பிட்டு விசாரிக்கப் போகிறீர்களா? அந்தப் பாட்டில் பாடியிருக்கும் விஷயங்கள் அவருக்கு நேராகத் தெரியுமா?

சிடு :—தெரியாமலா அவ்வளவு உருக்கமாய்ப் பாடியிருக்கிறார்? மனிதன் நெஞ்சடைத்துக் கண்ணீர் விட்டு அழுது கொண்டு பாடுவது போலிருக்கிறதே...நான் அவரை விசாரிக்கப் போவதில்லை. ஆனால் அந்தப் பாட்டு அடங்கிய பிளேட்டைக் கொண்டு வந்திருக்கிறேன். அதைப் பாடவைத்து...

ஜட்ஜ் :—இது கோர்ட்டு; காப்பி ஹோட்டலில்லை. முசிரி சுப்ரமணிய ஐயரைக் குறித்து ஒன்றும் கேட்கலாகாது. இது என் தீர்மானம்...ஊம். காலதாமதமாகிறது.

சிடு :—இதோ கடைசி விஷயம்! இதில் வாதியின் யோக்யதை வெட்ட வெளிச்சமாய்விடும்......மிஸ்டர் பிராண்டர்! கேட்டதற்கு நேராகப் பளிச்சுப் பளிச்சென்று சுருக்கமாய்ப் பதில் சொல்ல வேண்டும்... உமக்குக் கல்யாணமாயிருக்கிறதா?

பிரா :—இல்லை.

சிடு :—நீர் எங்கே குடியிருக்கிறீர்?

பிரா :—எழும்பூரில் என் சொந்த வீடாகிய "பிராண்டர் காட்டேஜி"ல்.

சிடு :—நீர் ஒழுக்க நெறி தவறாத பரம யோக்யர் தானே?

பிரா :—அவ்வாறு தான் நினைக்கிறேன்.

சிடு :—உமக்குச் சகோதரிகள் உண்டா?

பிரா :—இல்லை.

சிடு :—மனைவி இல்லை! ஸகோதரிகளில்லை!...நீர் நெறி தவறாமல் உமது சொந்த வீட்டில் வசித்து வருகிறீர்?

பிரா :—ஆம்.

சிடு :—உமது வீட்டில் எத்தனை வேலையாட்கள்?

பிரா :—ஏழு பேர்...ஆண்பிள்ளைகள்.

சிடு :—அப்படியா ? சந்தோஷம் ! உமது வீட்டில் உம்மை யன்றி, ஒரு ஸ்திரீ வசித்து வருகிறாளா ?

பிரா :—ஆம்...அவள்...

சிடு :—கேட்டதற்குப் பதில் ! பாட்டிக் கதை யெல்லாம் வேண்டாம். அந்த ஸ்திரீ உமது வேலைக்காரி யல்லவே ?

பிரா :—இல்லை.

சிடு :—உம்மைக் கலியாணம் செய்து கொண்ட மனைவி யல்லவே ?

பிரா :—ஐயோ ! அவள்...

சிடு :—அவளுக்குத் தபாலில் கடிதங்கள் வருவதுண்டா ?

பிரா :—உண்டு.

சிடு :—அவற்றுக்கு மேல் விலாஸம் "மிஸஸ் பிராண்டர்" என்று தானே எழுதி யிருக்கும் ?

பிரா :—ஆம்.

சிடு :—அவளைப் பார்க்க அநேகம் பேர் வருவதுண்டா ?

பிரா :—சிலர் வருவதுண்டு.

சிடு :—அவர்களும் 'மிஸஸ்' பிராண்டரைப் பார்க்க வருவ தாகத்தானே கூறுவார்கள் ?

பிரா :—ஆம்.

சிடு :—(கனைத்துக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்து) ஆகையால் அந்த வீட்டில், வேலையாட்கள் தவிர, நீரும், 'மிஸஸ் பிராண்டர்' என்று பெயர் வைத்துக் கொண்டு, ஆனால் உம்மை மணம் செய்து கொள்ளாத ஒரு ஸ்திரீயும், வேறொரு துணையுமின்றி, ஒன்றாய் வசித்து வருகிறீர்களோ ?......ஒரே வார்த்தையில் பதில் !

பிரா :—(மிரள மிரள விழித்துக் கொண்டும், தடுமாறிக் கொண்டும், விழுங்கிக் கொண்டும்) ஆம்...

சிடு :—போதும் ! இது போதும், உமது ஒழுக்கத்துக்கு அறிகுறி !

[சரேலென்று உட்கார்ந்து விடுகிறார்.]

கோர்ட்டில் பெருங் குழப்பம்! ஜட்ஜு நிமிர்ந்து உட்கார்ந்துவிட்டார். கோரோஜன ஐயங்கார், லபக்ஸன் துரையைப் பார்த்து மூன்றும் பேஸ்து வைத்தவரைப் போல் விழிக்கிறார். சிடுமூஞ்சியும் பிஞ்சுன்னி நாயரும் குதூகலிக்கிறார்கள். கோர்ட்டில் பலர் பலவாறாகப் பேசுகிறார்கள். "என்ன விந்தை! கடைசியில் சிடுமூஞ்சி ஒரே போடு போட்டு விட்டாரே! பிராண்டர் துரையின் யோக்கியதை வெட்ட வெளிச்சமாய் விட்டதே! அடாடா! வைப்பாட்டியைப் பகிரங்கமாய் வைத்துக் கொண்டு மிகவும் யோக்கியரைப் போல் வேஷம் போட்ட இந்தத் துரைக்கு மான நஷ்டம் வேறா? தொலைந்தது கேஸ்! என்ன இருந்தாலும் பாரிஸ்டர் சிடுமூஞ்சி பெரிய பேர்வழி! நல்ல அனுபவசாலியில்லையா? எவ்வளவு பேரைப் பார்த்திருப்பார்? ··· கோரோஜன ஐயங்கார் ஜூனியர் தானே?...பாவம்!—" என்றெல்லாம் பேசவும், நினைக்கவும் ஆரம்பித்தார்கள்.

லபக்ஸன் துரை கோரோஜனத்திடம் ஏதோ உரைத்தார். கோரோஜனம் மெல்லத் தம் ஆடையை அப்படியும் இப்படியும் இழுத்துக் கொண்டு, மறு விசாரணை செய்ய எழுந்தார்.

கோரோ:—மிஸ்டர் பிராண்டர்! உம்மை என் நண்பர் 'மிஸஸ் பிராண்டர்' என்னும் ஒரு ஸ்திரீயைக் குறித்துக் கேட்டாரா?

பிரா:—ஆம்.

கோரோ:—(மிகவும் தீனமான ஸ்வரத்தில்) அந்த ஸ்திரீ யார்?

பிரா:—என் தாயார்!

[கோலாகலம்! ஜட்ஜினுடைய ஒற்றை மூக்குக் கண்ணாடி 'தொபக்' என்று கண்ணிலிருந்து விழுந்தது! அநேகர் கைகளைக் கொட்டியும் விட்டார்கள்.]

ஜட்ஜு வள்ளர் துரை எழுந்து நின்று விட்டார். சிடு மூஞ்சி பொட்டென்று கீழே விழுந்து மூர்ச்சையானர். பிஞ்சுன்னி நாயர் மேற்குத் திக்கை நோக்கிப் பிடித்தார் ஓட்டம். கோரோஜன ஐயங்கார் முப்பத்திரண்டு பற்களையும் காட்டிக்கொண்டு சுற்று முற்றும் பார்த்தார். பிராண்டர் சாட்சிக் கூட்டிலேயே சாய்ந்துவிட்டார்.

மூன்று நாட்கள் கழித்துக் கேஸ் முடிந்தது. கோயமுத்தூர் கேஸ் வாய்தா ஆகிவிடவே பாரிஸ்டர் ப்ராண்டு துரை மறு நாளே பட்டணம் வந்து, பிரதி வாதிகளைக் கூட்டில் குளறடித்து, கடைசியில் வாதிக்கு ரூபாய் பதினையாயிரமும், செலவுத் தொகையும் வாங்கிக் கொடுத்தார்.

கேஸ் முடிந்த இரண்டாம் மாதம் "குடி வெற்றி" பத்திரிகை இருந்த இடத்தில் புல் முளைத்து விட்டது.

## 9. சாட்சி விசாரணை

"சாட்சி விசாரணை" என்ருல் ஒரு கேஸில் ஏதாவது ஒரு விஷயத்தை நிரூபிப்பதற்காக அதைக் குறித்து நேரில் தெரிந்தவர்களைக் கோர்ட்டில் ஆஜர்ப்படுத்தி, அவர்களை விசாரிப்பது. ஒருவரை வாதி தன் தரப்பில் சாக்ஷியாய்க் கோரினனென்று வைத்துக் கொள்ளுங்கள். அவருக்குப் படிச்செலவு முதலியவைகளைக் கட்டி, கோர்ட்டில் வரவழைத்துக் கூட்டில் ஏற்றிய பின் அவரை, "ஸர்வ சக்தியுள்ள ஸ்வாமிக்கு முன்பாக நான் சொல்வது நிஜம், எல்லாம் நிஜம், நிஜம் தவிர வேருென்றுமில்லை" என்று ஸத்தியம் செய்ய வைப்பது. பிறகு வாதியின் வக்கீல் அவரைக் கேள்வி கேட்டு, அவை மூலமாய் அவருக்குத் தெரிந்த விஷயங்களைக் கோர்ட்டாருக்குத் தெரியுமாறு சொல்ல வைப்பது. இதற்குப் "பிரதம விசாரணை" என்று பெயர். பிரதம விசாரணையில் சாக்ஷியை வெகு ஜாக்கிரதையாகக் கேள்விகள் கேட்க

வேண்டும். சொல்ல வேண்டிய பதிலைச் சொல்லிக் கொடுக்கத் தக்க கேள்விகள் கேட்கலாகாது. "வாதியை முதலில் அடித்தது பிரதிவாதி தானே?" என்று கேட்கக் கூடாது. ஆனால் "யார் முதலில் வாதியை அடித்தார்கள்?" என்று கேட்பதே நியாயமானது.

பிரதம விசாரணை முடிந்ததும், பிரதிவாதியின் வக்கீல் எழுந்து சாக்ஷியைக் கேள்விகள் கேட்கவேண்டும். இதற்குக் "குறுக்கு விசாரணை" என்று பெயர். இது மிகவும் முக்கியமான அம்சம். குறுக்கு விசாரணையில் சாக்ஷியை எம்மாதிரி வேண்டுமென்றாலும் கேட்கலாம். வேண்டு மென்று அவனை ஏமாற்றி, தவறான பதிலை வரவழைக்கவும் பார்க்கலாம்.

உதாரணமாக:

சாந்தலிங்கம் என்னும் மைனருக்காக அவன் தகப்பனாரகிய விசுவலிங்க செட்டியார் வாங்கிய கடன்கள் மிகவும் அக்கிரமமென்றும், செல்லத் தக்கன அல்ல வென்றும் கேஸ் செய்யப்பட்டது. தேவடியாளுக்கும், குதிரைப் பந்தயங்களுக்கும், குடிக்கும் செலவு செய்ததற்காகக் கடன்கள் வாங்கப்பட்டனவென்பதும், அவ்வாறே செலவு செய்யப்பட்டனவென்பதும், குடும்ப சொத்துக்களில் மைனருடைய பாகத்தைக் கடன்கள் கட்டுப் படுத்த மாட்டா வென்பதும் வாதியின் தாவா. விசாரணை நடந்தது. வாதியின் தரப்பில் சாக்ஷிகள் அகப்படுவது மிகவும் கஷ்டமாய்விட்டது. குதிரைப் பந்தயம், குடி விஷயங்களை நிரூபிக்க யாரும் அகப்படவில்லை. திரிபுர சுந்தரி என்னும் ஒரே சாக்ஷி ஆஜரானள். வாதியின் வக்கீல் அவளைக் கூட்டிலேற்றிக் கேட்டதற்கு, தான் தாஸி யென்றும், தன்னை விசுவலிங்கம் செட்டியார் வைத்திருப்பதாகவும், தனக்கு ஏராளமாய் அவர் பணங் களும் ஆடைகளும் கொடுத்ததாகவும், இன்னும் இதர வைப்பாட்டிகளை அவர் வைத்திருந்ததாகவும், தன்னை அடிக்கடி மைசூர், நீலகிரி, கோடைக்கானல் முதலிய

இடங்களுக்கு அழைத்துச் சென்றதாகவும், திரிபுர சுந்தரி திவ்யமாய் வாக்கு மூலம் கொடுத்தாள். வக்கீல் சிம்மக்குட்டி ஐயங்கார் பிரதிவாதிக்காக எழுந்து குறுக்கு விசாரணை செய்யத் தொடங்கினார். இவர் நல்ல புத்தி சாலி. இந்தத் திரிபுரசுந்தரி அம்மாள் எந்த நாளிலும் மதராஸை விட்டு வெளியே போனவளில்லை யென்று இவருக்குச் சந்தேகம் தோன்றிற்று. ஆகையால் பின் வருமாறு கேட்டார்:

சிம்:—ஏனம்மா, நீங்கள் செட்டியாருடன் நீலகிரிக்கு வாஸ்தவமாகப் போனீர்களா?

திரி:—என்ன அப்படி கேக்கறீங்களே? நாலஞ்சு தடவை போயிருக்கேனே!

சிம்:—முதல் வகுப்பு வண்டியிலா?

திரி:—ஆமாங்க.

சிம்:—ஒரே நெட்டாகவா, வழியில் சிதம்பரத்தில் இறங்கினீர்களா?

திரி:—ஒரு சமயம் எறங்குவோம், ஒரு சமயம் நேரா போவோம்.

சிம்:—இறங்கும்போது நடராஜா கோவிலுக்குப் போய்த் தரிசனம் செய்வீர்களா?

திரி:—ஆமாம்.

சிம்:—மறுநாள் புறப்பட்டுத் திருநெல்வேலி வழியாய் நேராக நீலகிரிக்குப் போய்விடுவீர்களோ?

திரி:—ஆமாம்.

சிம்:—திருநெல்வேலியில் எப்பொழுதும் இறங்குவதில்லை?

திரி:—கிடையாது.

சிம்:—அதேமாதிரியாய் மைசூருக்கும் போயிருக்கிறீர்களா?

திரி:—ஆமாம்.

சிம்:—நெல்லூர் வழியாகவா? புதுச்சேரி வழியாகவா?

திரி:—புதுச்சேரி வழியாக.

சிம் :—கோடைக்கானலுக்குப் போனபோது எங்கே இறங்கி யிருந்தீர்கள் ?

திரி :—ஒரு பெரிய பங்களாவில்.

சிம் :—அதற்கும் ரயில்வேஸ்டேஷனுக்கும் எவ்வளவு தூரம்?

திரி :—ரொம்பக் கிட்டம். கூப்பிடு தூரம்......

சிம்மக்குட்டி உட்கார்ந்து விட்டார்......கேஸ் தள்ளுபடியாயிற்று.

குறுக்கு விசாரணை செய்வதில் எவவளவோ புத்தி நுட்பமும், லோகானுபவமும் வேண்டும். அவை படைத்த நிபுணர்கள், ஒரு சரியான சாக்ஷியைக் குறுக்கு விசாரணை செய்யும்போது கவனித்துக் கொண்டிருப்பதே ஒரு பெரிய அதிர்ஷ்டமான விஷயம்.

குறுக்கு விசாரணை முடிந்ததும், வாதியின் வக்கீல் சாக்ஷியை மறுபடியும் சில கேள்விகள் கேட்கலாம். இதற்கு "மறு விசாரணை" என்று பெயர். மறு விசாரணையில் மறுபடியும் பழைய விஷயங்களைக் குறித்தே கேட்கலாகாது. குறுக்கு விசாரணையில் சாட்சி சொன்ன பதில்களினால் ஏதாவது சந்தேகம், கலவரம் ஏற்பட்டிருந்தால் அதை நீக்கவேண்டிய கேள்விகளையே கேட்கலாம்.

சாக்ஷி, கேட்ட கேள்விகளுக்கு நேராய்ப் பதில் சொல்ல வேண்டும். கேட்காத விஷயங்களைக் குறித்து ஏதாவது பதில் சொன்னால், விசாரிக்கும் வக்கீலோ, ஜட்ஜோ, அவசியம் தலைமேல் தட்டி, "கேட்டதற்குப் பதில் சொல்லு......காலத்தைப் போக்காதே" என்று கண்டிப்பார்கள். இதில்தான் ஆயிரக்கணக்கான வினோதங்களும் ரஸமான சம்பவங்களும் ஏற்படுகின்றன. சாக்ஷியைக் குறுக்கு விசாரணையில், "ஏனய்யா, உம்மை மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தண்டித்திருக்கிறாரா, இல்லையா ?" என்று வக்கீல் கேட்கிறார்.

சாக்ஷி :—அந்த விஷயம்...

வக்கீல் : – கேட்டதற்குப் பதில்......உண்டா ? இல்லையா ?

சாக்ஷி : – உண்டு......ஆனால்.

வக்கீல் :—'ஆனால் போனால்' எல்லாம் வேண்டாம். கேட்டதற்கு மாத்திரம் பதில் சொல்லுங்கள்.

பிறகு வேறு விஷயமாய்க் கேட்க ஆரம்பிக்கிறார். வெகுநேரம் கழித்து, சாக்ஷியைக் கோரின தரப்பின் வக்கீல் " மறு விசாரணை"யில் இதைக் கவனத்தில் வைத்துக்கொண்டு சாக்ஷியைப் பின் வருமாறு கேட்கிறார்.

சொந்த வக்கீல் :—ஏன் ஸார் ? என் நண்பர், உங்களை மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தண்டனை யடைந்தீரா என்று கேட்டாரல்லவா ?

சாக்ஷி :—ஆம்.

சொ. வக்கீல் :—என்ன தண்டனை ? எதற்காக ?

சாக்ஷி :—5-ரூபாய் அபராதம் பொது இடத்தில் 'நியூசன்ஸ்' செய்ததற்காக.

சொ. வக்கீல் :—அது என்னவாயிற்று ?

சாக்ஷி :—ஹைகோர்ட்டில் அப்பீல் செய்தேன்......அந்த இடம் " பொது இடமில்லை" என்று சொல்லி ஜட்ஜ் தண்டனையை ரத்து செய்து விட்டார்.

பிழைத்தார் சாக்ஷி. ஒருவேளை சொந்தத் தரப்பு வக்கீல் ஞாபகமறதியினாலோ, எதனாலோ அதைக் குறித்துக் கேட்டிராவிடில், ஜட்ஜ் மனதில் இவர் கிருமினல் கோர்ட்டில் ஏதோ விபரீதமான குற்றத்திற்குத் தண்டனை பெற்ற அயோக்கியரென்று பட்டு இவரைக் குறித்து இழிவாகத் தீர்மானத்தில் சொல்லக்கூடுமல்லவா ?

ஆகையால் சாக்ஷிகளை விசாரணை செய்யும் வக்கீல்கள் வெகு கவனமாகவும் ஜாக்கிரதையாகவும் இருக்க வேண்டும். என்பதற்குச் சற்றும் சந்தேகமில்லை. இல்லாவிடில் விபரீதங்களெல்லாம் சம்ப விக்கக்கூடும். சாக்ஷியும் வெகு ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்பதற்குச் சற்றும் சந்தேகமில்லை. மிகவும் பயந்து தயங்கிப் பேசினால் குறுக்கு விசாரணை செய்யும் வக்கீல் குதிரையேறி விடுவார். அதிகமாய் எதிர்த்துப் பேசினால் ஜட்ஜ் அதட்டி அடக்குவதுடன், எதிர் தரப்பு வக்கீல், "ஓய் ! இது கோர்ட்டு. கவனமிருக்கட்டும். ஒங்க

மாமனுர் வீட்டுத் தெருத்திண்ணையில்லை. வாயை ரொம்ப ஓட்டாதீர்!" என்று உறுமிக் கர்ஜித்துச் சுற்று முற்றும் பார்ப்பார். ஆனுல் சில வேளைகளில் துடுக்காய்க் கேள்விகள் கேட்கும் வக்கீலுக்குச் சரியான பதில் ஒன்று சொன்னுல் அதனுடன் அவர் துடுக்கும் அடங்கி விடும்; சாக்ஷிக்கும் நிம்மதி வாய்க்கும்.

ஒரு முறை நல்ல ஸ்திதியில் இருக்கும் பெரிய மனிதர் சாக்ஷிக் கூட்டில் ஏறி வாதி தரப்பில் சாக்ஷியம் கொடுத்துக் கொண்டிருந்தார். இவரைக் குறுக்குக் கேள்விகள் கேட்பதற்குப் பிரதிவாதியின் வக்கீல் ஆரம்பித்து வெகு துடுக்காகவும், தடபுடலாகவும் கேட்க ஆரம்பித்தார். சாக்ஷி சற்றும் கலவரப்படாமல், கோபமடையாமல், வெகு சாவதானமாய்க் கேட்டவரையில், மரியாதையுடன் பதிலளித்து வந்தார். வக்கீலுக்கு ஒன்றும் ஓடவில்லை; கோபம் வந்து விட்டது. சாக்ஷியை எப்படியாவது அவமானப் படுத்த வேண்டுமென்று கண்டவாறெல்லாம் கேள்விகளைக் கேட்கத் தொடங்கினுர்.

வக்கீல் :—ஏன் ஸார், நீங்கள் வாதியின் வீட்டிற்கு அன்று காலை, பிரதிவாதி வந்து கைம்மாற்ருக ரூ. 1,000 கடன் வாங்கிக் கொண்டிருந்த சமயத்தில் சரியாய்ப் போக நேர்ந்ததா?

சாக்ஷி :—ஆம்.

வக்கீல் :—அப்பொழுது மணி என்ன இருக்கும்?

சாக்ஷி :—நான் போகும் போது மணி 8-47. கடன் கொடுக்கும் போது 8-59.

வக்கீல் :—(மிகுந்த குதூகலத்துடன்) சரியாய் அகப்பட்டுக் கொண்டீர்! மணியும் 'மினிட்'டும் இவ்வளவு நாட்கள் கழித்து உமது ஞாபகத்தில் இருக்கிறதா?

சாக்ஷி :—ஆமாம். பிரதிவாதிக்கு இவ்வளவு பெரிய தொகையை எழுத்தொன்றுமில்லாமல் வாதி கொடுக்கிருரே; இவன் மஹா அயோக்கியனுயிற்றே; இது சந்தேகமில்லாமல் கோர்ட்டுக்கு வரக்கூடிய விஷயம்; நம்மை அவசியம் சாக்ஷியாய் இழுப்பார்கள்; யாராவது ஒரு மடையன் கண்டபடி யெல்லாம்

கேட்கலாகும் என்று இந்த விஷயங்களை யெல்லாம் நன்ருய்க் குறித்து வைத்துக்கொண்டிருந்தேன்.

[பெரு நகைப்பு.]

வக்கீல் திடீரென்று உட்கார்ந்தார். அவருடைய குறுக்குக் கேள்விகளினுல் லாபம் என்ன? தம் முகம் அசடு தட்டிப் போனது மல்லாமல் தம் கக்ஷிக்காரன் பரம அயோக்கியனென்று சாக்ஷி வாயினின்றும் ஆணி அறைந் தாற்போல் மதிப்புரை வாங்கிக் கொடுத்தார். "ஓட்டக் கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்றது போலாயிற்று.

ஆகையால் குறுக்கு விசாரணை செய்யும் வக்கீல்களும் நியாயமாகக் கேள்விகள் கேட்க வேண்டும். சாக்ஷிகளும் கூடியவரையில் கேட்டதற்கு மாத்திரம் சுருக்கமாய்ப் பதில் சொல்ல வேண்டும். கேட்காத விஷயத்தைப் பற்றி எப்பொழுதும் ஒன்றும் சொல்லக் கூடாது.

ஆனுல், குறுக்கு விசாரணை செய்யும் வக்கீல், "ஐயா? நான் கேட்பதற்கு 'உண்டு' 'இல்லை' என்று பதில் சொல்லவேண்டும். பாட்டி கதை யெல்லாம் வேண்டாம்... இதோ பாருங்கள்! இந்த வருஷம் ஆரம்பித்தது முதல் நீங்கள் உங்கள் வைப்பாட்டி வீட்டுக்குப் போவதை நிறுத்திவிட்டீர்களா? ஒரே வார்த்தையில் 'ஆமாம்' என்ருே, 'இல்லை' என்ருே பதில் அளிக்க வேண்டும்,.ஊம்.. சீக்கிரம்!......" என்று ஒரு சாக்ஷியைக் கேட்டால் அவர் எப்படி அவ்வாறு பதில் சொல்லமுடியும்? "ஆமாம்" என்ருல், அந்த வருஷம் ஆரம்பம் வரையில் வைப்பாட்டி வீட்டுககுப் போய்க்கொண்டிருந்ததாக ஒப்புக் கொள்வ தாய் விடும்..." இல்லை" யென்ருல் இன்னும் விபரீதம்... என்ன செய்வது? இம்மாதிரி கேள்விகளைக் கேட்கும் வக்கீல்களைத் தவருமல் ஜட்ஜ் கண்டிப்பார். அப்படிக் கண்டிக்கத் தவறினுல் சாக்ஷியை வரவழைத்த வக்கீல், எழுந்து ஆக்ஷேபிப்பார். அதுவும் இல்லை யென்ருல் சாக்ஷியே தைரியமாயும் வணக்கமாயும், அந்தக் கேள்விக்கு அவர் கோரியபடி பதிலுரைக்க இயலா தென்று தெரிவித்துவிட வேண்டியது.

# அநுபந்தம்

[சுல்தான்பேட்டை, ஸப்-அஸிஸ்டெண்டு மாஜிஸ்ட்ரேட் என்னும் நாடகத்திலே முதலாவது காட்சிக்கு அடுத்ததாக இக்காட்சியை உபயோகிக்கலாம்.]

## சுல்தான்பேட்டையில் ஒரு தெரு

[கான்ஸ்டேபில் 642-ம், இன்ஸ்பெக்டர் சுப்பையரும் பிரவேசிக்கிறார்கள்.]

சுப் :—டே, **642**! ஜாக்ரதை! இந்த பீட்லே தெரியுமா? ஊர் கொஞ்சநாளா ரொம்ப கலபாவா இருக்குது. வெறகு கட்டை, அரிசி, வெலெயெல்லாம் மலெயா ஏறிப்போயிக்குது. கடையெல்லாம் லூட்டிங் அடிக்கப் போறாங்களாம். கண்ணெ தெறந்துண்டு உஷாரா இருடா, தெரியுமா?

642 :—ஸரிதானுங்க ஸார்! இங்கெ ஒண்ணும் பயமில்லே. புது மாஜிஸ்ட்ரேட் வந்திருக்காருன்னு ஊரெல்லாம் சும்மா அலறிக்கினு இருக்குது. ஆளு பச்சை மொளகான்னு அங்கெ இங்கெ நடுங்கிக்கினு இருக்காங்க. அதெல்லாம் கலகம் கிலகம் ஒண்ணும் நடக்காதுங்க.

சுப் :—ஸரி, ஸரி, உஷார்! டே, டே! இது யாருடா?

642 :—இவர்தானுங்க தாலுக் அப்பீசு எட்டுகிளார்க்குங்கோ! இவரு பேரு கோபாலய்யங்காரு ஸார்! நாயமா இவருக்குத்தானுங்க மாயிஷ்டேட் வேலே ஆயிருக்கணம்னு சொல்ராங்க.

[கையிலே ஒரு பையில் காய் கறிகள் எடுத்துக் கொண்டு மார்க்கெட்டிலிருந்து திரும்பி வருகிறார் கோபாலய்யங்கார்.]

ஸாமி! தண்டங்க.

கோபா :—தீர்க்காயஸா நன்னாயிரு! இவா யாரு, தெரியலெயெ, ஒருவேளெ புதுசா போஸ்ட் பண்ணியிருக்கிற இன்ஸ்பெக்டர்வாளோ?

சுப் :—ஆமாம் ஸார். உங்களை மீட் பண்ணனும்னு வந்துண்டு இருந்தேன். கும்பிடப்போன தெய்வம் மாதிரி...ஹி! ஹி! ஹீ!

கோபா :—சே! சே! அப்படியெல்லாம் சொல்லப்படாது. ரொம்ப ஸந்தோஷம்; நானும் வந்து பார்க்கணும்னு நெனச்சுண்டு இருந்தேன் பாருங்கோ! மார்க்கெட்டுக்குப் போய் வரத்துக்கும் மாரடிச்சுக்கரதுக்கும் தான் ஸரியாயிருக்கு!

சுப் :—வாஸ்தவம்தான்! எல்லாம் ஸரியா நடந்து இருந்தா நீங்களே மார்கட்டுக்குப் போயி கறிகாய் வாங்க வேண்டி இருக்குமா? எல்லாத்துக்கும் அதிர்ஷ்டம் வாண்டாமா?

கோபா :—அட, நாராயணா! அந்த விஷயம் உங்களுக்கு வந்ததும் தெரிஞ்சு போச்சா? ஸரி, தள்ளுங்கோ! அதிர்ஷ்டம்னா அல்ப ஸொல்பமா? ஸரி; அது ரொம்ப ஸாவகாசமாய்ப் பேச வேண்டிய விஷயம். இன்னிக்கு ஸாயங்காலம் லீஷரா மீட் பண்ணலாமே, ஏதோ கொஞ்ச நாழி வேடிக்கையா!

சுப் :—ஷேர்ட்டன்லி...எங்கே?

கோபா :—காத்து வாட்டமா ஏரிக்கரைப் பக்கமா வாக் போகலாமே?

சுப் :—அப்படியே செய்வோமே! தாங்க்யூ, தாங்க்யூ! நானும் ஊருக்குப் புதுசு பாருங்கோ. ஒங்களெப் போல ஒத்தரோடெ சேந்து சுத்தினா எனக்கும் யூஸ்ஃபுல் பாருங்கோ. ஸோ, குட் மார்ணிங்.

கோபா :—வாருங்க! நானும் வரேன். இன்னிக்கு நல்ல வேளையா கச்சேரி இல்லே, கொஞ்சம் ஆத்துலெ ரெஸ்ட் எடுத்துக்கலாம். பேஷான வெண்டக்காயும், கொத்தமல்லியும் கிடைச்சுது. லக்ஷணமா பொன் வர்ணமா வதக்கி......

சுப் :—ஸரி, ஸரி! ரொம்ப சொல்லாதிங்க! அப்புறம் எனக்கு வேலே மேலெ ஓடாது...குட் மார்ணிங்.

[642 ஸல்யூட் பண்ணுகிறன். போகிறர்.]

கோபா :—குட் மார்ணிங்! குட் மார்ணிங்! ஏண்டாப்பா கான்ஸ்டெபில்! புது இன்ஸ்பெக்டர் எந்த ஊர்ப் பேர்வழி, தெரியுமா?

642 :—மதராசிலேந்து நேரா வந்து இருக்கறதா சொன்னுங்க ஸார்! ஏதோ ரொம்ப ரகசியமான கேஸ் விஷயமா ஸ்பெஷலா மாத்தி இருக்கறதா சொன்னுங்க ஸார்! அல்லாம் புச்சா இருக்குது. மாயிஷ்டேட் புச்சு......ஏன் ஸார்? அது என்னமா ஸார் அந்த ஆளு ஒங்க கீளே இருந்த வரு.........?

கோபா :—ஸ்! ஸ்! ஸ்! அடே பழிகாரப் பயலே! போரும், பகல்லே பக்கம் பாருன்னு சொல்லிருக்கு. பேச்சை விடாதேடாப்பா. நான் வரே.....ஸ்ரீராமசந்தரா!

[போகிறர்.]

642 :—(கோபாலய்யங்கார் போனபிறகு) பலே கைகாரப் பாப்பான்! என்னமோ பெரிய பள்ளமா வெட்டிக்கினு இருக்கான்! யாருக்கு வெட்ருனே? அதுலெ யார் தான் உளுந்து சாவப் போருங்களோ?.....டேய்! டேய்! பலே போக்கிரி! வாடா இங்கே. எங்கேயோ பாக்காதயே போய்கினு இருக்கியே?

[முத்துசாமி பண்டாரம் வருகிறன்.]

முத் :—அப்படி ஒண்ணும் இல்லேப்பா. உன்னே பாக்காதே போவ முடியுமாப்பா?

642 :—ஸரிதான். சும்மா ஓட்டாதே தெரியுமா? ரொம்ப நாளா தப்பிச்சுக்கினே வரே நீ! ஒருநாள் இல்லெ ஒரு நாள் ஒன்னே மாட்டி உடாக்காட்டி...எம்பேரு 642 இல்லே!

முத் :—நான் தப்பு கிப்பு செஞ்சால்லப்பா ஓங்ககிட்டெ பயப்படனும்! நான் என் பழத்தை வித்துக்கி[illegible] வழியே போயிக்கினு இருக்கச்சே என்னெ என்ன[illegible] நீ செய்ய முடியும்?

642 :—ஓ! அப்படியா? எங்கடா மாமூல்? எடுக்கற[illegible] இல்லையா இப்பொ?

முத் :—அடெ ! சும்மா நிறுத்துயா உன் ஊளே மெரட்டெ. மாமூலாம் மாமூல். காலெயிலெ போணிகூட ஆவலெ, அதுக்குள்ளெ......அதோ, அதோ, பாரு ! இன்ஸ் பெக்டர் கூப்பட்ராரு, போய்யா.

[642 ஓடிப் போகிறன்.]

முத் :—இந்த போலீஸ்காரனுங்கதான் என்ஞ புலிங்க. சீ ! சீ ! சீ ! ஊரே கெட்டுப்போச்சு......வாங்க சாமீ ! வாங்க. காலங்காத்தாலே போணி பண்ணுங்க சாமி. ஓங்க கையாலெ. நல்ல தித்திப்பு சாமி ! சாத்துக்குடி, கமலா, பங்களூர் பாதாமி ; கல்கண்டு கெட்டுதுங்க !

[ராமாசாஸ்திரி காமாசாஸ்திரி பிரவேசிக்கிறர்கள்.]

ராம :—என்ன சாஸ்த்ரளே ! பய பழத்தை வெச்சுண்டு கூபட்ரான்?

காமா :—ஆமா, கூப்பட்ரான். ஆஞ நம்மைக் கூப்பிட்டு என்ன பண்றது ?

ராமா .—இருக்கட்டும். அட பயலே ! பழம் வெலெ எப்படி ?

முத் :—சாமி ! காலங்காத்தாலே போணி பண்ணுங்க. டஜன் 3 ரூபாய்.

ராமா :—டே ! டே ! டே ! நில்லுடா. நாங்க எங்கடா போறது ? என்ன சாஸ்த்ரளே! இந்தப் பழத்தைச் சாப்பிட்டு நமக்குக் கட்டுமா ?

காமா :—தொண்டைதான் கட்டும் ! பாத்தாலே புளிக்கும் போல இருக்கே !

முத் :—சாமீ ! சாமீ ! அதானே வாணும். பழத்தை சாப் பிடாதயே சொல்றிங்களே. இதோ ஒரு பழம் அரிஞ்சு குடுக்கறதுங்களா ?

[ஒரு பழத்தை உரிக்கப் போகிறன்.]

காமாவும் ராமாவும்:—அடே டே டே, நிறுத்துடா நிறுத்து. நீ உரிச்சுக் குடுத்து வேறெ நாங்க சாப்பிடணமா ?

ராமா :—இதோ பாரு, நாங்க இந்த ஊரில்லே.

காமா :—ஆத்தூர்.

ராமா :—இந்த ஊர் புது மேஷ்ட்ரேட்டைப் பார்க்க வந்தோம்.

காமா :—ஏண்டாப்பா, அவர் வீடு எந்தப் பக்கம்?

முத் :—அதோ! நேரா போறு அந்த முட்டுச் சந்து தெரியுதுங்களா?

ராமாவும் காமாவும் :—ஆமா! ஆமா!

முத் :—அது பக்கத்துலெ நாவதாளிப் பொதரு தெரியுதுங்களா?......அது எதிரெ இடிஞ்சுபோன ஊடு தெரியுதுங்களா? அதேதான்.

ராமா :—சாஸ்திரிகளே! எடத்தைப் பாத்தா அவ்வளவா ரஸமாயில்லையெ!

காமா :—இந்தப் பய பழத்துலெ இருக்கற ரஸம் போலத் தான் இருக்கு,—சுத்த சூன்யமாய்!

முத் :—சாமீ! சாமீ!

ராமா :—ஸரிதாண்டா! சும்மா கொலேக்காதே! இந்தா! ரெண்டு பழம் கொடு. மேஷ்ட்ரேட் ஐயரைப் போய்ப் பார்க்கணம். பெரிய எடத்துக்குப் போகச்சே வெறும் கையோட போகப்படாது. நல்லதா ரெண்டு பழம்.

முத்து :—போறு போவுது சாமி! ரெண்டு பழத்துக்கு ஆறணு. எடு.

ராமா :—ஆறு அணுவா?

காமா :—அரை அணுவா?

முத் :—ஏஞ்சாமி? சும்மா தான் வாங்கிக்கோ!

ராமா :—ஸாஸ்த்ரரே! இந்தப் பய வாய்க்கு என்ன போடலாம்?

காமா :—நல்ல மொதல் தரமான சீனிச் சக்கரை!

முத் :—சாமி! நீங்க சக்கரையும் போடவாணும், வாக்கரிசியும் போடவாணும். துட்டெ எடுங்க சாமி!

ராமா :—அடெ, உன்னண்டெ உள்ளத்தைச் சொல்லிட்ரோம்.

காமா :—எங்ககிட்டெ காலணு கிடையாது.

மூத் :—எம் பழம் சும்மா வருமா ?

ராமா :—அடே ! காலங்காத்தாலே பிராமணுளுக்கு ரெண்டு பழம் சும்மா குடுத்தா ரொம்ப புண்யம் உண்டு ஒனக்கு.

மூத் :—ஏன் சாமி, சும்மா அளக்கறிங்க ?

ராமா :—இருடா ! ஸாஸ்த்ரளே ! அவன் சொல்ரது வாஸ்தவம் தானே. அவனண்டெயிருந்து நல்ல பழங்களா வாங்கி அவனெ நஷ்டப் படுத்துவானே. நான் சொல்ரது என்னுன்னு......

காமா :—தெரியரது.

ராமா :—தண்டத்துக்குத் தொலைக்கப் போறதுதானே.

காமா :—தெரியறதுன்னேன்.

ராமா :—கொஞ்சம் பிஞ்தின ரகமாகவே இருந்தா தான் என்ன கெட்டுப் போச்சு ?

காமா :—கொஞ்சம் அழுகி.

ராமா :—அழுங்கி.

காமா :—அதுங்கி.

ராமா :—இருந்தாத்தான் இருந்துட்டுப் போகட்டுமே.

மூத் :—சாமி ! சாமி ! அப்படி யெல்லாம் சொல்லாதிங்க.

ராமா :—புளிப்புப் பழத்தைக் கொண்டு குடுத்தா மனுஷன் வேட்டிடை நாயாட்டமா மேலே விழுந்தா ?

காமா :—போற காரியம் கெட்டுப் பூடுமே ...!

ராமா :—அடே, பழக்காரா ! திதிப்பா 2 பழம் கொஞ்சம் அப்படி இப்படி இருந்தாக் கூட தேவலை. சும்மா கொடேண்டா !

மூத் :—அடெ? சும்மா, நிறுத்துங்க சாமி ! ரொம்ப பேரம் பண்ரவங்களாட்டம் வந்துட்டிங்க. பாபார .ஜாதி கெட்டது எல்லாம் ஒங்களெப் போலவங்களாலெ [illegible]ான் !

[illegible] :—சீ, [illegible]ாயே ! வாயெ மூடு.

முத் :—ஒங்க வூட்டு நாயிக்குக் கையும் காலும் மொளச்சுப் பழமும் தலையுமா இருக்குமா ?

காமா :—இல்லெ, வாயும் பல்லுமா இருக்கும் ! இந்தப் பயலோட நமக்கென்ன ? போகட்டுமே ! ரெண்டு எலிமிச்சம்பழம் வாங்கிட்டுப் போறது.

ராமா :—அதையும் விடமாட்டான் அந்தப் பரம அல்பன். அத்தைக்கூட உடனே நறுக்கி ஊறுகாய் போட்டுடுவா அவன் ஆமிண்டயாள் : மஹா பன்னாடைகள் !

முத் :—அட பாவிங்களா ! புது மாயிஷ்டேட் ஐயாவையா இப்படியெல்லாம் சொல்றிங்க ? வாங்க ! வாங்க !

ராமா :—வாயெ மூடு ! அயோக்யா !

முத் :—சும்மா பேசாதிங்கய்யா. காலங்காத்தாலெ மூதேவிங்களாட்டம் வந்து என் பொழப்பெக் கெடுத்துட்டு... மூஞ்சியெப் பாரு !

[642 பிரவேசிக்கிறன்.]

642 :—டேய் ! நல்லா மாட்டிக்கினே. வா ஸ்டேஷனுக்கு. சாமீ ! நீங்களும் வாங்க.

ராமா :—நாங்க எதுக்காக ?

642 :—நீங்கதான் சாக்ஷிங்க சாமி ! வாங்க. என்ன சொல்வணம்னு சொல்லித்தாரேன். இவனுக்கு, ஒரு ரெண்டு வாரமாவது மண்ணுக்குப் போடாக்காட்டி !

முத் :—அட பாவிங்களா ! நீங்க நல்லா இருப்பீங்களா ? ஐயோ ! ஐயோ !

[வாயில் அடித்துக் கொள்கிறன்.]

642 :—(அவனை அடிக்கிறன்.) மரியதையா வா. இல்லாட்டி இன்னும் ஒதை வுழும். வாங்க சாமீ ! நழுவாதிங்க ! தப்பு ஸாக்ஷி சொன்ன உங்களுக்குக் கூட ஜெயில் தான் !

[ராமா சாஸ்திரியும், காமா சாஸ்திரியும் முழித்து முழித்துப் பார்த்துக் கொண்டே கூடப் போகிறர்கள்.]

Printed at the Indian Express Press, Mount Road, Madras.